லக்கு முதலியன வடமலையப்பரால் நன்கொடை வழங்கப் பெற்றது.

பாநயம்

சிறைவிடு அந்தாதியைப் பாடிய குருகையூர் வைணவப் புலவர் பல நூல்களினும் வல்லவரென்பது அவருடைய பாக்களால் நன்கு விளங்குகின்றது. பாக்கள் இழுமென்னும் ஓசையோடு இனிமையாக இயங்கும் இயல்பமையப் பெற்றது. பொருள் பெரும்பாலும் வெளிப்படையாக அமையப்பெற்றது. ஓதுவார் உள்ளத்தை இந்தச் சிறைவிடு அந்தாதி உருக்கும் பெற்றியுடையதென்பதற்குச் சிறிதும் ஐயமில்லை.

"சிறுமை எய்தினும் தீவினை எய்தினும் சிறியேன்
வறுமை எய்தினும் வாழினும் மறப்பனோ மலர்த்தாள்
உறுபெ ரும்பொருள் உணர்தரும்ஓங் காரஉள் ஒளியே
அறுமு கப்பெருங் கடவுளே அமரர்நா யகனே."

"பரமா கியநின் பதபங் கயநின்(று)
இரவா தகழ்ந் தனன்இத் தனைநாள்
அரவா பரணன் தருமா றுமுகா
கரமா றிருதோள் தருகான் முளையே."

செல்வமும் சிறப்பும் மனைவியும் மகவும் நிதியமும் தீதிலா நலனும்
கல்வியும் கவினும் என்பதற்குனது கருணையின் அன்றிமற் றுளதோ?
வல்வினைச் சிறியேன் அறிந்தவா றுனது மலரடி வழுத்துதற் கிரங்கிப்
புல்வினை அறுத்த செந்தில்வாழ் குமரா! புரந்தருள் அத்தனே! அபயம்.

என்பன அந்நூலின் சில செய்யுட்களாகும்.

## ௯. பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்

*தோற்றம்*

அழகிய மணவாளதாசர், திவ்யகவி, இரங்கநாததாசர் முதலிய சிறப்புப் பெயர்களைப்பெற்ற பிள்ளைப்பெருமாள் ஐயங்கார், எழுநூறு ஆண்டுகளுக்குமுன்பு சோழவள நாட்டிலே திருமங்கை என்னும் ஊரிலே தோன்றினார். ஐயங்கார் தென்கலை வைணவர் என்பர். இவர் இளமைக் காலத்தில் தென்மொழி இலக்கண இலக்கிய நூல்களையும் வடமொழியையும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தார். கல்வி யறிவுக்குத் தக்கவாறு அடக்கம் ஒழுக்கம் முதலியவை களையும் மேற்கொண்டு விளங்கினார். திருவரங்கத் திருக் கோயிலிலே எழுந்தருளிய திருமாலிடத்தே பெருமால் கொண்டு விளங்கிய ஐயங்காரின் பெருமை திக்குகள் தோறும் எட்டியது.

*அரசியல் அலுவல்*

அந்நாளில் அரசியல் நடத்திக்கொண்டிருந்த அரசன் ஒருவன் ஐயங்காருடைய பெருமைகளையெல்லாம் அறிந் தான். அவரைத் தனது அரசாங்க அலுவலில் அமர்த்த எண்ணினன் தகுந்த வேலை ஒன்றைக்கொடுத்து ஆதரித் தான். ஐயங்கார் அரசியலில் ஈடுபட்டிருந்தும் திருமா லிடத்துக்கொண்ட அன்பிலே சிறிதுங் குறையாதவராய் விளங்கினார்.

*வியத்தகு நிகழ்ச்சி*

ஒருநாள் ஐயங்கார் மற்றவர்களுடன் அரசியல் அலு வல்களைப் பார்த்துக்கொண்டிருந்தார். உட்கார்ந்திருந்தவர் திடீரென்று எழுந்தார். மேலாடையை எடுத்து இரண்டு கைகளாலும், "கிருட்டிண கிருட்டிண" என்றுகூறிக் கொண்டே தேய்த்தார். ஐயங்காரின் செயல் அங்கிருந்த

வர்கட்கு ஒன்றும் விளங்கவில்லை. அவர்கள் ஐயங்காரைப் பார்த்து, அவ்வாறு செய்யக் காரணம் யாது என்று உசாவினர். ஐயங்கார் மற்றவர்களைப் பார்த்து, "திருவரங்கம் பெரிய கோயிலில் திருவிழா நடைபெறுகிறது. நம் பெருமான் திருத்தேரில் எழுந்தருளியுள்ளார். தேர் தெருவில் சென்றுகொண்டிருக்கிறது. தேருக்கு அண்மையில் பிடித்துக்கொண்டு செல்லப்பட்ட தீவட்டியின் சுடர் தேர்த்திரையில் பிடித்துக்கொண்டது. அதனைத் தேய்த்து அணைத்தேன்," என்று கூறினார்.

ஐயங்காரின் பதில் மற்றவர்களுக்கு வியப்பையும் திகைப்பையும் அளித்தது. அவர்கள் ஐயங்காரைப் பார்த்து, "அச்செய்தி உமக்கு எப்படித் தெரிந்தது?" என்று கூறி நகைத்தார்கள். மேலும் அவர்கள் "இவருக்கு ஏதோ திகைப்பு உண்டாகியிருக்கிறது. இத்தகைய திகைப்பும் மருட்சியும் அரசியல் அலுவலுக்கு இடையூறாகுமே," என்று ஐயங்காரிடத்தில் இரக்கங் கொண்டார்கள். நடந்த செய்தியை அரசனுக்குத் தெரியப்படுத்தினார்கள்.

திருவரங்கத்தில் தேர்ச்சீலையில் தீப்பற்றியதைக் கண்டவுடன் அண்மையில் நின்ற பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் கைகளால் திரையைத் தேய்த்துத் தீயை அணைத்ததை அருச்சகர் முதலியோர் கண்டனர். குற்றநீக்கத்தின்பொருட்டுச் செய்யவேண்டிய சாந்திகளைச்செய்து தேர்த்திருவிழாவை நடத்தி முடித்தார்கள். இவ்வரலாறும் அரசனுடைய காதுகட்கு எட்டியது. அரசன் வியப்பு அடைந்தான். ஐயங்காரைப் பார்த்து, "தேர்த் திருவிழாவுக்கு எவ்வாறு ஏகினீர்?" என்று உசாவினான். "எனக்கு உள்ளத்து எண்ணப்போக்கே தவிரக் கோயிலுக்கு நேரே சென்றதில்லை," என்றார் ஐயங்கார். "தேர்த்

திருவிழா அன்று நீர் அங்கிருந்ததாகப் பலரும் கூறுகிறார்களே," என்று அரசன் கேட்டான். "கிருட்டிண கிருட்டிண," என்று கூறி மேலாடையைத் தேய்த்ததைப் பார்த்திருந்தவர்கள் மீண்டும் அச் செய்தியைக் கூறினார்கள். முன்பு கூறிய செய்தியை ஒருபொருட்படுத்தாமல் இருந்த அரசன் இப்பொழுது பெருவியப்புக் கொண்டான்.

அன்றிரவு அரசன் உறங்கிக்கொண்டிருந்தபோது, தானும் ஐயங்காரும் திருவரங்கப்பெருமாள் கோயிலுக்குச் சென்றதாகவும், ஐயங்கார் அவ்விடமே தங்கிவிடத் தான்மட்டும் திரும்பிவந்ததாகவும் கனாக்கண்டான்.

திருக்கோயில் வாழ்க்கை

மறுநாள் மன்னன் ஐயங்காரைத் தருவித்தான். அவரைப் பார்த்து, "தாங்கள் திருமால் இடத்திலே பேரன்புகொண்ட பெரியோராக இருக்கின்றீர்கள்; தங்களை நான் ஊழியம்புரிதற்கு வைத்திருத்தல் தகுதியாகமாட்டாது. அடியேன் இதுவரையில் தேவரீருடைய பெருமைகளையெல்லாம் அறியாது செய்த குற்றங்களைப் பொறுத்து அடியேன் செய்யவேண்டிய பணிவிடைகளைக் கட்டளையிட்டருளவேண்டும்," என்று வேண்டிக்கொண்டான். ஐயங்கார் அரசனைப் பார்த்துப், "பெரிய கோயிலில் நிலையாகத் தங்கியிருத்தற்கு ஏற்பாடுசெய்யவேண்டும்" என்று தெரியப்படுத்தினார். கோயிலில் இருப்பிடமும் பெருமாள் வழிபாட்டுணவும் கிடைத்தற்கு ஏற்பாடுசெய்து அரசன் அவரை அனுப்பிவிட்டான்.

ஐயங்கார் திருவரங்கம் பெரியகோயிலில் நிலைபெற்றுத் திருவரங்கத்தந்தாதி, திருவரங்கத்துமாலை, திருவரங்கக் கலம்பகம், சீரங்கநாயகியார் ஊசல் முதலிய நூல்களைப் பாடிக்கொண்டு இனிது தங்கியிருந்தார்.

திருவேங்கடத்து நூல்கள்

ஐயங்கார் திருவரங்கம் திருக்கோயிலில் எழுந்தருளிய பெருமாளை அன்றி வேறு இடங்களில் எழுந்தருளிய பெருமாளைக்கூடப் பாடுவதில்லை என்று உறுதிபூண்டிருந்தார். திருவேங்கடத்தில் எழுந்தருளிய வேங்கடாசலப் பெருமான் பிள்ளைப்பெருமாள் ஐயங்காரால் புகழ்நூல்கள் பெறுதற்கு எண்ணினார். தமது உண்மை வடிவத்துடன் ஐயங்காருடைய கனவிலே தோன்றி, "வேங்கடத்தின் மேல் சில நூல்கள் பாடுவாயாக!" என்று கட்டளையிட்டருளினார். ஐயங்கார் திருவேங்கடமுடையானது கட்டளைக்குப் பணியவில்லை. திருவேங்கடமலையில் குரங்குகள் மிகுதியாக உண்டு. ஆதலால், அந்த மலையை "மந்தி பாய்வட வேங்கட மாமலை" "வானரமும் வேடுமுடை வேங்கடம்" என்று புலவர் பாடுவதுண்டு. குரங்குகளோடுறையும் அப்பெருமானது கட்டளையை மதிக்காமற்போனதும் அன்றி, அப்பெருமானையும் குரங்காகவே மதித்து, "அரங்கனைப் பாடிய வாயால் குரங்கனைப் பாடேன்" என்று இகழ்ந்துரைத்தார். ஐயங்காருக்கு உள்ள மாறுபாட்டுணர்ச்சியைப்போக்குதற்குத் திருவேங்கடநாதன் எண்ணினார். கண்டமாலை என்னும் கொடிய நோய் இவருக்கு உண்டாகுமாறு செய்தார். அந்நோய் ஐயங்காரைப் பிடித்து மிகுதியும் வருத்தியது. தமக்கு அந்நோய் வருதற்குக் காரணத்தை ஐயங்கார் அறிந்தார். தமது தவற்றினை உணர்ந்தார். திருவேங்கடமாலை, திருவேங்கடத்தந்தாதி என்னும் நூல்களைப் பாடினார். கண்டமாலை காணுமாலையாகப் போய்விட்டது. பிறகு அழகரந்தாதி நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி முதலிய நூல்களைப் பாடினார்.

ஐயங்காரும் சைவர்களும்

பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் கல்வியறிவிற் சிறந்தவராகவும், அருமையான செய்யுட்கள் பாடுபவராகவும்

இளங்குவதைத் திருவானைக்காவில் வாழ்ந்திருந்த சைவர்கள் நன்கு உணர்ந்திருந்தமையின் ஐயங்காரைக்கொண்டு சிவபெருமான்மீது நூல்கள் பாடச்செய்யவேண்டும் என்று எண்ணினார்கள். தமது எண்ணத்தை ஐயங்காருக்குத் தெரியப்படுத்தினார்கள். சிவபெருமானைப் பாடுவதற்கு ஐயங்கார் இணங்கவில்லை. சைவர்கள் தங்களுடைய எண்ணத்தை எவ்வாறேனும் நிறைவேற்றிக்கொள்ளுதல்வேண்டும் என்று முடிவுசெய்து அதற்கேற்ற சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

பெருமாள் கோயிலின் திருப்பள்ளியெழுச்சிப் பசு ஒன்று ஒருநாள் திருவானைக்காவைச் சேர்ந்த நிலம் ஒன்றில் மேய்ந்துகொண்டிருந்தது. காலையில் திருக்காப்பு நீக்கப்படும்போது எதிரே கொண்டுபோகவேண்டிய பொருள்களில் அந்த ஆவும் ஒன்று. ஆனைக்காச் சைவர்கள் ஆ வந்து மேய்தலைக் கண்டார்கள். அதனைக்கொண்டு தாங்கள் எண்ணியுள்ள எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று முடிவுசெய்தார்கள். ஆனைப் பிடித்துக்கொண்டுபோய் ஆனைக்காவில் கட்டிவைத்தார்கள். திருப்பள்ளியெழுச்சிப் பசு ஆனைக்காவில் அகப்பட்டுக்கொண்ட செய்தி அரங்கனடியவர்கட்குத் தெரிந்தது. அவர்கள் இதற்கு யாது செய்யலாம் என்று எண்ணினார்கள். ஆவைப் பிடித்துவைத்திருக்குஞ் சைவர்கள்பாற் சென்று அதனை விட்டுவிடவேண்டும் என்று வேண்டிக்கொண்டார்கள். அதற்குச் சைவர்கள், "உங்கள் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் வந்து கேட்டால் தருகிறோம்," என்று சொன்னார்கள். அரங்கனடியவர்கள் இச்செய்தியை ஐயங்காருக்குத் தெரியப்படுத்தினர். அதற்கு ஐயங்கார், "ஆனைதரத்தி வரினும் நான் ஆனைக்காவுள் நுழையேன்," என்று சொன்னார். பிறகு மறுநாள் திருப்பள்ளியெழுச்சிக்குப்

பசு இன்றியமையாதிருப்பதை எண்ணி ஆனைக்காச் சைவர்களையும் ஓரிடத்திற்கு அழைத்துக்கொண்டுவரச் சொன்னார். ஆனைக்காச் சைவர்கள் செய்தியை அறிந்தார்கள். எவ்வாறேனும் செய்யுள் பெறுதல்வேண்டும் என்னும் எண்ணத்துடன் ஐயங்கார் குறிப்பிட்ட இடத்திற்கு ஆவுடன் வந்தார்கள்.

பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் சைவர்களைப் பார்த்து, "எங்கள் திருக்கோயில் ஆவை விட்டுவிடுங்கள்," என்று கூறினார். ஆனைக்காச் சைவர்கள் ஐயங்காரைப் பார்த்துத் "தங்கள் திருவாக்கினால் எங்கள் சிவபெருமான்மீது ஒரு செய்யுள் பாடுதல்வேண்டும்; அவ்வாறு பாடினால் ஆவை விட்டுவிடுகிறோம்," என்று கூறினார்கள். ஐயங்கார் சைவர்களைப் பார்த்து, "உங்கள் விருப்பப்படியே பாடுகிறோம்; முதலில் ஆவை விட்டுவிடுங்கள். திருப்பள்ளி எழுச்சி வழிபாட்டிற்குக் காலக்கழிவாகிறது," என்று கூறினார். "பாடுவது உண்மையானால் இரண்டொரு சீராவது பாடுங்கள்; ஆவை விட்டுவிடுகிறோம்," என்றார்கள் சைவர்கள். உடனே ஐயங்கார், "மங்கை பாகன்" என்று இரண்டு சொற்களைச் சேர்த்துக் கூறினார். சைவர்கள் உடனே ஆவை விட்டுவிட்டார்கள். உடனே அரங்கன் அடியார்கள் ஆவைக் கைப்பற்றிக்கொண்டார்கள். ஐயங்கார் தாம் கூறிய சீரைப் பாடத் தொடங்கி,

"மங்கைபாகன் சடையில்வைத்த கங்கையார் பதத்துநீர்
வனசம்மேவும் முனிவனுக்கு மைந்தனான தில்லையோ
செங்கையால் இரந்தவன் கபாலமா ரகற்றினார்
செய்யதாளின் மலரரன் சிரத்தி லான தில்லையோ
வெங்கண்வேழம் மூலம்என்ன வந்ததுங்கள் தேவனோ
வீறுவாணன் அமரில்அன்று விறலழிந்த தில்லையோ
அங்கண்ஞாலம் உண்டபோது வெள்ளிவெற் பகன்றதோ
ஆதலால் அரங்கன்அன்றி வேறுதெய்வம் இல்லையே"

என்று கூறிப் பாட்டை முடித்தார். ஆனைக்காச் சைவர்கட்கும் ஐயங்காருக்கும் சொற்போர் மூண்டது. ஐயங்கார் தமது விடைகளை வெண்பாவினாற் கூறினார். சைவர்கள் தோல்வியுற்றுத் தத்தம் இருப்பிடங்களுக்குச் சென்றார்கள். அப்பொழுது ஐயங்கார் கூறிய பாடல்களில் சில,

"தேனேந்து தாமரை வாவியு ளானை கராவி னயர்ந்(து)
ஊனேந்தி மூலமென் றோதிய நாட்சென் றுதவுகையால்
தேனேந்து சோலை அரங்கன் அல் லால்தெய்வம் இல்லையென்றே
மானேந்து கையன் மழுவேந்தி னன் இந்த மாநிலத்தே"

"மத்தக் கரியைக் கராப்பற்றி நின்றதோர் வாவியுள்ளே
சித்தந் தெளிந்து முறையிடும் போது செழுந்துளவக்
கொத்துக் கிளர்முடிக் கோவிந்த என்றது கூப்பிட்டதோ
செத்துக் கிடந்தன வோகெடு வீர்உங்கள் தெய்வங்களே"

என்பனவாம்.

நிறுத்தேர் ஓட்டுதல்

ஒருமுறை தேர்த்திருவிழா நடைபெறத் தொடங்கியது. எவ்வளவோபேர் கூடித் தேரையிழுத்தும் தேர் அசையவில்லை. சிலர் பக்கத்தில் நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஐயங்கார் வடம் பிடிப்பதற்கு ஆள் திரட்டுவாராய்,

"ஒன்றும் அறியாத ஊமர்காள் தென்னரங்கர்
இன்று திருத்தேரில் ஏறினார்—நின்று
வடம்பிடிக்க வாருங்கள் வைகுந்த நாட்டில்
இடம்பிடிக்க வேண்டுமென்றக் கால்"

என்னும் செய்யுளைப் பாடினார்.

இறுதி யெய்துதல்

ஐயங்கார் தமக்கு இறப்பு பசுவினால் ஏற்படும் என்று கூறியிருந்தார். ஒருநாள் அரங்கநாதர் திருக்கோயில் முன்

நின்று வழிபாடு செய்துகொண்டிருந்தபோது ஆங்கு வந்த ஒரு நொண்டிப்பசு ஐயங்காரை முட்டித் தள்ளிக்கொண்டு தானும் ஐயங்கார்மீது விழுந்தது. அகவை எழுபதாகி முதியராக இருந்த ஐயங்கார் அதனால் மிக நொந்து,

"நாச் சொல்லுஞ்சொற் போச்சே
அளவில் நெடுமூச்சும் ஆச்சே—முளரிக்
கரங்கால் குளிர்ந்ததே கண்ணும்பஞ் சாச்சே
இரங்காய் அரங்கா இனி"

என்று கூறிக்கொண்டே வைகுண்டபதவியை அடைந்தார்.

## ரு. வீரபாண்டியப் புலவர்

### தோற்றமும் கல்வியறிவும்

பாண்டிநாட்டிலே உள்ள தூத்துக்குடி திருமந்திர நகர் என்றும் கூறப்பெறும். அவ்வூரிலே பாணர் குலத்தில் வீரபாண்டியப்புலவர் தோன்றினார். இளமைப்பருவத்திலேயே கல்வியை ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தார். அறிவுக் கழகு அருளினைப்பெறுதலே என்னும் எண்ணம் அவர் உள்ளத்தில் எழுந்தது. பெரியார் ஒருவரை யடுத்து ஆறெழுத்து மறையை முறையுடன் பெற்றுக்கொண்டு அதனை உருவேற்றினார். முருகக்கடவுளின் திருவருள் வீரபாண்டியப் புலவருக்கு உண்டாவதாயிற்று. இறைவி மீது பிள்ளைத்தமிழ் முதலிய நூல்கள் பலவற்றைப் பாடினார். அவருடைய வாக்குப் பலிதவாக்காக விளங்கியது. தமக்கு எச்செயல் முடியவேண்டியதாக இருப்பினும் அவற்றைச் செய்யுள்வன்மையினாலேயே முடித்துக்கொண்டார். நல்லொழுக்கத்திற் சிறந்து விளங்கிய புலவரின்புகழ் எல்லாத் திக்குகளினும் பரவியது.

வியத்தகு செயல்கள்

புலவரின் செய்யுட்கள் எச்செயல்களையும் நிகழ்த்தும் ஆற்றலுடையனவாக விளங்குதலைக்கண்ட சிலர் அவரால் புதுமை நிகழ்ச்சிகள் சிலவற்றைப் பார்ப்பதற்கு விரும்பினர்கள். ஒருவர் தூத்துக்குடிக்கோயில் ஒன்றில் கட்டப்பட்டிருந்த ஒருபெரிய மணியின் நா அறுந்துவிழுமாறு செய்யுள் ஒன்று பாடவேண்டும் என்று வேண்டினர். வீரபாண்டியப்புலவர் அவ்வாறே செய்து தமது திறமையைக் காட்டினர். அந்நிகழ்ச்சியைக் கண்டவர்கள் புலவரிடம் அச்சமும் அன்பும் கொண்டார்கள.

ஒருமுறை வீரபாண்டியப்புலவரின் தந்தையார் இறந்த நாட்கடன் வந்தது. அவர் அதனைச் செய்தற்பொருட்டு அதற்குவேண்டிய பொருள்களையெல்லாம் தொகுத்தார். மாந்தோட்டக்காரன் மாங்காய் தந்தான். வாழைத்தோட்டக்காரன் வாழைக்காய் வாழையிலை வாழைப்பழம் முதலியன தந்தான். தேங்காய் வேண்டியதாக இருந்தது. தென்னஞ்சோலைக்குச் சென்றர் ; தோப்புக்காரனைக் கண்டார். "தந்தையார்க்கு நாட்கடன் வந்துள்ளது, இரண்டு மூன்று தேங்காய்கள் கொடு," என்று கேட்டார். புலவரின் ஆற்றலை உணர்ந்திருக்கும் தோட்டக்காரன் அப்பொழுது அவரிடம் புதுமை நிகழ்ச்சியைக் காண விரும்பினன். புலவரைப்பார்த்து, "உங்களுக்குத்தான் எல்லாக் காரியங்களும் பாட்டினல் நடைபெறுமே, பாட்டுப்பாடி வேண்டிய தேங்காய்களைப் பறித்துக்கொண்டு போங்களேன்," என்று கூறினன். அவ்வளவில் புலவர்,

"மாங்காய் தந்தீர் வெற்றிலை தந்தீர் வாழைப்பழந் தந்தீர்
தேங்காய் நெற்றுந் தந்திடவேண்டும் செந்தூர் முருகோனே"

என்று பாட்டைத் தொடங்கினார். அவ்வளவில் கணக்கற்ற தேங்காய்நெற்றுகள் உதிர்ந்தன. புலவர் தமக்கு வேண்டிய அளவு பொறுக்கிக்கொண்டு சென்றார்.

ஒருமுறை புலவர் திருச்செந்தூருக்குப் புறப்பட்டுச் சென்றார். தாமிரபருணியாற்றிலே நீர்ப்பெருக்கு மிகுதியாகச் சென்றுகொண்டிருந்தது. அதனைக் கடந்து செல்லுதற்குத் தோணி முதலியன அகப்படவில்லை. ஆற்றுநீர் பிரிந்து வழிவிடுமாறு செய்யுள் ஒன்று இயற்றினார். அவ்வாறே ஆற்றுநீரும் பிரிந்து வழிவிட்டது.

புளியங்கொப்பு ஒடிதல்

வீரபாண்டியப்புலவர் காலத்தில் மாவட்டத் தலைமை அதிகாரியாக இருந்த முகமதியன் ஒருவன் ஒருசமயம் ஆற்றூர் என்னும் ஊருக்குவந்தான். மிகப் பெரியதாக வளர்ந்திருந்த புளியமரம் ஒன்றின்கீழ் கூடாரம் இட்டுத் தங்கியிருந்தான். அவ்வதிகாரி தன்மதிப்பு மிகவும் உடையவன். அளவற்ற ஆணவம் உடையவன். பொன் மோதிரம் முதலியவைகளை அணிந்து தன் செல்வச் சிறப்பைப் பலருக்கும் புலப்படுத்துபவன். அக்காலத்தில் இத்தகைய அதிகாரிகளைக்கண்டால் மக்கள் நமனைக்கண்டது போல அஞ்சி நடுநடுங்குவர். வீரபாண்டியப் புலவர் அந்த அதிகாரி தங்கியிருந்த இடத்திற்குச் சென்றார். அவ்வதிகாரியை ஓர் அணுவளவேனும் பொருட்படுத்தவில்லை. அங்கு இருந்த ஓர் இருக்கையில் வீறுடன் ஏறியமர்ந்தார். இவரதுசெயலை அவ்வதிகாரி வியப்புடன் பார்த்துக்கொண்டிருந்தான். புலவர் அந்த அதிகாரியைப்பார்த்து, "நான் முருகக்கடவுளுடைய திருவருளை நன்கு பெற்றுள்ளேன். நீர் என்னை நன்கு பாராட்டித் தகுந்த பரிசில் வழங்க வேண்டும்," என்று பெருமிதத்துடன் கூறினார். புலவர்

புகன்ற மாற்றங்களைக்கேட்ட அதிகாரி மிகுந்த இறும்பூதடைந்தான். அவன் புலவரைப்பார்த்து, "நீவிர் கடவுளுடைய திருவருளைப் பெற்றிருப்பது உண்மையானால் இந்தப் புளியமரத்தில் உள்ள கிளைகளில் ஒன்று முறிந்து விழுமாறு ஒரு செய்யுள் பாடுதல்வேண்டும். பாட்டின்படி கிளை முறிந்து விழுந்திடுமானால் நாம் உம்மைப் பணிந்து போற்றுவதுடன் என் விலை உயர்ந்த அணிகலன்களையும் உமக்குத் தருகிறேன். அவ்வாறு நிகழவில்லையானால் நான் நினைத்தவாறு உம்மை ஒறுப்பேன்," என்று தன்னைச் சூழ்ந்துள்ளவர்கள் யாவரும அஞ்சுமாறு கூறினான். புலவர் அதிகாரியைப்பார்த்து, "அவ்வாறே செய்கிறேன்; நீர் விரும்புகிற கிளையில் விரும்புகிற இடத்தில் சுண்ணாம்பினாலே முறிந்து விழவேண்டிய அளவுக்கு வளைக்குறி இடுமாறு செய்க. இல்லாவிட்டால் ஏதேனும் சூழ்ச்சியாக இருக்கலாம் என்று ஐயப்படுவீர்," என்று கூறினார்.

உடனே அதிகாரி தான் விரும்பிய கிளையில் விரும்பிய இடத்தில் ஓராளைக்கொண்டு சுண்ணக்குறி யிடச்செய்தான். பிறகு புலவரைப்பார்த்துக், "குறியிட்டிருக்கிற இடத்திலிருந்து கிளை முறிந்துவிழுமாறு செய்யும்; விரைவில் ஆகட்டும்," என்று கட்டளையிட்டான். உடனே புலவர்,

"எப்படியுஞ் செந்தூர்க் கிறையவா இப்புளியங்
கொப்பொடிய வேண்டும் குருபரா—செப்பனைய
கொங்கைக் குறத்தி கொழுநாநந் தெய்வானை
மங்கைக் கிசைந்தகண வா"

என்று ஒரு செய்யுளைப் பாடினார். பாட்டு முடிந்தது. சுண்ணக்குறியிட்ட இடத்தில் கிளை குறியிட்டபடியே முறிந்து விழுந்தது. இந்நிகழ்ச்சியை அவ்வதிகாரி கண்டு அஞ்சி நடுங்கினான். எழுந்து வீரபாண்டியப் புலவருடைய அடிகளிலே விழுந்து வணங்கினான். "என்னிடத்திலே

சினங்கொண்டு எனக்கு எத்தகைய தீங்கையும் செய்து விடாதீர். நான் ஆணவத்துடன் உம்மிடம் பேசியதற்காகவும் நடந்துகொண்டதற்காகவும் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறேன்," என்று கூறி வேண்டினன். வீரபாண்டியப்புலவர் அதிகாரியைப்பார்த்து, "நான் உமக்கு யாதுந் தீமைபுரியேன்," என்று உறுதிமொழி கூறினர். அதிகாரி மகிழ்ச்சிகொண்டான். தான் முன்னங் கூறியபடி தான் அணிந்திருந்த மோதிரம் முதலிய இரண்டாயிர ரூபா மதிப்புள்ள நகையைப் புலவருக்கு அன்புடன் வழங்கினன். புலவரைப்பார்த்து, "மேலும் உங்களுக்கு ஆகவேண்டியவைகளையெல்லாம் அடிக்கடி எனக்குத் தெரியப்படுத்துங்கள்; அவைகளையெல்லாம் நான் நிறைவேற்றுவேன்," என்று கூறினன். "என் எண்ணங்களை நிறைவேற்றுதற்குச் செவ்வேட்கடவுள் உள்ளார். நீர் கூறியவாறு இப்போது இவைகளையெல்லாம் தந்ததே போதும்," என்று கூறிப் புலவர் தம்மிடத்திற்குத் திரும்பினர்.

வீரவாகுதேவர்

வீரபாண்டியப் புலவருக்கு ஒருமகள் இருந்தாள். அவளைப் புலவர் தம்முடைய தங்கையின் மகனுக்குத் திருமணஞ் செய்துகொடுத்தார். அந்த மணமகன் பொருள்தேடுதலின் பொருட்டுச் சிங்கள நாட்டிற்குச் சென்றான். ஆண்டுகள் பலவாகியும் மருமகன் திரும்பிவந்திலன். அவன் நெடுங் காலமாகியும் திரும்பிவராத செயல் எல்லோருக்கும் மிகுந்த துன்பத்தை உண்டாக்கியது. வீரபாண்டியப் புலவரும் உள்ளம் வெதும்பி முருகனை வழிப்பட்டார்.

"வேலுக்குஞ் சொல்லி மயிலுக்குஞ் சொல்லிநின் வீரகண்டைக்
காலுக்குஞ் சொல்லி அவயமிட் டேன்நின் கருங்குறப்பெண்
பாலுக்குஞ் சொல்லி அழுதவிட் டேன்முகம் பார்க்கந்தனே
மாலுக்குச் சொல்லிய மால்யானை போல மகிழ்வதற்கே."

னென்று செய்யுள் ஒன்று பாடினார். அப்போது "கூடிய விரைவில் நின் மருகன் வந்து சேருமாறு வீரவாகுவைக் கொண்டு செய்விப்போம்," என்று ஒருவானொலி எழுந்தது. புலவர் ஊரையடைந்து துன்பம் ஒழிந்திருந்தார்.

ஒருநாள் வீரன் ஒருவன், வீரபாண்டியப்புலவர் வீட்டில் இல்லாத சமயத்தில் அவருடைய வீட்டிற்கு வந்தான். "நான் உன் மருமகனை அழைத்துவரும்பொருட்டுச் செல்ல வேண்டும்; தயிர்க்கட்டுச்சோறு கட்டித் தா," என்று அவருடைய மனைவியிடத்திற் கூறிக் கட்டுச்சோறு பெற்றுச்சென்றான். புலவர் வீட்டிற்கு வந்தபோது புலவர் மனைவி நிகழ்ந்ததைக் கூறினாள். வந்த வீரன் வீரவாகு தேவராகவே இருக்கவேண்டும் என்று எண்ணிப் புலவர் தம் மனைவியைப் பெரிதும் புகழ்ந்தார். அவளுக்குக் கிடைத்த பேறு தமக்குக் கிடைக்கவில்லையே என்று உள்ளம் வருந்தினார். அன்று தானே அவருடைய மருமகனும் வந்து சேர்ந்தான். புலவரும் அவருடைய உறவினரும் மிகுந்த மகிழ்ச்சியடைந்தனர்.

வீரபாண்டியப்புலவர் மேலும் பல வியத்தகு நிகழ்ச்சிகள் புரிந்துகொண்டிருந்து முருகன் திருவடியை அடைந்தார். அவர் அவ்வப்பொழுது இயற்றிய பாடல்கள் பாதுகாக்கப் பெறாமையின் மறைந்தொழிந்து சில பாடல்களே எஞ்சின.

## ரு. பாம்பன் குமரகுருதாச அடிகள்

### தோற்றம்

இற்றைக்கு நூற்றுமூன்று ஆண்டுகட்கு முன்னே தென்பாண்டித் திருநாட்டிலே பாம்பன் என்னும் பதியிலே குமரகுருதாச அடிகள் தோன்றியருளினர். தந்தையார் பெயர் சாத்தப்ப பிள்ளை. தாயார் பெயர் செங்கமலம். குலம் அகமுடையார் குலம். அடிகளார் நிலவுலகில் தோன்றிய நாள் வெள்ளிக்கிழமை. தாய் தந்தையரால் இடப்பெற்ற பிள்ளைப்பெயர் அப்பாவு.

### கல்வி

அகவை ஆறு நிரம்பியவுடன் அப்பாவு பள்ளியில் வைக்கப்பெற்ருர். இளமையில் கல்வி போதித்த கணக்காயரின் பெயர் முனியாண்டியா பிள்ளை. கல்வியைக் கருத்துடன் கற்ற அப்பாவு இளமைக்காலத்திலேதானே கல்வியிற் சிறந்துவிளங்கினர். ஒழுக்கத்திலும் அறிவிலும் உயர்ந்து திகழ்ந்தார். இவரைக் கண்டவர்கள் இவர் விரைவில் சிறப்புடன் திகழ்வார் என்று சொல்லிக்கொண்டார்கள்.

### சிவசிவ

அப்பாவு எம்மதத்தினும் வெறுப்பற்றவராய் விளங்கினர். எம்மதத்திலும் மெய்ம்மை உண்டு என்னும் துணிபு இவர் உள்ளத்தில் திடம்பெற்று நின்றது. இவர் ஒருகால் நாகநாதர் கோவில் என்னும் இடத்தில் நிகழ்ந்த திருவிழாவைக் காண்டற்குச் சென்ருர். பலர் சேர்ந்து தோணியேறிச் சென்றனர். தோணியில் துறவிகள் இருவர் இருந்தனர். அவர்களுள் ஒருவர் "சிவசிவ" என்று இடைவிடாது சொல்லிக்கொண்டிருந்தார். அப்பாவும் அம்மறையைச் சொல்லத்தொடங்கினர். இராப்பகல் என்ப

தின்றி மூன்றுநாள் வரையினும் இயம்பிக்கொண்டேயிருந் தார். வீடுசேர்ந்த பின்னரும் இயம்புவது நிற்கவில்லை. பிறகு 'கந்தர்சட்டி கவசம்' என்னும் நூலை மனப்பாடஞ் செய்யத் தொடங்கினர். இதனால் "சிவசிவ" என்பது நின்றது. கந்தர்சட்டி கவசத்தில் "ஒருநாள் முப்பத் தாறுருக் கொண்டு, ஓதியே செபித்து உகந்துநீ றணிய," என்று கூறப்பட்டுள்ளது. அப்பாவு அவ்வாறே ஓதி உகந்து நீறணிந்தார்.

செய்யுள் இயற்றுதல்

ஒருநாள் அப்பாவு தம்முடைய தென்னைமரத் தோப் பைப் பார்வையிடுவதற்குச் சென்றார். தோப்பின் வெளியே நின்றார். அவருடைய உள்ளத்தில் முருகக்கடவுள்மீது செய்யுள் இயற்றவேண்டும் என்னும் எண்ணம் உண்டாகி யது. அன்று வெள்ளிக்கிழமை. பாடவேண்டும் என்று விரும்பியவருடைய உள்ளத்திலே,

"கங்கையைச் சடையில் பரித்துமறி மழுஅம்
கரத்தில் தரித்து ருத்ரம்
காட்டுழுவை அதளசைத் தணிமன்றி லாடுகங்
காளற கபின்ன மாய
சங்கரி சடாதரி சருவாணி கல்யாணி
தற்பரி பவானி தந்த
தந்திமுக னொடுமற் றைந்துபெயர் நீர்மையும்
தன்னகத் துள தெய்வமே
மங்கையர்தம் இன்பமெனும் துன்பினை விரும்புமட
மார்க்கத்தை விட்ட தீதர்
வாழ்வுக்கும் வாழ்வாய வாழ்வினை அளிக்குமுன்
மலரடி தியானிக் கவும்
அங்கையினில் நெல்லியங் கனியெனத் திருவருளை
அடையவுங் கருணை நல்காய்
அருமறை புகழ்ந்ததிரு முருகசிவ சரவணத்
தாதியே அமரர் கோவே!"

என்னுஞ் செய்யுள் தோன்றியது. அன்றுமுதல் நாள் தோறும் பாடுதலை வழக்கமாக மேற்கொண்டார்.

ஆறெழுத்து மறை பெறல்

இவ்வாறிருக்கும் நாளில் தந்தையார் கட்டளைப்படி முகமதியர் ஒருவருடன் சேர்ந்து நெல் வாணிகம் செய்தலை மேற்கொண்டார். அந்நாளில் இராமேசுரத்திலிருந்து அந்தணர் ஒருவர் வந்தார். அவர் முருகனிடத்திற் பேரன்பு கொண்டவர். இவருடைய பாடல்களை வாங்கிப் படித்துப் பார்த்தார். இராமேசுரத்தில் இருந்த அறிஞர் ஒருவர் இடத்தில் காட்டினர். "பாட்டுக்கள் நயமுடையன. இவற்றைப் புத்தகமாக வெளியிடலாம்," என்று கூறிச் சாத்துப் பாடலும் வழங்கினர். இவரிடமிருந்து பாடல்களைப் பெற்றுச்சென்ற சேதுமாதவ ஐயர் அப்பாவுவை இராமேசுரத்திற்கு அழைத்து ஆறெழுத்து மறையைக் கூறியருளினர். அதுமுதல் ஆறெழுத்து மறை இவருக்குப் பற்றுக்கோடாயிற்று.

ஒருநாள் இவருடைய கனவில் அழகிய சைவர் ஒருவர் தோன்றினர். தம்முடன் அழைத்துச்சென்றார். இனிய உணவுகளை உண்ணுமாறு பணித்தார். இவரும் அவ்வாறே உண்டு மீண்டதாகக் கண்டார். அதுமுதல் இவருக்குப் பாடல்கள் மிகுதியாக வெளிப்படலாயின. எப்பொழுதும் பாடுதலே தொழிலாக முடிந்தது. பலரும் இவருடைய பாடல்களைக் கண்டு வியப்பும் திகைப்புங்கொண்டனர்.

மணமும் மக்கட்பேறும்

அப்பாவுக்கு அகவை இருபத்தைந்து நிரம்பியது. இவருக்கு ஆறெழுத்து மறையை இயம்பியருளிய சேதுமாதவ ஐயர் இவரைத் திருமணஞ் செய்துகொள்ளுமாறு கட்டளையிட்டார். காளிமுத்தம்மாள் என்னும் மங்கையை

1878-ஆம் ஆண்டிலே இராமநாதபுரத்தில் திருமணஞ் செய்துகொண்டார். முருகையன், சிவஞானம்பாள், குமர குருதாசர் என்னும் பெயருடைய மக்கள் மூவர் தோன்றி னர். இவருடைய உள்ளம் துறவறத்தையே நாடி நின்றது. ஆயினும், மேலுஞ் சிலகாலம் குடும்பச்சுமையைத் தாங்கி நின்றார். மாணவர்கள் பலர் சேர்ந்தனர். உப்பின்றி உண்டல் முதலிய உறுதிகளை மேற்கொண்டார். முருகன் திருவருளால் இவருடைய உள்ளம் தூய்மையுடையதாக விளங்கியது. குடும்பச்சேற்றில் அழுந்தியும் தண்ணீரிற் கிடக்கும் தாமரை இலையைப்போன்றும் சேற்றிற்கிடக்கும் பிள்ளைப்பூச்சியைப்போன்றுந் திகழ்ந்தார்.

தீமிதித்தலின் உண்மை

சிலர் இவரிடம் வந்து, "முகமதியர் தமது நோன் பிலே, பெருந்தீயில் இறங்கிச்செல்கின்றனர். இது தெய் வத் திருவருளா? அல்லது வேறு ஏதேனும் சூழ்ச்சியி னலா?" என்று உசாவினர். இவர் அவர்களைப் பார்த்து, "அருளும் அன்று; சூழ்ச்சியும் அன்று. முகமதியர்மட் டும் அல்லர். இந்துக்களும் திரௌபதை கோயில், முருகக் கடவுள் கோயில் முதலிய இடங்களில் தீயில் இறங்கிச் செல்கின்றனர். தீ அவர்களைச் சுடுவதில்லை. இது தெய் வச்செயல் என்று நீங்கள் எண்ணுதல்வேண்டா. அதன் உண்மையை நான் விளக்குகிறேன். ஒரு சட்டி நிறையத் தீக்கொண்டு வாருங்கள்," என்று கட்டளையிட்டார். அவ்வாறே கொண்டுவந்தனர்; அதனை வீட்டுநடையிற் பரப்பினர். அதன்மீது நடந்து செல்லுமாறு கட்டளை யிட்டார். கட்டளையைக் கேட்டோர் அஞ்சினர். தீ நம்மைச் சுட்டுவிடுமே என்று நடுங்கினர். "அஞ்சாமல் நடவுங்கள் தீச் சுடாமல் நான் பாதுகாக்கிறேன்," என்று உறுதிமொழி கூறினர். உறுதிமொழியைக் கேட்

பேர் தீயின்மீது நடந்தனர். தீ அவர்களைச் சுடவில்லை. இது மறைமொழியின் பேராற்றல்போலும் என்று எண்ணினர். இவர் தீயில் நடந்த அன்பர்களைப் பார்த்து, "கையால் தீயை எடுக்கலாம்; ஆனால் அதனை வைத்துக் கொண்டிருக்க முடியாது. கை ஒரு மாத்திரைநேரம் அளவு சூட்டைப் பொறுக்கும். காலில் தீயின் வெம்மை சிறிது தாழ்த்தே சுடுமாதலின், அஃது இரண்டு மாத்திரை சூடு பொறுக்கும். தீயில் நடந்து செல்லலாம். தீயின் சாம்பர் காலில் ஒட்டிக்கொண்டாற் சுடும். தீயிற் சாம்பர் உண்டாகாமற் பாதுகாத்து நடப்பின் சுடாதிருக்கும்," என்று தீ மிதித்தலின் சூழ்ச்சியை ஒருவாறு விளக்கினார். உண்மையை உணர்ந்துகொண்டவர்கள், பாம்பன் இருப் பைத்தோப்பில் குழி உண்டாக்கி அதில் தீயை மிகுதியாக எரித்து அதனைப் பரப்பி அதன்மீது பன்முறை நடந்து தீச் சுடாதிருத்தலின் உண்மையை ஆராய்ந்து பார்த்தனர். இதனைக் கண்ட முகமதியரும் பிறரும் 'இஃதென்ன புதுமை?,' என்று வியப்பும் திகைப்பும் அடைந்தனர்.

பல இடங்கட்குஞ் செல்லல்

முருகன் திருவருளால் அப்பாவு பல வழக்குகளினும் வெற்றியடைந்தார். இவருடைய பெருமை சிறிதுசிறிதாக வெளிப்படலாயிற்று. மாணவர்கள் பலர் ஏற்பட்டனர். திருவனந்தபுரம், கன்னியாகுமரி, சுசீந்திரம், திருச்செந்தூர் முதலிய இடங்கட்கு இறைவழிபாடாற்றச் சென்றார். முருகனல்லாத பிற மூர்த்திகளைக் கண்டால் முருகனையே எண்ணிப் பணிவதும் பாடுவதும் இவருடைய இயற்கை.

தவம்

1894-ஆம் ஆண்டில் பிரப்பன்வலசை என்னும் இடத்தில் முப்பத்தைந்து நாட்கள் தவம்செய்தார். இடுகாட்டிலே

ஒரு கொட்டகை அமைக்கப்பட்டது. அதன் நடுவிற சது ரக்குழி ஒன்று அமைக்கப்பட்டது. அக் குழியில் இறங்கி இவர் தவம்புரிந்திருந்தார். பேய்கள் பல இவருடைய தவத்தைக் கெடுப்பதற்கு முயற்சி செய்தன. ஆயினும் இவர் அவற்றின் மருட்டல்களுக்கு அஞ்சாமல் எண்ணிய வாறு தவத்தைச் செய்துமுடித்தார்.

துறவு பூணல்

1895-ஆம் ஆண்டில் இவர் துறவறத்தை மேற் கொண்டு பாம்பனைவிட்டுப் புறப்பட்டார். 'குமரகுரு' என்னும் மறைமொழியை மிகுதியாக உருவேற்றிக்கொண் டிருந்தமையின் இவருக்குக் குமரகுருதாசர் என்னும் பெயர் உண்டாகி அப்பாவு என்னும் பிள்ளைப் பெயர் மறைந்துவிட்டது. மதுரைக்குச் சென்று பிறகு சென் னையை அடைந்தார். முன்பின் தெரியாத இடத்தில் நமக்கு எவ்வகைத் தொல்லை ஏற்படுமோ என்னும் எண் ணத்துடன் சென்றார்.

சென்னையில் உறைதல்

சென்னைமாநகரை அடைந்த குமரகுருதாசரை ஓர் அன்பர் வைத்தியநாத முதலி தெருவில் சக-ஆவது எண் ணுள்ள வீட்டிலே விட்டுச்சென்றார். அவ் வீட்டினர் அடிகளாரை அன்புடன் போற்றி உணவு முதலியன அளித்தனர். அடிகளாரிடமிருந்து ஆறெழுத்து மறையை உரைத்தருளவும் பெற்றனர். அங்குச் சிலகாலம் தங்கி யிருந்தபின் சிதம்பரத்தை அடைந்தார். அங்குக் கூத்தப் பிரானையும் முருகப்பிரானையும் போற்றிக்கொண்டு சில காலம் தங்கியிருந்தார். பரிபூரணானந்தபோதம், தகரா லய ரகசியம், திருப்பா, கந்தரொலி யலந்தாதி முதலிய நூல்களைப் பாடியருளினார்.

அடிகளின் இரக்கப்பண்பு

சிதம்பரமிருந்து புறப்பட்டார். திருக்குடந்தை, தூத்துக்குடி முதலிய பல இடங்கட்குச் சென்றார். சென்றுழியிடங்களிலெல்லாம் மாணவர்கள் பலர் சேர்ந்தனர். சிக்கநரசையனூர் என்னுமிடத்தில் அடிகளார் ஒருநாள் ஒரு வீட்டில் தங்கியிருந்தார். அவ் வீட்டுச் சிறுவன் ஒரு மூட்டைப்பூச்சியைக் கொன்றது கண்டு ஒருநாள் முற்றும் யாதும் உணவுகொள்ளாமல் உளம் வருந்தியிருந்தார். பிறகு பல இடங்களையுஞ் சுற்றிக்கொண்டு சென்னையை அடைந்தார்.

காசியாத்திரை

1902-ஆம் ஆண்டிலே அடிகளார் வடநாட்டிலே உள்ள காசி முதலிய பல பதிகட்கும் சென்றார். காசியில் குமரகுருபர அடிகளின் திருமடத்தில் தங்கியிருந்தார். அங்கிருந்த ஒரு பெரியார் குமரகுருதாசருக்குத் துவராடையை அணிந்து அடிகளாரைக் காவியுடையினராக மாற்றினார். குமரகுருதாசர் முன்னர்த் திகைத்தனராயினும் அது முருகன் திருவருள் என்று உளந்தெளிந்து களிகூர்ந்தார். பிறகு திரும்பித் தமிழ்நாட்டை அடைந்தார். பல இடங்களினுஞ் சுற்றிக்கொண்டு சென்னையை அடைந்தார். உலகமாந்தர்க்கு நன்மைபயக்கும் சிலசெயல்களில் அடிகளார் ஈடுபட்டமையின் இவர்மீது சில வழக்குகளும் நீதிமன்றத்தில் ஏற்பட்டன. இவரால் தொடரப்பெற்ற வழக்கு வெற்றியையும் இவர்மீது தொடரப்பெற்ற வழக்குத் தோல்வியையும் முருகன் திருவருளால் அடைந்தன.

முருகன் திருவடியை அடைதல்

உலகினரின் நன்மையையே தமது கொள்கையாகக் கொண்ட அடிகளார் பல இடங்களினுஞ் சுற்றித்திரிந்து

அன்பர்கட்கு ஆறெழுத்து மறையைக் கூறி அருள்புரிந்து இறுதியிற் சென்னையை அடைந்திருந்தார். விரைவில் தமது உடல் நீங்கிவிடும் என்பதை உணர்ந்திருந்த இவர் திருவான்மியூரிலே தமக்கோர் இடம் அமைக்குமாறு அன்பர்கட்குக் கட்டளை இட்டிருந்தார். 1929-ஆம் ஆண்டு மேமாதம் முப்பதாந்தேதி குருவாரத்தன்று அடிகளாருக்கு இரத்தக்கொதிப்பு உண்டாயிற்று. காலை 7¼-மணிக்கு யாவரும் காணுமாறு அடிகளார் மூச்சுக்காற்றை உள்ளுக் கிழுத்தனர். அந் நிலையிலேயே அடிகளார்க்கு முருகன் திருவடிப்பேறு கிட்டியது. திருவான்மியூரில் அடிகளாரின் உடல் மிகுந்த சிறப்புடன் அடக்கஞ் செய்யப்பட்டது.

### அடிகளார் அருளிய நூல்கள்

குமரகுருதாச அடிகளார் அருளிய நூல்கள் திருப்பா, குமார சுவாமியம், பரிபூரணானந்தபோதம், தகராலய இரகசியம், சேந்தன் செந்தமிழ், ஒன்பது சிறுநூல்கள் அடங்கிய சிறு நூற்றிரட்டு, குமரவேள் பதிற்றுப்பத் தந்தாதி, நாலாயிர திவ்யபிரபந்த விசாரம், சைவசமய சரபம், சிவஞானதீபம், சுப்பிரமணிய வியாசம், செக்கர் வேள் செம்மாப்பு, செக்கர்வேள் இறுமாப்பு, திருவலங்கல் திரட்டு, குமரகுருதாச சுவாமிகள் பாடல், சுத்தாத்வைத நிர்ணயம் முதலிய பலவாம்.

### நூல் நயங்கள்

அடிகளார் கடுமையான வகையில் பாடுவதிலும் உரைநடை—எழுதுவதிலும் வல்லவர். அடிகளாருடைய பாடல்களும் உரைநடையும் விளங்காதிருத்தலைக் கண்ட சிலர் எளியநடையில் இருந்தால்தான் எல்லோருக்கும் நன்மை பயக்கும் என்று வேண்டிக்கொண்டமை கொண்டு தம்முடைய போக்கை ஒருவாறு மாற்றிக்கொண்டார்.

உலக வழக்கில் மிகுதியாக அல்லது அடியோடு வழங்கப் பெறாத சில சொற்கள் அடிகளாரின் நூல்களில் இருந் தலைக் காணலாம். அத்தகைய சொற்கள் அகரவரிசை நூலளவில் அமைந்து பயனற்றுப் போகாதிருத்தல்வேண் டும் என்னும் கருத்துடனேயே எடுத்தாளப்பெற்றன. அடிகளார் தமது புலமைப்பெருக்கைக் காட்டுவான் அவ் வாறு எழுதினர் என்று சிலர் எண்ணுவர். அவ் வெண் ணம் தவறானதாகும்.

## ௯. அண்ணாமலை ரெட்டியார்

### தோற்றம்

சிந்து என்பது பாவகைகளில் ஒன்று தமிழ்ப்பாடல் களில் சிந்துப்பாடல்களை மிகுதியாகக் காணமுடியாது. திருமுருகப்பெருமான் மீது சிந்துப்பாடல்களைப் பாடிப் பெரும்புகழ்பெற்றுக் காலஞ்சென்றவர் சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார். சென்னிகுளம் என்பது திரு நெல்வேலி மாவட்டத்திலே, கரிவலம் வந்த நல்லூருக்கு அண்மையிலே உள்ள ஒரு சிற்றூராகும். அவ்வூரிலே அண்ணாமலை ரெட்டியார் 1861-ம் ஆண்டிலே பிறந்தார்.

### கல்வி

'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பர் பெரி யோர். அஃது அண்ணாமலையார்பால் இளமையில் நன்கு காணப்பட்டது. அண்ணாமலையார் இளமையில் கல்வி கற்ப தில் கருத்தற்றவராய்த் திரிந்தார். எவர் என்ன கூறினும் அதனை அண்ணாமலையார் கேளார். அதனால் 'இளமையிற் கல்' என்பது இவரிடத்திலே கருங்கல் என்னும் பொருளில் அமைந்து நின்றது.

செய்யுள் பாடுந்திறம் கருவிலே அமையாவிட்டால் எவ்வளவுதான் முயலினும் பாக்கள் சிறந்தோங்கமாட்டா. அண்ணாமலையார் சிறுவராயிருக்கையிலேயே எதுகை மோனை அமைய இரண்டோரடிகளை அமைப்பதிலும் பேசுவதிலும் வல்லவராக விளங்கினார். அருணகிரிநாதர் பாடியருளிய திருப்புகழிலே அண்ணாமலையாருக்கு அளவுகடந்த காதலுண்டு. திருப்புகழை அல்லும் பகலும் ஓதியவண்ணமாகவே இருப்பார். அதனால் முருகன் திருவருள் பெருகி நின்று அருளியது. போதாக் குறைக்குச் சிறிய தந்தையாராகிய இராமசாமிக் கவிராயர் என்பவரிடத்திலே சில நூல்களையும் கற்றார். பிறகு திருவாவடுதுறை சென்று கல்விகற்க எண்ணினார். அப்பொழுது அங்கு உ. வே. சாமிநாதையர் மாணவர்கட்கு இலக்கண இலக்கியங்களைக் கற்பித்துக்கொண்டிருந்தார். அவரிடம் நன்னூல் முதலிய சின்னூல்களை இரண்டொரு திங்கள் பாடங்கேட்டார். அண்ணாமலையாருக்கு இலக்கணத்தின்மீது அவ்வளவாக உள்ளஞ் செல்லவில்லை. அவருடைய உள்ளம் இசையிலேயே ஈடுபட்டு நின்றது. அங்குவந்த இசைப்புலவர்கள் மூலம் இசைப்பயிற்சியும் பெற்றார். முருகன் திருவருள் பொருந்திய அண்ணாமலையாரின் முன்னேற்றத்திற்கு இவ்வளவு கல்விப்பயிற்சியே போதுமானதாக அமைந்தது.

செய்யுள் இயற்றுதல்

திருப்புகழ்ப் பாடல்களிலேயே உள்ளம் பதிந்து நின்ற அண்ணாமலையார், திருப்புகழ்ப் போக்கிலேயே சிந்துப் பாடல்களை, கழுகுமலை நகர்வளம், கோயில்வளம், குளவளம், மலைவளம், வணக்கம், சுரம்போக்கில் நற்றாயிரங்கல், தலைவியிரங்கல், தலைவிஊடல், பாங்கி தலைவியின் நிலைமையைக்கூறித் தலைவனை அழைத்தல், தலைவி பாங்கியைத் தூது

விடுத்தல், பாங்கி தலைவியின் உறற்பருமை உரைத்தல், தலைவன் வருத்தஞ்சாற்றல், தலைவனைக்கலந்த தலைவி பாங்கிக்குக்கூறல், நற்றாய் தலைமகளின் வேற்றுமைகண்டு வினாதல், காலம்நீடத் தலைவி வருந்துதல் முதலிய பகுதிகளில் இனிமை ததும்பக் கார்காலத்துக் கருமுகில் பெருமழை பொழிவதைப்போலப் பொழியலானார். எளிய பொருள் அமைந்த அப்பாடல்கள் காட்டுத் தீயைப்போல நாட்டுப்புறம் நகர்ப்புறம் எங்கும் பரவின. அண்ணாமலையாரின் புகழும் அதனோடு சென்று பரவியது. இசைத் தட்டுகள் அண்ணாமலையார் பாடல்களை யாண்டும் பாடின.

ஊற்றுமலை நாட்டுப் புலவர்

அந்நாளில் ஊற்றுமலை என்னும் ஊரில் இருதயாலய மருதப்பதேவர் என்பவர் பெருநிலக்கிழவராக அமைந்திருந்தார். அண்ணாமலையாரின் அரும்புகழை விரும்பிய அவர் அண்ணாமலையாரை அழைத்துத் தமது அவைக்களப் புலவராக ஆக்கினார். ஆங்கமர்ந்து அத்தேவர்மீது அரிய பாக்கள் பலவற்றைப் பாடிக் களிப்பூட்டினார். அதனால் உள்ளங்களிகூர்ந்த பெருநிலக்கிழவர் அண்ணாமலையார்க்கு அரும்பெருஞ் சிறப்புக்கள் பல செய்தார்.

ஆவடுதுறை செல்லல்

சிறப்புடன் திகழ்ந்த அண்ணாமலையார் திருவாவடுதுறைசென்று அப்பொழுது அங்கு எழுந்தருளியிருந்த சுப்பிரமணிய தேசிகரையும் தம் ஆசிரியராகச் சின்னாள் விளங்கிய சாமிநாதையரையும் பார்த்துவர எண்ணினார். புறப்பட்டுத் திருவாவடுதுறையை அடைந்து தேசிகரைக் கண்டார். அண்ணாமலையாரை முன்பார்த்துப் பழகியிருந்தவர்கள்கூட அடையாளங் கண்டுபிடிக்க முடியாதபடி, காதில் கடுக்கனும் சல்லாவும் தோடாவும் பட்டாடையுமாக

விளங்கினர். பெருநிலக்கிழவரின் அவைக்களப்புலவராக உள்ளவர் பெருஞ்சிறப்புடன் விளங்கினால்தானே பெருமை யுண்டாகும். தேசிகர்மீது அண்ணாமலையார் பாடியிருந்த வணக்கப்பாடல்களைத் தேசிகர் திருமுன்பு கூறினர். அவற்றுள் ஒன்று :

"அரசனகர் ஆதியர்முன் போற்றவட பாலமர்ந்த
  அமலா தென்பால்,
அரசனக ராவைவென்ற விடைமதிச்செஞ் சடைகரந்து
  அவனி போற்ற,
அரசனக ரார்ந்தொளிர்சுப் பிரமணிய குருமணியே
  அடிமை யேன்நான்,
அரசனக ராகமக லக்கடைக்கண் அருட்கருணை
  புரிந்தாள் வாயே."

என்பதாகும். சுப்பிரமணியதேசிகர் அறிவாற்றல் மிகுந்தவர். ஆயினும் இப்பாடலில் நான்காவது அடியில் உள்ள அரசன் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் கண்டுபிடிக்க அவரால் இயலவில்லை. தம்மால்முடியாதென்பதையுணர்ந்த அவர், அண்ணாமலையாரைக் குறிப்பாகப் பார்த்தார். அண்ணாமலையார், அரசன் = அ + ரசன் 'சாரமற்றவன்' என்று பிரித்துப் பொருள் விளக்கினர். தேசிகர் மிக மகிழ்ந்தார். 'நீ சாதியிலும் இரெட்டி அறிவிலும் இரட்டி' என்று கூறிப் புகழ்ந்தார். அப்பாடலின் அருமை பெருமையைத் தேசிகர் அங்குள்ளவர்கட்கு எடுத்துரைத்தார். அப்பொழுது அங்கிருந்த சாமிநாதையர் அண்ணாமலையாரைக் குறிப்பாகப் பார்த்தார். தம்மை உணர்ந்துகொள்ளவில்லை ஆசிரியர் என்பதை அறிந்த அண்ணாமலையார் எழுந்து ஐயரை வணங்கினர். "என்னைத் தெரியவில்லையா? தங்களிடம் நன்னூல் பாடங்கேட்ட அண்ணாமலை நான்," என்று கூறினர். ஐயர் வியப்படைந்து, "அப்படியா? அடை

யாளமே தெரியாமல் மாறிப்போய்விட்டீர்களே," என்று கூறி அண்ணாமலையாரைப் புகழ்ந்தார்.

### இறுதி

அண்ணாமலையார் ஊருக்குத் திரும்பினார். மேலும் ஊற்றுமலையில் செய்யுள் ஊற்றைச் சுரக்கச்செய்துகொண்டிருந்தார். பெரும்புகழ்பெற்ற அண்ணாமலையார்மீது இருமல்நோய்க்குக் காதல் உண்டாகிவிட்டது. அவரைப் பற்றிக்கொண்டு அல்லலுக்குள் ஆக்கியது அப்பொழுது அண்ணாமலையாருக்கு அகவை இருபத்தாறுதான். மேலுஞ் சில ஆண்டுகள் அந்நோயோடு போராடியபின் தம்முடைய முப்பதாவது அகவையிலே 1891-ஆம் ஆண்டு இவ்வுலக வாழ்வை நீத்தார். அறிஞர்கட்குரிய இரு யாக்கைகளிலே ஒரு யாக்கை மறைந்தும் அண்ணாமலையார் இன்னொரு யாக்கையில் இன்றும் விளங்கிக்கொண்டிருக்கிறார்

### இவர் இயற்றிய நூல்கள்

ஊற்றுமலைத் தனிப்பாடல் திரட்டு, காவடிச்சிந்து முதலியன இவர் இயற்றிய நூல்களாகும். காவடிச்சிந்து ஒரு சிறு நூலேயாயினும் பெருமையில் மிகவும் பெரியது. எட்டுக்குடி, குன்றக்குடி, சிக்கல், சுவாமிமலை முதலிய முருகன் திருப்பதிகட்குக் காவடி எடுப்போர் இன்றும் இப்பாடல்களைப் பாடிக் காவடியெடுத்துச் செல்லுகின்றனர். பேரறிஞர்கள் பலர் இக்காவடிச்சிந்தை இன்றும் படித்து இன்புறுகின்றனர்.

### சில அடிகள்

"சந்தவரை வந்தகுக    நாதா    பரை
யந்திர மனோன் மணியா    மாதா    மந்திர
சண்முகச டாட்சரவி    நோதா
குழைக் காதா சூரர்    வாதா    வன
சஞ்சரிவெண் குஞ்சரிச    மேதா

"செந்தின் மாநக ரந்தனில் மேவிய
தேசி கனுமுரு கேசன் மயில்
வாசியி லேறுமுல் லாசன் சிறு
திங்களும்பணை சங்கமாசுணை
முந்தாலங்கிய கங்கையாரொடு
செஞ்ச டாடவி மீதணி வார்செவி
சேரமுன் னோதுப தேசன் அடி
யார்தமை யாள்விசு வாசன்

* * * *

"செந்தின்மா நகர்வாழ் கந்தநாதனிரு
செய்யபாத கஞ்சமே நமக்
குய்யமேவு தஞ்சமே இன்று
செப்புவது கொஞ்சமே கேட்கத்
தீயபாதக விரோத மாயம்விட்டுத்
திரும்பு வாயே நெஞ்சமே"

* * * *

என்பன காவடிச்சிந்தின் அடிகளாகும்.

## எ. வேதநாயகம் பிள்ளை

குளத்தூர்

மாபெரும்புலவர் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்களால்,

"தாவில்நூல் பொருள்கேள்வி உறலதிகம் அதற்கதிகம்
தானே கற்றல்
மேவியதை வெளிப்படுத்தல் அதற்கதிகம் அதற்கதிகம்
வியன்பாச் செய்தல்
பாவினுக்கற் பனையமைத்தல் அதற்கதிகம் நீதிநூல்
பாடல் நாளும்
பூவினிடை அதிகமெனில் வேதநா யகமகிபன்
புகழெழற் றுமே"

என்று நீதிநூற் சிறப்புப்பாயிரத்தில் புகழ்ந்து கூறப் பெற்ற வேதநாயகம் பிள்ளையின் பிறப்பிடம் குளத்தூ ராகும். இக்குளத்தூர் திரிசிரபுரத்திலிருந்து மதுரைக்குச் செல்லும் இருப்புப் பாதையில் புகைவண்டி நிற்கும் இட மாக அமைந்துள்ளது.

முன்னோர்கள்

வேதநாயகம் பிள்ளையின் முன்னோர்கள் சைவ வேளாளகுலத்தைச் சேர்ந்தவர்கள். முத்தமிழரசர் மூவ ருக்கும் முன்னரே குளத்தூரில் வாழ்ந்திருந்தவர்கள். மூவேந்தர்களின் வேண்டுகோளின்படி அவ்வரசர்களுக்கு முடிசூட்டும் முறைமையும் அவ் வேளாளர்களிடமிருந்தது. அதனால் அக்குளத்தூர் அவ் வேளாளர்கட்கு உரிமைப் பொருளாக அளிக்கப்பெற்று, வேளாண்குளத்தூர் என் றும் கோனூரென்றும் பெயர்பெற்று விளங்கியது. இவ் வுண்மை,

> "முன்னம் உரைத்த முத்தமிழ் வேந்தரும்
> எங்கள்மூ வருக்கும் இயல்முடி சூட்டுதற்(கு)
> உங்களை அமைத்தனம் உவந்துகொள் வீரெனக்
> கொண்டுமகிழ்ந் தனையார் கோத்தன் மையரே
> ஆயின ரதனால் அவர்வாழ் நாடு
> கோனூ ரென்றோர் குலவுபேர் பெற்றது."

என்னும் நீதிநூற் சிறப்புப்பாயிரத்தாற் பெறப்படும்.

முன்னோர் கிறித்துவர் ஆதல்

வேதநாயகம் பிள்ளையின் முப்பாட்டனாரின் பெயர் மதுரநாயகம் பிள்ளை என்பது. குளத்தூரில் அவர் ஒரு நிலக்கிழவராக விளங்கியிருந்தார். அவருக்கு அகவை ஐம்பது நடந்துகொண்டிருந்தபோது, சூலைப்பிடிப்பு என் கிற பெயரையுடைய ஒரு நோய் அவரைப் பிடித்தது. அந்

நோய் மிகக்கொடியது. அப்பருக்கு உண்டாகிய சூலைநோய் போன்று வேலைசெய்தது. அதனாலுண்டாகிய துன்பம் தாங்கற்கரியதாய் ஏங்கச்செய்தது. எத்தகைய மருத்து வம்புரிந்தும் நோயின் வருத்தம் தணிந்திலது. எழுந்து நட மாடுதற்கும் மதுரநாயகம் பிள்ளை ஆற்றல் அற்றவ ரானார்.

கலிவராயன் என்னும் ஐயனார் மதுரநாயகம் பிள்ளை யின் குடும்பத்திற்குக் குலதெய்வமாக நிலவி நின்றார். மருத்துவர் செய்யும் மருத்துவங்களில் கருத்து வெறுத்த மதுரநாயகம் பிள்ளை கலிவராயனே தம் கலியைத் தீர்க்க வேண்டுமென்று துணிந்தவராய் அக்கடவுளின் கோயிலை அடைந்தார். தமக்கு அருள் செய்யவேண்டுமென்று ஐய னாரை வேண்டினார். ஐயனார் திருமுன்பு எல்லா உறுப்புக் களும் நிலத்திற்றோயுமாறு விழுந்து பணிந்தார். 'எனது நோய் என்னை விட்டு அகலும் வரையிலும் எழமாட்டேன்' என்று உறுதிகொண்டார். எட்டு நாட்கள்வரை விழுந்த படியே கிடந்தார். ஒன்பதாம் நாள் இரவு மதுரநாயகம் பிள்ளைக்குக் கனவுக்காட்சி ஒன்று உண்டாகியது. "என் னிலும் பெரிய மருத்துவன் ஆவூரில் வந்திருக்கின்றான். அங்கே சென்றால்தான் உனது நோய் உன்னைவிட்டு ஒழி யும்," என்று ஐயனார் கூறியதுபோல் தோன்றியது. மதுர நாயகம் பிள்ளை எழேனென்று கிடந்த உறுதியைவிட்டு எழுந்தார். தாம் கண்ட கனவினை உற்றார் உறவினர்கட்கு உரைத்தார். ஆவூரில் வந்திருப்பது கிறித்துமதக் குருக்க ளாகிய பாதிரிமார்கள் என்பதை நன்குணர்ந்த உறவினர் அஞ்சினர். ஆவூர் செல்லுதல் அடாது என்று தடுத் தனர். மதுரநாயகம் பிள்ளையோ போய்த்தான் தீர்வே னென்று உறுதியாக நின்றார். ஆவூரைப்பற்றி நன்கு அறிந்தவர்களிடத்தில் உசாவினார்.

ஆவூர் என்னும் ஊர் புதுக்கோட்டை அரசைச் சேர்ந்தது. குளத்தூருக்கு ஏறக்குறைய ஆறு கல் சேய்மையில் இருப்பது. அக்காலத்தில் ரோமாபுரியிலிருந்து ரோமன் கத்தோலிக்கு ஏசு அவைப் பாதிரிகளிற் சிலர் அவ்வூருக்கு வந்து, புதுக்கோட்டை அரசர் உடன்பாடு பெற்றுக் கோயில் கட்டி மக்கட்கு மருத்துவம் முதலிய நன்மைகள் செய்து, அவர்களைத் தமது மதத்திற் சேர்த்துக்கொள்ளுந் தொழிலைச் செய்துகொண்டிருந்தனர். ஆவூர்ச் செய்தியை நன்குணர்ந்த மதுரநாயகம் பிள்ளை தம்முடைய குடும்பத்தாருடன் ஓர் ஊர்தியிலேறி அவ் வூரையடைந்தார். பாதிரிகளைக் கண்டு வணங்கினார். தமது நோயை அவர்களுக்கு உரைத்தார். தமது நோய் நீங்கிவிட்டால் தம்முடைய குடும்பத்தாருடன் அறிவு முழுக்குப் பெற்றுக் கிறித்துவமதத்திலே சேர்ந்துவிடுவதாகக் கூறினார். மதுரநாயகம் பிள்ளையின் உரை பாதிரிமார்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சியை அளித்தது. மேனாட்டு முறைப்படி மதுரநாயகம் பிள்ளைக்கு மருத்துவஞ்செய்தனர். மேனாட்டு மருத்துவமுறையின் வியத்தகு பண்பாட்டால் அந்நோய் சிறிதுசிறிதாகக் குணப்படத் தொடங்கிச் சிலநாட்களில் முற்றும் நீங்கியது.

நோய் நீக்கத்தினால் களிப்படைந்த மதுரநாயகம் பிள்ளையும் அவர் குடும்பத்தினரும் அறிவு முழுக்குப் பெற்றுக் கிறித்துவர்களானார்கள். பின்னர் அவர்கள் ஆவூரை விட்டுக் குளத்தூரையடைந்தனர். மதுரநாயகம் பிள்ளையின் உறவினர்கள், சைவர்கள் கிறித்துவர்களாக மாறினமைபற்றிப் பல இடையூறுகளைச் செய்தனர். அவ் விடையூறுகளெல்லாம் ஆவூர்ப் பாதிரிகளின் அருளினால் அகன்றொழிந்தன. அந்நாளில் இக் குடும்பத்தினரின் ஒரு பிள்ளைக்குப் பாதிரிமார்கள் ஆங்கிலம் பிரெஞ்சு முதலிய

மொழிகளைக் கற்பித்துத் தருந்த பெரிய அலுவலிலேயும் அமர்த்திச் சிறப்புச் செய்தனர். அதனால் மேலும் பலர் கிறித்துவக் கொள்கையைப் பின்பற்றி அம்மதத்திலே சேர்ந்தனர்.

வேதநாயகம் பிள்ளை

முற்கூறிய மதுரநாயகம் பிள்ளை வழியிலே சவரி முத்துப்பிள்ளை என்பார் ஒருவர் தோன்றினார். அவருடைய இல்லாளின் பெயர் ஆரோக்கியமரியம்மாள். இவ்விருவருக்கும் ஆங்கிலம் கஅஉக-ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் பதினொன்றாம் நாளிலே வேதநாயகம் புதல்வராகப் பிறந்தார்.

* * * *

கல்விப் பயிற்சி

உரியகாலத்தில் கல்விப்பயிற்சி செய்விக்கப்பெற்று அவ்வூரில்தானே தமிழ்க்கல்வியை நன்கு பயின்று வந்தார். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பதற்கேற்ப வேதநாயகம் இளங்காலத்திலேயே அறிவுநுட்பமும் திட்பமும் அமைந்திருந்தது அனைவருக்கும் வியப்பை பளித்தது. பதினொன்றாவது அகவையில் கையிலெடுத்த தமிழ் நூல்களைப் படிக்கக்கூடிய ஆற்றல் வேதநாயகத்திடம் விளங்கியது. பின்னர் ஆங்கிலங் கற்றற்கு எண்ணினார். அக்காலையில் ஆங்கிலப் பாடசாலைகள் மிகவும் அருமை. ஆகவே, திரிசிரபுரத்தில் வழக்குமன்றம் ஒன்றில் மொழிபெயர்ப்பாளராக இருந்தவரும், ஆங்கிலத்தில் நல்ல அறிவாளியாக விளங்கியவரும் ஆகிய தியாகப்பிள்ளை என்பவரிடம் ஆங்கிலம் கற்கத் தொடங்கினார். மிகு விரைவில் அம் மொழியிலும் எடுத்த நூலைப் படிக்கவும், ஆங்கிலத்திலுள்ளதைத் தமிழிலும் தமிழிலுள்ளதை ஆங்கிலத்திலும்

மொழிமாற்றும் ஆற்றலையும் அடைந்தார். அந்நாளில் தானே செய்யுள்பாடுந் திறமும் இவரிடஞ் சேர்ந்து விளங்கியது.

செய்யுள் இயற்றல்

வேதநாயகம்பிள்ளையின் பெரியதாயின் புதல்வர் அடைக்கலம் பிள்ளை என்பவர், பல நாட்களுக்குப்பின் வேதநாயகம் பிள்ளையைக் கண்டார். அப்போது,

"சீர்பெருகு குளத்தூர்வாழ் அடைக்கலஅண் ணாகருணைத்
தியாகா வாவா
ஏர்பெருகு நின்சுமுகங் கண்டுவந்தேன் இன்பமிகும்
நீயும் நானும்
ஓர்உதரம் தனிற்பிறவாத் தோடமொன்றே மாமணியும்
ஒளியும் போல
நேர்படவே நிலைநிற்கும்: எந்நாளும் நம்மிருவர்
நேசந் தானே"

என்று ஒரு செய்யுளைப் பாடினார். ஒருகணப்போதையும் வீணாக்காமல் வேதநாயகம் பிள்ளை அல்லும் பகலுந் தொல்லைப்பட்டுப் படித்துத் தம் அறிவைப் பெரிதும் வளர்த்துக் கொண்டார். பொம்மைக் கலியாணம், நலங்குப்பாடல், சோபனப்பாடல் முதலியவைகளை வேடிக்கையாகவும் வியப்பாகவும் பாடிப் பலருக்கும் மகிழ்ச்சியை அளித்தார்.

அலுவலில் அமர்தல்

வேதநாயகம் பிள்ளைக்கு இருபத்திரண்டாவது அகவை நடந்துகொண்டிருந்தது. வேதநாயகம்பிள்ளையின் கல்வித்திறமையை நன்கறிந்த கார்டன் துரை என்பவர், திருச்சிராப்பள்ளியிலிருந்த தமது வழக்குமன்றத்தில் ரிகார்டுகீப்பர் என்னும் அலுவலில் முன்னர் அமர்த்தினார். வேதநாயகம் பிள்ளை இரண்டாண்டுகள் அந்த வேலையில்

இருந்தார். ஆயிரத்து எண்ணூற்று ஐம்பதாம் ஆண்டிலே திருச்சிமாவட்ட வழக்குமன்றத்திலே மொழிபெயர்ப் பாளர் வேலை ஆளற்றதாகவிருந்தது. பலருடன் அவ் வேலையை விரும்பி வேதநாயகம் பிள்ளையும் வேண்டுகோள் செய்துகொண்டார். மாவட்ட வழக்கு மன்றத்தலைவராக இருந்த பாயிலோ துரை என்பவர் எல்லோருடைய அறிவின் மதுகையையும் ஆராய்ச்சி செய்தபின்னர், அவ்வேலையை வேதநாயகம் பிள்ளைக்களித்தார். வேதநாயகம் பிள்ளையும் அவ்வேலையைத் திறமையாகப்பார்த்து வந்தார். வேலை மிகுதியாக இருந்தமையின் துணையாள் ஒருவரை அமர்த்திக் கொண்டு வேலையைப்பார்த்து வந்தார். பகலில் வேலையைப் பார்ப்பதுடன், இரவில் நூலாராய்ச்சி செய்தல் பிறருக்குப் பாடஞ்சொல்லுதல் முதலிய தொண்டுகளிலும் ஈடுபட் டிருந்தார்.

அலுவல் இழத்தல்

முறைமன்றத்தலைவர் ஒருவர் வேறு மன்றத்திற்கு ஒருமுறை மாற்றப்பட்டார். அக்காலை அவர் எடுத்துச் சென்ற சில உறுதிமொழித் தாள்கள் எதிர்பாராதவாறு அவர் இறந்தமையின் அனுப்பப்பெறவேண்டிய இடத்திற்கு அனுப்பப்பெறாமல் தங்கிவிட்டன. நன்கு ஆராயாமையின் அத்தவறு வேதநாயகம் பிள்ளையின் தலைமீது வந்து சேர்ந் தது. அப்போது புதிதாகத் திருச்சிராப்பள்ளி முறை மன்றத்திற்கு நடுவுநிலையாளராகவந்த வெள்ளையர் வெகுளி யாளராகவும் நேர்மையற்றவராகவும் இருந்தமையின், வேத நாயகம் பிள்ளையை மொழிபெயர்ப்பாளர் அலுவலில் நின்றும் நீக்கிவிட்டார். வேதநாயகம் பிள்ளை நடந்த வரலாறுகளையெல்லாம் விளக்கமாக மேலிடத்திற்கு எழுதி யனுப்பினார். நீண்ட நாட்கள்வரை வேதநாயகம் பிள்ளை எழுதியனுப்பியது பார்க்கப்பெறவில்லை.

துன்பம் வந்தால் தொடர்ந்து வரும்

வேதநாயகம் பிள்ளை வேலையை இழந்து வருந்திக் கொண்டிருக்கும்போது, இருமல் என்னும் கொடிய நோய் அவரைப் பற்றிக்கொண்டு வாட்டி வருத்தலாயிற்று. ஒரு நாள் இரவில் ஒரு சிறிய பாம்பு வேதநாயகம் பிள்ளையின் படுக்கையறையில் நுழைந்து அவரைக் கடித்துவிட்டது; ஒருநாள் வண்டியிற் சென்றுகொண்டிருக்கும்போது வண்டி குடை கவிழ்ந்துவிட்டது; திடீரென்று ஒரு வண்டிமாடு நோய்கண்டு இறந்துபோய்விட்டது; வேதநாயகம் பிள்ளை எல்லாத் தொல்லைகளையும் கடவுள்மீது போட்டுவிட்டு அவருடைய திருவருளையே நம்பியிருந்தார். மறுமுறையும் மேல்முறை மன்றத்திற்கு முறைவேண்டித் தம் குறைகளை யெல்லாம் எழுதியனுப்பினர்.

முறையற்ற போக்கு

இச்சமயத்தில் இறந்துபோன முறைமன்றத் தலைவரின் மன்றத்திலிருந்து உறுதிமொழித் தாள்கள் வெளிப்பட்டன. எல்லாவற்றையும நன்கு ஆராய்ந்த மேலிடத்தார், வேதநாயகம் பிள்ளைக்கு மீண்டும் வேலையைக் கொடுக்குமாறு கட்டளை அனுப்பினர். மேலிடத்தாருடைய கட்டளை வந்தகாலத்தில் சுவிண்டன் துரை என்னும் பெயரையுடையவர் கீழ்முறை மன்றத்தில் நடுவுநிலைமையாளராக அமர்ந்திருந்தார். அப்பொழுது மொழிபெயர்ப்பாளர் வேலையில் அமர்ந்திருந்தவர் மேற்படி சுவிண்டன் துரைக்கு வேண்டியவராக இருந்தமையின், "வேதநாயகம் பிள்ளை மொழிபெயர்க்கும்போது தாமாக மொழிபெயர்ப்பதில்லை யென்றும், வேறு ஒருவரைக்கொண்டு மொழிபெயர்க்கிருரென்றும்; மேலும் அவருக்கு இப்போது மிகுந்த நோயென்றும் அதனுல் வேலைக்கே தகுதியற்றவரென்றும்," நேர்மை

யற்ற முறையில் மேல் இடத்திற்கு எழுதியனுப்பினர். இதனையறிந்த வேதநாயகம் பிள்ளை சுவிண்டன் கூற்றுக்கள் முழுமையையும் மறுத்து மீண்டும் மேலிடத்திற்கு எழுதிக் கொண்டார். எல்லாவற்றையும் பார்த்த மேலிடத்தார் வேலைகொடுக்கவேண்டியது கட்டாயம் என்று மீண்டும் கட்டளையிட்டனர். சுவிண்டன் துரை அதனையும் மறுத்து, 'வேதநாயகம் பிள்ளை மிகுந்த நோயாயிருப்பதாகவும், கீழ் முறை மன்றத்தாருடைய கொள்கையை நன்கு மதிக்கா விட்டால் வேலைகள் ஒழுங்காக நடைபெறுவென்றும், வேலை கொடுக்கும்படி மறுபடியும் கட்டளையனுப்பினுல் அக் கட்டளை வந்து சேரும்வரையிலும் வேதநாயகம் பிள்ளை உயிருடன் இருப்பார் என்பதுகூட ஐய'மென்றும் மேலிடத் திற்கு எழுதினர். இதைப்பார்த்தவுடன் மேலிடத்தாருக்கு மிகுந்த சினமுண்டாயிற்று. கீழ்முறை மன்றத்தலைவர் எழுதியது முற்றிலும் தவறென்றும் வேதநாயகம் பிள்ளைக்கு உடனே வேலை கொடுக்கவேண்டியதென்றும், மற்று மொருமுறை மறுத்தெழுதினுல் அவருடைய போக் கைப்பற்றி அரசினருக்கு அறிவிக்கப்படுமென்றும் கண்டிப் பான கட்டளையனுப்பினர்கள். மேலிடத்துக் கட்டளை யைக் கண்டதும் சுவிண்டனுக்கு மிகுந்த வருத்தமுண்டா யிற்று. அவர் விடுமுறை பெற்றுக்கொண்டு சீமைக்குச் சென்றார். செல்லும் வழியில் கப்பலில் இரத்தபேதி கண்டு இறந்தார்.

மீண்டும் வேலை பெறுதல்

சுவிண்டன் துரை சென்றபின்னர், ஆரீச் துரை என் பவர் சுவிண்டனுடைய இடத்திற்குவந்து வேலையில் அமர்ந் தார். அவர் மேலிடத்தார் கட்டளைப்படி வேதநாயகம் பிள்ளையை வேலையில் அமர்த்தி மேன்மையாக நடத்தி வந்தார்.

மீனாட்சிசுந்தரம் பிள்ளை நட்பு

ஓய்வு நேரங்களில் தமிழ் நூல்களைக் கற்றுப் பொழுது போக்கிக்கொண்டிருந்த வேதநாயகம் பிள்ளைக்கு, அந் நூல்களிலுள்ள ஐயத்தைப் போக்கிக்கொள்ளவும் புதிய நூல்களைக் கற்றற்கும் தக்க வாய்ப்பு ஏற்படவில்லை. அக் காலத்தில் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையும் திருச்சிராப்பள்ளியை அடைந்து அங்கு தங்கியிருக்கலானார். மிகுவிரைவில் இருவருக்கும் பழக்கம் ஏற்பட்டது. மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் தம் பேரன்பைப் பலவகைகளாலும் புலப்படுத்தினார். தாம் முன்னரே செய்து வைத்திருந்த பல செய்யுட்களையும் மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் படித்துக் காட்டினார். அப்பாடல்களின் அருமையும் பெருமையும் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் உள்ளத்தையுங் கவர்ந்தன. அப்பாடல்களைப் புகழ்ந்து,

"கலைபுகலும் பதமில்லாக் கடவுள்கொளத்
 தமையடைந்தோர் களிப்ப நாளும்
தொலைவில்சுவைப் பதமுதவு வேதநா
 யகவள்ளல் சூட்டுந் தூய
விலையில்பல பதத்துளொரு பதத்துளொரு
 பதமுணர்ந்த மெய்ம்மை யோரத்
தலைமையவ னிருபதமே பெறுவரவ
 ரெப்பதமும் தரவல் லாரே."

என்றொரு செய்யுளைப் பாடினார்.

ஆசிரியருக்கு உதவிபுரிதல்

மலைக்கோட்டைத் தாயுமானவர் கோயில் தருமபுர ஆதீனத்தாரின் ஆட்சிக்குட்பட்டது. அவ் வாதீனத்தாரால் கட்டளைத் தம்பிரானாக ஏற்படுத்தப்பெற்றிருந்தவர் சிலருடைய தூண்டுதலால் ஆதீனத்தாருடைய கட்டளைக்கு அடங்காமல் தான்தோன்றித் தம்பிரானாகச்

செயல்களைச் செய்யத்தொடங்கினார். ஆதீனத்தலைவர் அந்தக் கட்டளைத் தம்பிரான்மீது வழக்குத் தொடர்ந்தார். கட்டளைத் தம்பிரான் பக்கமாகவுஞ் சிலர் துணைசேர்ந்தனர். ஆதீனத்தலைவர் தம்முடைய உரிமைகளை விளக்கி ஒரு வேண்டுகோளை ஆங்கிலத்தில் எழுதி முறைமன்றத்தில் கொடுக்கவேண்டியதாக விருந்தது. அச் செயலினைச் செய்யுமாறு ஆதீனத்தலைவர் தக்கார் சிலரை மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் அனுப்பினார். அச் செயலை ஆற்றும் ஆற்றல் நன்கு அமைந்தவர் வேதநாயகம் பிள்ளையே என்று துணிந்த மீனாட்சிசுந்தரம் பிள்ளை வேதநாயகம் பிள்ளையிடஞ் சென்றார். எதிர்க்கட்சியாரும் அத்தகைய விளக்க வுரையை எழுதித்தர வல்லவர் வேதநாயகம் பிள்ளையே என்று முடிவுசெய்து அவரிடஞ்சென்று செய்தியைக் கூறிப் பெரும்பொருளும் தருவதாக உரையாடிக் கொண்டிருந்தனர். பின்னர்ச் சென்ற மீனாட்சிசுந்தரம் பிள்ளை வேறோர் இடத்தில் இருந்துகொண்டு,

"மையேறுங் கண்ணி யொருபாகன் காரிய மற்றிதுதான்
பொய்யே யலமுகிற் கேதுகைம மாறு பொறையினொடு
மெய்யே யுருக்கொள் புகழ்வேத நாயக வித்தகன்றன்
கையே யுனைப்புகழ் வேன்புகல் வேறிலை கண்டுகொள்ளே."

என்னுஞ் செய்யுளை எழுதி ஓரன்பர் மூலமாக அனுப்பித் தம்முடைய கருத்தையும் புலப்படுத்தினார். ஆசிரியரின் கட்டளைக் கவித்துறையைக் கண்ட வேதநாயகம் பிள்ளை எதிர்க்கட்சிக்காரர்களுடைய வேண்டுகோளை மறுத்துவிட்டுத் தம்முடைய ஆசிரியர் விரும்பியவாறு முழுக் கருத்தையுஞ் செலுத்தி விளக்கவுரை ஒன்றை ஆங்கிலத்தில் எழுதிக்கொடுத்தார். அது வழக்குமன்றத்தில் கொடுக்கப்பட்டது. உண்மையை உள்ளவாறுணர்ந்த

முறைமன்றத்தார் ஒழுங்குமுறைப்படி வழக்கை ஆதீனத் தலைவர் பக்கமாக முடிவுசெய்தனர்.

கோவை பெறுதல்

வேதநாயகம் பிள்ளையின் அன்புடைமையும் பண்புடைமையும் நண்புடைமையும் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் உள்ளத்தைக் கவர்ந்தன. வேதநாயகம் பிள்ளைமீது கோவை ஒன்றைப் பாடினார். நானூற்று முப்பத்தெட்டுச் செய்யுட்களைக்கொண்ட அவ்வைந்திணைக் கோவை, 'குளத்தூர் வேதநாயகன் கோவை,' எனவும், 'குளத்தூர்க் கோவை,' எனவும் வழங்குகிறது.

**தெய்வத் திறம் பேசல்**

"எறியுங் கலிதன் தலைசாய்த் திடத்தமி ழின்அருமை
அறியும் புருட மணிவேத நாயக அண்ணல்வெற்பில்
செறியும் படிநம் இருபே ரையுமின்று சேர்த்ததெய்வம்
முறியும் படியிடை யேசெய்யு மோசற்று முன்னிலையே."

**கற்றறி பாங்கன் கழறல்**

"சொற்றது நாட்டுந் துரைவேத நாயக துங்கன்வெற்பில்
உற்றது சொற்றதென் காணு(டு) அழல்புக்(கு) உலாவல்ஒத்த(து)
இற்றது வென்னிடைக் கிவ்வாறு வாடுவை யேற்கலைகள்
கற்றதுங் கேட்டதும் நன்றுநன் றுமெங்கள் காவலனே."

என்பன அக் கோவையைச் சேர்ந்த இரு செய்யுட்களாம். இக் கோவையைக் கேட்ட வேதநாயகம் பிள்ளை தக்க நன்கொடை வழங்கியதுடன், தம் ஆசிரியரைத் தம்முயிரினும் மேலாகப் போற்றி வழிபாடு செய்தலையும் மேற்கொண்டார்.

முன்சீப் வேலைக்குத் தேர்தல்

அக் காலத்தில் முன்சீப் முதலிய வேலை பார்க்க விரும்புகிறவர்கள், மாவட்ட வழக்குமன்றத் தலைவர்களால்

ஆராய்ச்சி செய்யப்படுவது வழக்கம். ஆயிரத்து எண்ணூற்று ஐம்பத்தாறும் ஆண்டில் கும்பகோணத்தில் பீச்சாம்புத் துரை என்னும் முறைமன்றத் தலைவர்முன் அறுபது எழுபது பேர் ஆராய்ச்சி செய்யப்பெற்றனர். அவர்களுள், பிற்காலத்தில் சென்னை உயர்தர முறைமன்றத் தலைவராகவிருந்த முத்துசாமி ஐயர், இரகுநாதராவ், வேதநாயகம் பிள்ளை ஆகிய மூவர்மட்டும் முன்சீப் வேலைக்குத் தகுதியானவர்களென்று தேர்ந்தெடுக்கப்பெற்றனர்.

முன்சீப் வேலை

தரங்கம்பாடி ஆங்கிலேயர் பொறுப்புக்குள்ளான காலத்தில், அங்கு அறுபது ரூபா ஊதியத்தில் ஒரு நாட்டு வழக்குமன்றத் தலைவர் இருந்தார். அவருக்கு அந்நாளில் பிரின்சிபால் சதிரமீன் என்று பெயர். அவர் எதிர்பாராதவாறு இறந்து போகவே அந்த வேலை ஆளற்றதாக விருந்தது. மாவட்ட முறை மன்றத்தலைவர் அவ்வேலைக்குத் தக்காரை ஏற்படுத்த எண்ணினார். முன்சீப் முதலிய முறைமன்றத் தலைவர் வேலைத்தேர்வில் தேறியிருந்த முற்கூறிய மூவரையும் அழைத்து, அவ்வேலையில் அமர யாருக்கு விருப்பமென்று உசாவினார். ஊதியம் குறைவாக இருக்கிறதென்னும் காரணம் பற்றி முத்துச்சாமி ஐயரும் இரகுநாத ராவும் உடன்படவில்லை. வேதநாயகம் பிள்ளை அவ்வேலையைப் பார்ப்பதாக உடன்பட்டார். வேதநாயகம் பிள்ளையைப்பற்றி மாவட்ட முறை மன்றத் தலைவர் மேலிடத்துக்கு எழுதினார். அவ்வேலை பிரின்சிபால் சதிரமீன் என்னும் பெயர் மாற்றப்பட்டு முன்சீப் என்னும் பெயருடனும் நூறு ரூபா ஊதியத்துடனும் வேதநாயகம் பிள்ளைக்குக் கிடைத்தது. தரங்கம்பாடியிற் சின்னாள் அலுவல் பார்த்தபின் சீகாழிக்கு மாற்றப்பட்டார்.

நீதிநூல் வெளியிடுதல்

வேதநாயகம் பிள்ளை அவ்வப்போது தமக்குத் தோன்றிய அறநெறிகளையெல்லாஞ் செய்யுளாகப் பாடி வைத்திருந்தார். சீகாழியில் இருக்கும்போது பெரும்புலவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அங்கு வந்து சின்னாட்கள் தங்கினார். அப்போது வேதநாயகம் பிள்ளை தாம் பாடிவைத்திருந்த அறநெறிச் செய்யுட்களை யெல்லாம் தம் ஆசிரியரிடங்காட்டிச் செப்பஞ்செய்து, அவருடைய சிறப்புப் பாயிரத்துடன் நீதிநூல் என்னும் பெயரோடு, ஆயிரத்து எண்ணூற்று ஐம்பத்தெட்டாம் ஆண்டிலே முதற்பதிப்பாக அச்சிற் பதிப்பித்து வைத்தார். பின்னர் அந் நீதிநூல் மேலும் இருநூறு பாடல்கள் புதிதாகச் சேர்க்கப்பட்டு ஈராண்டுகட்குப்பின் மறுபதிப்பு வெளியிடப்பெற்றது.

ஆசிரியரைக்கொண்டு சீகாழிக்கோவை பாடச்செய்தல்

பெரும்புலவர் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் பெருமையை நன்குணர்ந்த சீகாழிச் செல்வர்கள் பலர், காழிப் பெருமான்மீது கோவை யொன்று பாடுமாறு வேதநாயகம் பிள்ளையைக்கொண்டு மீனாட்சி சுந்தரம் பிள்ளையை வேண்டிக் கொண்டனர். மீனாட்சி சுந்தரம் பிள்ளையும் அதற்கிசைந்து சீகாழிக் கோவைபாடினார். அக்கோவை வேதநாயகம் பிள்ளையின் தலைமையில் சீகாழிக் கோயிலில் அரங்கேற்றஞ் செய்யப்பட்டது. அவ்வரங்கேற்ற காலத்தில் புல்லறிவாளர் சிலரின் சிறுமையான செய்கைகளை யெல்லாம் தடுத்து அக்கோவை அரங்கேற்றம் இனிது நடைபெறுமாறு செய்ததுடன்,

“இன்பாவிற் கோவைசொன்ன மீனாட்சி சுந்தரப்பேர்
இறைவ யானும்
உன்பாவிற் கவிசொல்வேன் என்கவிபார்ப் போரதைமீண்(டு)
ஓராது(து) ஆன்றோர்

முன்பாச்சொல் நூல்களையே துதிப்பருன்பா உணர்வோர்கள்
முன்னோர் நூலைப்
பின்பாகச் சொலிவெறுப்பர் நல்லவன்நா ணேநீயோ
பேசு வாயே.''
[இன்பா - இனியபா.] (க)

"விண்ணேறு மாதவனேர் மீனாட்சி சுந்தரவில்
வேளே நீ சொல்
எண்ணேறு கோவையினைப் புகழயான் திறமிலேன்
எனினும் உன்சீர்
மண்ணேறும் வானேறும் மதியினர்தம் நாவேறும்
வகையால் உன்னைக்
கண்ணேறு மேவாமற் கறையேறும் என்புகழுங்
கைக்கொள் வாயே.''
[எண்ஏறு - மதிப்புயர்ந்த. கண்ணேறு - கண்மிச்சில் (பார்வைக் குற்றம்)] (உ)

"கானோடு கமழ்தாரான் மீனாட்சி சுந்தரமால் காழிக்கோவை
தேனோடு பாலோடு நிகருமவன் பிரதாபம் சீர்த்தி யோங்கி
வானோடு மண்ணோடு மற்றோடும் வகையின்றி வடிவிரண்டாய்
மீனோடு வான்திரியும் பானுமதி என்றுலகோர் விளம்பு வாரால்.''
[கான் - மணம். பிரதாபம் - பெருமை.] (ங)

"தண்டமிழ்முந் நீர்பெருகி மீனாட்சி சுந்தரப்பேர்த்
தருமக் கொண்டல்
தொண்டர்கள்சூழ் சிரபுரத்தில் பொழிகோவை எனுமமுத
தூய வாரி
மண்டலமும் விண்டலமும் கரைபுரண்டு திரைசுருண்டு
வருதல் நோக்கி
அண்டர்தொழும் புகலியிறை தோணியுற்றான் அஃதின்றேல்
அமிழ்ந்து வானே.''
[முந்நீர் - கடல். சிரபுரம் - சீகாழி. தோணிபுரம் என்பது சீகாழிக் கொரு பெயர்.]

என்பன போன்ற இருபது செய்யுட்களால் சிறப்புப்பாயிரமும் பாடினார். வேதநாயகம் பிள்ளையின் சிறப்புப்பா

பிரத்தைக் கேட்டு மகிழ்ந்த மீனாட்சி சுந்தரம் பிள்ளை வேத நாயகம் பிள்ளையின் அன்புடைமையைப் பாராட்டி,

"நாட்டுக்கு நல்லகுளத் தூர்வேத நாயகநன்
னும மாலே
வீட்டுக்கு வாயிலெனுங் காழிக்கோர் கோவையினை
விளம்பச செய்தே
ஏட்டுக்கு அடங்காத துதிகவிகள் சொற்றனைநின்
இயற்பாட் டின்னோர்
பாட்டுக்கு நான்செய்த தொன்றேபல் செய்தாலும்
பற்றா வன்றே."

என்னும் ஒரு செய்யுளைப் பாடினார். கோவையரங்கேற்றஞ் செய்யப்பட்டபின் பல செல்வர்களையும் கொண்டு தகுந்த வாறு பொருள் திரட்டிக் கொடுத்துப் பேருதவி செய்தார்.

**உண்டிகொடுத்தோர் உயிர்கொடுத்தோரே**

1860-ஆம் ஆண்டில், வேதநாயகம்பிள்ளை சீகாழியினின்றும் திருமயிலாடுதுறை (மாயூரம்)க்கு மாற்றப்பட்டார். மயிலாடுதுறையில் வேதநாயகம்பிள்ளை இருந்த பொழுது அறங்கள் பல புரிந்தார் எளிய குடும்பங்கள் பலவற்றைக் காப்பாற்றினார். வறுமையில் வாடியுழன்றவர்கள் மக்கள் பலர் கல்விகற்றற்கு ஏற்பாடு செய்தார். சுற்றத்தார் பலரைக் கிறித்துவமதத்திற் சேர்த்துத் தக்க உதவி புரிந்தார். ஓராண்டு கொடிய வற்கடம் உண்டாயிற்று. பசிப்பிணி என்னும் பாவியின் தீமையால் பலர் இறந்தும் ஒழிந்தார்கள். அக்காலம் வேதநாயகம் பிள்ளை தம் இருப்பிடத்திற்கு அண்மையில் கஞ்சித்தொட்டி ஒன்று ஏற்படுத்தி, அதில் நாளொன்றிற்கு ஆயிரக்கணக்கான மக்களுக்கு உணவிட்டுப் பல எளியோர்களின் உயிரைக் காப்பாற்றி, 'உண்டிகொடுத்தோர் உயிர்கொடுத்தோரே' என்னும் பெரியார் வாக்கை உண்மைப்படுத்தினார். அவ் வற்கடம் அகலும்படி கடவுள்மீது இசைப்பாட்டு ஒன்றை

டம் பாடினர். அன்றன்று வேதநாயகம்பிள்ளை மக்கள் மீது காட்டிய தண்ணளி அனைவருடைய உள்ளத்தையும் அள்ளியது. வேதநாயகம்பிள்ளையின் மேதகு செயலைக் கண்ட கோபாலகிருட்டிண பாரதியார் என்னும் இசைப் புலவர், 'நீயே புருடமேரு' எனத்தொடங்கும் இசைப் பாட்டு ஒன்றை அவர்மீது பாடி அவரை மகிழ்வித்தார்.

தேசிகர் செயலைச் சிறப்பித்துப்பாடல்

மேற்கூறிய கொடிய வற்கட காலத்திலே திருவாவடுதுறை ஆதீனத் தலைவராக எழுந்தருளியிருந்த சுப்பிரமணிய தேசிகர் வறுமையால் வாடிய மக்கள் இறந்துபடாமல், உணவு உடை பொருள் முதலியவைகளை மிகுதியாக வழங்கிப் பேரறம் புரிந்தார். தேசிகரின் அறச்செயலை யறிந்த வேதநாயகம்பிள்ளை மேலும் தேசிகரை அறநெறியில் ஆற்றுப்படுத்தவேண்டு மென்னும் எண்ணத்துடன்,

"எரியொத்த பஞ்சம் இடங்கரை யொத்த (து) இடங்கர்பற்றும்
கரியொத்த தனபல் உயிர்களப் பஞ்சக் கராமடிக்க
அரியொத் தனன்சுப் பிரமணி யையன் அரிசக்கரம்
சரியொத் தனவவன் ஈந்திடும் பொன்வெள்ளிச் சக்கரமே."

[எரி தீ. இடங்கர்-முதலை. கரி-யானை. அரிசக்கரம்-திருமால் ஆழி, பொன். வெள்ளிச்சக்கரம்-பணம்.]

"கேரென்றும் இல்சுப் பிரமணி யாதிப னின்னைப் பல்லோர்
காரென்று சொல்வர்அக் காரும்வஞ் சித்தவிக் காலத்திலே
ஊரென்றும் வாழ அறுசுவை உண்டி உதவியுன் றன்
பேரென்று நிற்கச்செய் தாய்உனைக் காரெனல் பேதைமையே."

[கார்-முகில். பேதைமை-அறிவின்மை.]

"மாமேக நீரொன்றை யேதருஞ் சுப்ர மணியப்பெயர்ப்
பூமேகம் அன்னமும் சொன்னமும் இன்னமும் பூண்துகிலும்
மீமேக முட்டும் வளமாடம் பூமி விடைபசுவும்
தோமேக வேதமு நீதமும் போதமுந் தூவிடுமே."

[மாமேகம் - முகில். பூமேகம் - நிலத்திலெழுந்தருளிய முகில், சொன்னம்-பொன். மீமேகம் - மேலிடத்துமுகில். விடை - காளை, தோம்கெ-அறிவின்மைக்குற்றம் நீங்க. வேதம் - மறைப்பொருள், நீதம்-நன்னெறி. போதம்-மெய்யறிவு ]

"படிபடி யாகப்பொன் கொட்டிநெற் கொள்ளுமிப் பஞ்சத்திலே
பிடிபிடி யாக மணியுங் கனகமும் பெட்புறவோர்
மடிமடி யாக்கட்டிச் செல்லத்தந் தான்பெரு வள்ளலென்றே
குடிகுடி யாகத் தொழுஞ்சுப்ர மண்ய குணாகரனே."

[பெட்புறவோர்-விரும்புவோர். குணாகரன் - நற்குணக்கடல்.]

என்பன போன்ற பல செய்யுட்களைச் செய்தனுப்பினர்.

சித்தாந்த சங்கிரகம்

ஆங்கில மொழியிலிருந்த உயர்தர நீதிமன்றத்துத் தீர்ப்புக்கள் சட்டதிட்டங்கள் முதலானவைகளைத் திரட்டி, அனைவருக்கும் எளிதில் விளங்கும்படியாகத் தமிழில் மொழிபெயர்த்துச் சுருக்கமான நூல்வடிவில் 1862 ஆம் ஆண்டில் வெளிப்படுத்தினர். அந்நாளில் ஆங்கிலம் நன்குணராத வழக்கறிஞர்பலர் இருந்தமையின் அவர்கட்கெல்லாம் அந்நூல் மிகவும் பயன்பட்டது. அந்நூலுக்குச் சித்தாந்த சங்கிரகம் என்று பெயர் கொடுத்தார். அந்நூலைக் கண்டபின்னரே அத்தகைய நூல்கள் பல வெளிவரலாயின.

பெண்மதிமாலை

பெண்கள் கல்விகற்கவேண்டியது கட்டாயமென்பதைப்பற்றியும், பெண்கள் நடக்கவேண்டிய ஒழுங்குமுறைகளைப்பற்றியும், அவர்களை நடப்பிக்கவேண்டிய வகைகளைப் பற்றியும், பாடல்களும் உரைநடையும் அமைந்த ஒரு நூலை 1869 ஆம் ஆண்டில் எழுதி வெளியிட்டார். மறு ஆண்டில் அந்நூல் மேலும் விரிவாக எழுதப்பட்டு வெளிவந்தது.

வேலையினின்றும் விலகுதல்

1872 ஆம் ஆண்டில் நெல்சன் துரை என்பவர் தஞ்சை மாவட்ட வழக்குமன்றத் தலைவராக வந்தார். சில பொறாமைக்காரர்களுடைய கோளினால் அந்த நெல்சனுக்கும் வேதநாயகம்பிள்ளைக்கும் மனக்கசப்பு மிகுந்துவந்தது. வேதநாயகம் பிள்ளையை வேலையைவிட்டு விலக்க வேண்டுமென்று மேலிடத்திற்கு எழுதினார். அப்படியே விலக்கிவிடுமாறும் மேலிடத்திலிருந்து கட்டளை பிறந்தது. செய்தியை உணர்ந்த வேதநாயகம்பிள்ளை எல்லாச் செய்திகளையும் விளக்கமாக மேலிடத்திற்கு எழுதினார். மேலிடத்தார்கள் உண்மையை நன்கு ஆராய்ந்துணர்ந்ததுடன் வேதநாயகம்பிள்ளை குற்றமற்றவரென்றும் அறிந்து 'உதவி ஊதியம் பெற்றுக்கொள்ள விருப்பமா?' என்று கேட்டனர். வேதநாயகம்பிள்ளைக்கு அடிக்கடி உடல்நலமின்மை ஏற்பட்டுக்கொண்டிருந்தபடியால் வேலையினின்றும் விலகிவிட எண்ணித் தம் விருப்பத்தைத் தெரியப்படுத்தினார், திங்கள் ஒன்றுக்கு நூறுரூபா உதவி ஊதியத்துடன் வேலையினின்றும் ஓய்வு கிடைத்தது.

"தறைநீங் கினவுத்தி யோகத்தைக் கைவிட்ட தன்மையினால்
சிறைநீங் கினம்பல தீயர்க்குள் ளாகிச் சிறுமையுறும்
குறைநீங் கினந்துட்டர் கூட்டமும் நீங்கினங் கூடுந்துன்பப்
பொறைநீங் கினநங் கறைநீங் கினமகிழ் பூணெஞ்சமே."

[தறை - நிலம். சிறை - சிறையிருக்கின்றாற்போன்ற நிலையிலிருக்குந் தன்மை. பொறை - சுமை. கறை - குற்றம்.]

"தண்டுகொண் டோட்டினும் போகாமல் நம்மைத் தரிசிக்கவே
பண்டுவந் தோரின்று தாம்பூலம் வைத்துப் பரிந்தழைத்தும்
திண்டுமின் டுஞ்சொல்லி வாரா திருந்தனர் செய்கையெல்லாம்
கண்டுகொண் டோமினித் தொண்டுகொண் டோம்நங் கடவுளுக்கே"

[தண்டு - தடி. பண்டு - முதலில்.]

"வீடு நிலங்கள் பொருளைவிற் பரிந்த மேதினியில்
நீடுமெண் சாண்மெய்யை யோர்சாண் உதர நிமித்தம்விற்று
நாடு மரசர்க் கடிமையென் றேமுன்பு நாங்கொடுத்த
ஏடு கிழிபட்ட தன்றோ உத்யோகம் இழந்ததுவே."
[மேதினி - உலகம். உதரம் - வயிறு.]

"நீருள்ள மட்டும் குளநாடும் பக்கி நிதிமடவார்
சீருள்ள மட்டும் தொடர்வார்உத் யோக சிலாக்கியமாம்
பேருள்ள மட்டும் உறவாடிப் பின்பு பிரிந்திடுவார்
பாருள்ள மட்டும் பழிச்சுமை தாங்கிய பாதகரே."
[பக்கி-பறவை. நிதி மடவார்-விலை மாதர்கள். பார்-உலகம்.]

"தாயிலன் புடைய நின்னைத் தரிசித்தல் சாலும் வேறு
கோயிலேன் குளமேனென் றோர் கூப்பிட்டும் வாரார் முன்னம்
வாயிலை யறியா நல்லோர் வந்தின்னே நள்ள லுற்றார்
ஆயிலுத் யோக நீப்பால் அறிந்தனம் உலகை யம்மா."
[நள்ளலுற்றார் - பொருந்தலானார்கள்.]

"அருங்கால் பதரை அகற்றல்போற் பாரில்
ஒருங்கா அதிகாரம் ஓய—நெருங்கிவரும்
துட்டரெலாம் நம்மைவிட்டுத் தூரவகன் றார்நம்பால்
சிட்டரெலாம் வந்தார் தெரிந்து."

அலுவலை விட்டு நீங்கிய பின்னர்ப் பொல்லாதவர்கள் தம்மை ஒரு பொருட்படுத்தி நெருங்கி வராமையையும் நல்லவர்கள் தம்மை நாடிவருதலையுங் கண்டபோது, இத்தகைய பாடல்கள் பல உள்ளத்தில் நின்றும் புறப்பட்டன. அவைகளைப் பாடி மகிழ்ந்திருந்தார்.

திருவருளந்தாதி முதலியன

1873-ஆம் ஆண்டில் திருவருளந்தாதி, திருவருண் மாலை, தேவமாதா அந்தாதி என்னும் மூன்று நூல்களைப் பாடி அச்சிற்பதிப்பித்து வெளியிட்டார். அவைகள் கிறித்துமத வரலாறுகளடங்கியவையாயும், கடவுள் அன்பை வளர்ப்பவையாயும் அமைந்தன.

பெரியபாளையத்தம்மன் பதிகம்

சென்னைக்கடுத்த பெரியபாளையத்திற்கு ஒருமுறை நண்பர்கள் சிலருடன் சென்றிருந்தார். அப்போது ஓரன்பர் அம்மன்மீது ஒரு பதிகம் பாடவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, அவ்வாறே ஒரு பதிகம் கற்பனை நயமும் உருக்கமும் அமைந்ததாகப் பாடினார்.

சர்வ சமய சமரசக் கீர்த்தனை

பற்பல சமயங்களினும் பாடிய இன்னிசைப் பாடல்கள் இருநூறுவரை இருந்தன. அவைகளை ஒன்று சேர்த்து "சர்வ சமய சமரசக் கீர்த்தனை" என்னும் பெயருடன் 1878-ஆம் ஆண்டிலே வெளிப்படுத்தினார். அஃது அனைவரானும் என்றென்றும் போற்றப்பட்டுச் சிறந்து விளங்குகின்றது.

பிரதாப முதலியார் சரித்திரம்

தமிழ்மொழியில் முதன்முதலாகக் கற்பனைத் தொடர் கதை எழுதிய பெருமையும் வேதநாயகம் பிள்ளையைத் தான் சேர்ந்தது. 1876-ஆம் ஆண்டில் பிரதாப முதலியார் சரித்திரம் என்னும் புதுமைத் தொடர்கதையை எழுதி வெளியிட்டார். நகைச்சுவை மிக்க அக்கதை இன்றுவரை அனைவரானும் போற்றிப் படிக்கப் பெறுவதுடன் ஆங்கிலத்திலும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. தமிழில் எழுதப்பெற்று ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட முதலாவது கற்பனைத் தொடர் கதை இதுதான்.

சுகுணசுந்தரி சரித்திரம்

1887-ஆம் ஆண்டில் சுகுணசுந்தரி சரித்திரம் என்றொரு கதையையும் எழுதி வெளிப்படுத்தினார்.

சத்தியவேதக் கீர்த்தனை

கிறித்துமதத் தொடர்பாகப் பல சமயங்களினும் பாடியிருந்த பல இசைப்பாடல்களை ஒன்றுபடுத்திச் சத்திய

வேதக் கீர்த்தனைகள் என்று பெயரிட்டு, அவைகளையும், தேவதோத்திரமாலை முதலிய பிற பாடல்களையும் 1889 ஆம் ஆண்டிலே ஒரு நூலாக வெளியிட்டார்.

திருவாவடுதுறைப் பழக்கம்

வேதநாயகம் பிள்ளையின் கல்விப்பெருமையை நன்குணர்ந்த சுப்பிரமணிய தேசிகர், பிள்ளையைத் திருவாவடுதுறை ஆதீனத்திற்கு ஒருமுறை அழைக்கவேண்டுமென்று விரும்பினர். பெரும்புலவர் மீனுட்சிசுந்தரம் பிள்ளையையும் அழைத்துவரும்பொருட்டு அனுப்பினர். மீனுட்சிசுந்தரம் பிள்ளையும் அவ்வாறே சென்று, சுப்பிரமணிய தேசிகர் திருவாவடுதுறையில் எழுந்தருளியிருப்பதாகவும் ஒருமுறை திருவாவடுதுறைக்கு வந்து செல்லவேண்டுமென்று கட்டளையிட்டிருப்பதாகவும் கூறினர். அதனைக் கேட்ட வேதநாயகம் பிள்ளை,

"விதியிருந்த பதியெனுஞ்சுப் பிரமணிய தேசிகமெய்ஞ்
ஞானக் குன்றே!
துதியிருந்த நின்புலவன் சொல்வழியே பல்வழியும்
தோன்றும் நீயென்
மதியிருந்தாய் பிரிந்திடவும் மனம்பொருந்தாய் எனவிருந்தேன்
வான்கோ முத்திப்
பதியிருந்தாய் எனவந்த மாபுலவன் பொய்சொலவும்
படித்தான் மாதோ."

[மதியிருந்தாய் - மனத்தில் எழுந்தருளியிருந்தாய். வான்கோ முத்திப்பதி - சிறந்த திருவாவடுதுறை.]

என்னுஞ் செய்யுளைச் செய்தனுப்பியதுடன் தாம் மற்றொருமுறை வருவதாகவுஞ் சொல்லியனுப்பினர். செய்யுளைக் கண்டு மகிழ்ந்த தேசிகர், தாம் துறவறநெறியில் இருப்பதால் இல்லறத்தார்களுடைய இடங்களுக்குச் செல்லமுடியாமல் இருக்கிறதென்றும், துலாமுழுக்குக்குத் திருமயி

லாடுதுறைக்கு (மாயூரம்) வருவதாகவும், அங்கு வந்து தம்மைப் பார்க்குமாறும் செய்தி சொல்லியனுப்பினர். இச் செய்தியைக் கேட்ட வேதநாயகம் பிள்ளை,

"இல்வாழ்வை நீத்தற மேற்கொண்ட நீபிறர் இல்லிடத்தில்
செல்வாழ்வு சற்றும் விரும்பாயென் பாரிது சித்திரமே
புல்வாழ் வுடையஎன் வீடெங்கும் நீபரி பூரணனாய்
நல்வாழ்வுற் றாய்சுப் பிரமணி யாநந்த நற்றவனே."

என்னும் செய்யுளைப் பாடியனுப்பியதுடன் அவ்வாறே திருமயிலாடுதுறையிற் பார்ப்பதாகவும் செய்தியனுப்பினர். பின்னர்க் குறிப்பிடப்பெற்ற காலத்தில் இருவரும் ஒருவரையொருவர் கண்டு மகிழ்ந்தனர். பின்னர் அடிக்கடி திருவாவடுதுறை செல்லும் பழக்கம் ஏற்பட்டது. ஒருமுறை திருவாவடுதுறை சென்று வீட்டுக்குத் திரும்பிய பின், அவருடைய உள்ளம் ஆவடுதுறைக் காட்சிகளையே பற்றி நின்றது. அதைக் குறித்து,

"கருதியோர் உருக்கொண் டன்ன சுப்பிர மணிய மேலோய்
சுருதியின் றொருகால் உன்னைக் காணலாம் எனும்அ வாவால்
பொருதியென மனம்பின் னீர்க்கப் பொறையுறும் பண்டி பூட்டும்
எருதுகள் முன்னை ஈர்கக என்பதி அடைந்தேன் நானே."

[பொருதி - போர் செய்து. ஈர்க்க - இழுக்க. பொறை-சுமை. பதி - ஊர்.]

"சூர்வந்து வணங்கு மேன்மைச் சுப்பிர மணிய தேவே
சேர்வந்து நின்னைக் கண்டு நேற்றிராத் திரியே மீண்டேன்
ஊர்வந்து சேர்ந்தேன் என்றன் உளம்வந்து சேரக் காணேன்
ஆர்வந்து சொலினுங் கேளேன் அதனையிங் கனுப்பு வாயே."

[சூர் - சூரர்கள்.]

என்னுஞ் செய்யுட்களைச் செய்து அனுப்பினர்.

எண் அமைந்த பாட்டு

ஒருநாள் அறிஞர் சிலருடன் ஒரு கோயிலுக்குச் சென்றார். அப்போது ஒரு நண்பர் ஒன்றுமுதல் பத்து

வரையிலுள்ள எண்கள் முறையே அமைந்துவரக், கடவுள் வணக்கமாக ஒரு செய்யுள் இயற்றவேண்டுமென்று வேண்டிக்கொண்டார். அவருடைய வேண்டுகோளுக்கிசைந்து,

"ஒன்றிரண்டு மூன்றுதலை உருவுடையாய்
அருவுடையாய் உலக மீது
நின்றிரங்கு நான்குதலை அஞ்சுதலை
அறுதலையும் நேசம் பூண்டு
நன்றிதனில் எழுதலையு ஞானமெட்டுத்
தலையுமருள் நல்லோர் போற்றும்
பொன்றிகழு நின்னடிக்கொன் பதுபத்துத்
தலைவணக்கம் புரிந்திட் டேனே."

என்னுஞ் செய்யுளைப் பாடினார்.

காளிப் பாட்டு

ஒருநாள் நண்பர்கள் சிலருடன் வெளியே சென்றார். ஒரு காளி கோவிலில் உருவத்திற்குமுன் பெரும்படையல் போட்டுப் பலர் பூசனை செய்துகொண்டிருந்தனர். அப்போது,

"அன்னம் பசித்தவர்க் கீயீர் பசிபற் றவன்சிலைக்கு
முன்னம் படைத்துப்பி னுண்பீர் சிறிதச சிலையருந்தில்
இன்னம் படைத்திடு வீர்கொல் சிலயினை எசிச்சின்ன
பின்னம் படவுடைக் காதிருப் பீர்கொல்மெய் பேசுங்களே."

காளைப் பாட்டு

ஒரு முதலியார் வேதநாயகம் பிள்ளையினுடைய வண்டியிற் பூட்டுவதற்காக ஒரு மாடு வாங்கிக்கொடுத்தார். அம்மாடு ஒரு பெருஞ்சண்டி. நல்ல தீனியுண்டுவிட்டு வண்டியிற் போகாமல் சண்டித்தனம் செய்தது. அதைக்குறித்து,

" இட்டமுடன் முதலியார் வாங்கிவந்த
காளைதினம் இருபோர் தின்னும்
சட்டமுடன் கொள்ளுண்ணும் புல்லுண்ணும்
அதைப்பண்டி தன்னிற் பூட்டக்

கிட்டவரின் முட்டவரும் தொட்டவர்மே
லேகழியும் கீழே வீழும்
எட்டாள்கள் தூக்கிடினும் தடிகொண்டு
தாக்கிடினும் எழுந்தி ராதே."

என்னுஞ் செய்யுளைப் பாடினார்.

தனிப் பாடல்கள் பல

மற்றும் அவ்வக்காலங்களில் இவர் பாடிய தனிப் பாடல்கள் பல. அழகும் நகைச்சுவையும் மிக்க அப் பாடல்கள் தனிச் செய்யுட் சிந்தாமணியிற் சேர்க்கப்பெற் றுள்ளன.

நகரவைத் தலைவர்

வேதநாயகம் பிள்ளை முன்சீப் அலுவலை விட்டபின்பு பொதுமக்களுடைய நன்மையை நாடித், திருமயிலாடு துறை நகரவையில் தலைவராக அமர்ந்து ஊருக்குப் பல நன்மைகளைச் செய்தார். கடவுளிடத்து அன்பும் எளியவர்களிடத்தில் இரக்கமும் அமைந்த இவருடைய அரும் பெருந்தொண்டு அனைவராலும் போற்றிப் புகழப் பெற்றது.

இறுதிக்காலம்

இறுதிக் காலத்தில் உடலில் அதைப்பு என்னும் ஒரு வகை நோய் இவருக் குண்டாயிற்று. பல ஆங்கில மருத் துவர்கள் மருத்துவம் புரிந்துங் குணப்படவில்லை. இவ் வுலகத்தைவிட்டுத் தாம் அகல்வது உறுதியென்பதை யறிந்த இவர் தமக்கு வேண்டிய நண்பர்களிடத்திலெல் லாம் தாம் வேற்றாருக்குப் போவதாகக்கூறி விடைபெற் றுக்கொண்டார். இறுதியில் 1886-ம் ஆண்டு ஜூலைத் திங்கள் 21-ஆம் நாள் இரவு பதினொரு மணிக்குத் தம் முடைய அறுபத்துமூன்றும் அகவையிலே, தம்மைச் சுற்றி

யிருந்த அனைவர்களையும் அப்பாற் போகுமாறு கூறிவிட்டுப் பாதிரிகளை யழைப்பித்துத், தம்முடைய இறுதிச் சடங்குகளைச் செய்வித்துக்கொண்டு இவ்வுலக வாழ்வை நீத்தார். வேதநாயகம் பிள்ளையின் பிரிவு அறிஞர்களுக்கும் வறிஞர்களுக்கும் பெருந்துன்பத்தை யளித்தது.

கையறு நிலை

சென்னைச் சுப்பராயச் செட்டியார் என்பவர்,

"கோனாட்டு வேளாளர் குலத்துதித்தோன் மநுநீதி
கோடா தோங்கத்
தானாட்டு மதிகாரந் தலைநின்றோன் அதுபோல
தமிழ்நூல் ஆய்ந்து
தேனாட்டுஞ் சுவைபழுத்த தீஞ்சொலால் நீதிநூல்
திகழச் செய்தோன்
வானாட்டும் புகழ்மிக்கோன் வேதநா யகவள்ளல்
வைய மீது,"

"கற்றவரும் மற்றவருங் களிகூரக் கலிப்பகையைக்
கடிந்து போக்கி
அற்றவர்க்கோர் அருநிதிபோன் றுயர்வாழ்வில் அமர்ந்திருந்து
விரோதியாண்டில்
உற்றவருங் கடகமதி யோரேழாந் திகதியுறும்
ஒளிவா ரத்தில்
பற்றவருங் கடவுள்பதம் அடைந்துய்ந்தான் பண்ணவர்வாழ்த்
தெடுப்ப மாதோ"

என்றும், புதுவை வித்துவான் சவராயலு நாயகர் என்பவர்,

"அந்தோவெங் கண்மணியே அரும்புலவர் சிகாமணியே
அணியே என்று
நந்தாத விண்மணியே நாவலவ ருண்மணியே
நடுநி யாயஞ்
சிந்தாமற் சரிநீதி புரிவேத நாயகநற்
செம்ம லேயு
வந்தாதி நாதனிடம் அணுகிவிட்டாய் யாங்கள்மிக
அயர்கின் றேமே."

"மதினியில் உயர்ந்தவே ளாண்குளத்தார்க் கோனாட்டு
　　வேளா ளர்க்குள்
சோதியெனத் திகழ்வேத நாயகமால் சவரிமுத்துத்
　　தூயோன் சேயாய்
ஓதுமா யிரத்தெண்ணூற் றிருபத்தா றுமாண்டக்
　　டோபர் மாதம்
ஆதிபரன் அருளால்வந் தறுபான்மூன் றுண்டுநின்
　　றவற்சேர்ந் தானே."

எனவும், மற்றும் பலர் பலவகையாகவும் கையறுநிலைகள் பாடி இரங்கி வருந்தினர்.

வேதநாயகம்பிள்ளை இயற்றிய நூல்கள்

க. சர்வசமய சமரசக் கீர்த்தனை. உ. சத்திய வேதக் கீர்த்தனை, ௩. திருவருள் மாலை. ௪. திருவருள் அந்தாதி. ரு. தேவ தோத்திரமாலை, சு. தேவமாதா அந்தாதி, எ. நீதிநூல். அ. பெண்மதி மாலை. கூ. பிரதாப முதலியார் சரித்திரம். க0. சுகுணசுந்தரி சரித்திரம். கக. சித்தாந்த சங்கிரகம். கஉ. பொம்மைக் கலியாணம் முதலிய சிறு நூல்கள். க௩. பெரியநாயகி யம்மன் பதிகம், தனிப்பாடல்கள் முதலியன.

# அ. பரிதிமாற் கலைஞர்

### பெயர்

சூரியநாராயண சாத்திரியார் என்பவர் தமது பெயரை மேற்கண்டவாறு தமிழ்ப்படுத்திக்கொண்டார். பரிதி என்பது சூரியன்; மால் என்பது நாராயணன்; கலைஞர் என்பது சாத்திரியார். இதனை உணராத சிலர் பரிதிமாற் கலைஞர் என்பது ஒரு சிறப்புப் பெயர் என மயங்கிச் சூரியநாராயண சாத்திரியார், பரிதிமாற்கலைஞர் என்னும் பட்டம் பெற்றவர் என்று எழுதித் தம் அறிவின்மையைப் புலப்படுத்தினர். தற்காலத்தவர் தம் வடமொழிப் பெயரைத் தமிழில் வழங்க முற்பட்டிருத்தலைக் காண்கிறோம். இதற்குச் சூரியநாராயண சாத்திரியாரே மூல காரணர் ஆவர். அவர் தொடங்கிய வழக்கு இப்பொழுது தான் மூலைக்கு மூலை வழங்கத் தொடங்குகிறது.

### ஊர்

பரிதிமாற் கலைஞர் பாண்டிமா நாட்டில் மதுரை நகருக்கடுத்த விளாச்சேரி என்னும் சிற்றூரில் ஆயிரத்து எண்ணூற்று எழுபதாம் (1870) ஆண்டு சூலைத் திங்கள் ஏழாம் நாளுக்குச் சரியான, பிரமோதூத ஆண்டு சித்திரைத் திங்கள் இருபத்தைந்தாம் நாள் பிறந்தார். இவருடைய கோத்திரம் கௌசிக கோத்திரம். தந்தையார் பெயர் கோவிந்த சிவனார்.

### கல்விப் பயிற்சி

பரிதிமாற் கலைஞர் இள அகவையில் தெருப்பள்ளிக் கூடத்தில் கற்கவேண்டியவைகளைக் கற்றார். அகவை பத்து நிரம்பியதற்குப்பின் தம் ஊருக்கு ஒரு கல் தொலையான பசுமலைக் கல்லூரியிற் சேர்ந்து படிக்கத் தொடங்கினார். இவர் தமிழில் ஊக்கமற்றிருத்தலைக்கண்டு தமிழாசிரியர்

கண்டித்தார். அதனால் உளம் வருந்திய இவர் தமிழில் மிகுந்த ஊக்கங்கொண்டு கற்கலானார். தம் தந்தையாரிடம் வடமொழியைக் கற்றார். அந்நாளில் மதுரையிற் சிறந்து விளங்கியிருந்த சபாபதிமுதலியார் என்பவரிடத்தில் தமிழ் மொழியை நன்கு கற்றார். மிக இளம்பருவத்திலேயே தமிழ், ஆங்கிலம், வடமொழி என்னும் மும்மொழியிலும் சிறந்த பயிற்சியும் அவைகளில் செய்யுள் செய்யும் ஆற்றலும் உண்டாகியது.

இடைநிலை வகுப்பு

1890 ஆம் ஆண்டிலே சென்னைப் பல்கலைக் கழகத்தார் நடத்திய இடைநிலை வகுப்புத் தேர்வில் முதன்மையாகத் தேர்ச்சி பெற்றார். சேதுபதி மன்னருடைய உதவி ஊதியத்தையும் பெற்றார். பிறகு சென்னை சென்று கிறித்துவக் கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் சேர்ந்தார்.

கலைஞரும் மில்லரும்

மில்லர் என்னும் வெள்ளையர் அந்நாளில் கிறித்துவக் கல்லூரியின் தலைமையாசிரியராக அமர்ந்திருந்தார். அவர் சூரியநாராயணன் என்னும் பெயர் நீளமாக இருக்கிறதென்று எண்ணினார். பெயரை மாற்றிக்கொள்ளுமாறு கலைஞருக்குக் கட்டளை பிறப்பித்தார். சூரியநாராயணருக்குத் தம் பெயரைச் சுருக்கி மாற்றிக்கொள்வதற்குச் சிறிதும் விருப்பம் இல்லை. மேலும் சிறிது நீட்டித் துரைக்கு வியப்பை உண்டாக்கவேண்டும் என்று எண்ணினார். கல்லூரி அலுவலாளரிடம் சென்றார். தம் பெயரைச் சூரியநாராயண சாத்திரி என்று நீட்டி எழுதச்சொன்னார். அவ்வலுவலாளரும் அவ்வாறே செய்தார். மறுநாள் மில்லர் துரை வகுப்பிற்கு வந்தார். நீண்டபெயரைக் கண்டார். அவ்வாறு செய்யக் காரணம் யாதென்று கேட்டார். "நீங்கள்

மாற்றச் சொன்னீர்கள் நான் மாற்றிவிட்டேன்," என்று கலைஞர் கழறினார். கலைஞரின் அஞ்சாமையையும் அறிவையுங் கண்ட மில்லர் அவரிடத்தில் அன்பு பாராட்டலானார். கலைஞரின் கல்வியிலும் ஊக்கம் செலுத்தினார்.

கலைஞரும் தாமோதரம் பிள்ளையும்

1892 ஆம் ஆண்டில் கலைஞர் பி. ஏ. தேர்வில் தமிழிலும் வேதாந்த தத்துவக் கலையிலும் சென்னை மாகாணத்தில் முதன்மையாகத் தேர்ச்சிபெற்றார். அதற்குரிய பாஸ்கர சேதுபதியின் பொற்பதக்கத்தையும் பெற்றார். அந்நாளில் யாழ்ப்பாணம், சி. வை. தாமோதரம் பிள்ளை சென்னைக் கோட்டையில் ஓர் உயரிய அலுவலில் அமர்ந்திருந்தார். அவர் சேதுபதியின் பொற்பதக்கம் பெறும் ஒவ்வொரு மாணவரின் அறிவின் மதுகையையும் பெரும்பாலும் ஆராய்ந்து பார்ப்பார். அவ்வாறே ஆராய்ந்து பார்ப்பதற்குக் கலைஞரையும் அழைத்தார். கலைஞர் தம் நண்பர் ஒருவரையும் உடனழைத்துக்கொண்டு சென்றார். தாமோதரம் பிள்ளை கலைஞரின் கலைத்திறனை ஆராய்ந்துபார்த்தார். கலைஞரின் கலைத்திறனைப் புகழ்ந்து போற்றினார். ஓர் ஆங்கிலச் செய்யுளை மொழிபெயர்க்குமாறு கூறினார். கலைஞர் மிகு விரைவில்,

"கன்னலங் கனிந்த பாடல் காயகன் அல்ல னேனும்
இன்னிசை கேட்டு நெஞ்சம் இளகிடா திருப்பான் வஞ்ச
மன்னவர் துரோக மாதி மாபவஞ் செய்யத் தக்கான்
அன்னவன் தனைநம் பாமல் அகற்றிட வேண்டும் அன்றே"

என்னுஞ் செய்யுளை மொழிபெயர்த்துப் பாடிக் காட்டினார். இதனைப்பார்த்துத் தாமோதரம் பிள்ளை வியப்படைந்தார். கலைஞருக்குத் 'திராவிட சாத்திரி' என்று பெயர் கொடுத்தார். பல நூல்களை நன்கொடையாக வழங்கினார். எளிய

செந்தமிழ்நடையிலே நாடகம் ஒன்று எழுதுமாறு பணித்தார்.

தமிழாசிரியர்

கலைஞரின் கலைத்திறனை நன்குணர்ந்த மில்லர் துரை இவரைத் தம்முடைய கல்லூரியிலேயே வேலை பார்க்குமாறு கூறினார். வேதாந்த தத்துவ ஆசிரியர் வேலையை விரும்பாது தமிழ்ப்புலவர் வேலையை ஏற்றுக்கொண்டார். இரண்டு ஆண்டில் அக்கல்லூரியின் தலைமைத் தமிழ்ப்புலவர் ஆனார். அப்பொழுது கலைஞருக்கு அகவை இருபத்தைந்து. கல்லூரி வேலைநேரம் போக எஞ்சிய நேரங்களில் மாணவர் திருக்கூட்டம் ஒன்றைத் தம் இல்லத்திற் சேர்த்து அவர் கட்குப் பலவகை நூல்களையும் நன்கு போதித்தனர். கலைஞரின் சொல்லாற்றலையும் அறிவு நுட்பத்தையும் நன்குணர்ந்த மாணவர்குழாம் உள்ளன்போடு கலைபயின்று நிலை உயர்ந்து தலையெடுத்துச் சிறந்தோங்கியது. அம் மாணவர்களிடம் இருந்து கலைஞர் எத்தகைய கைம்மாற்றினையும் எதிர்பார்த்தவரல்லர். கைம்மாறு செய்ய முற்பட்ட சிலரையுங் கடிந்துரைத்துத் தம் தமிழன்மை வெளிப்படுத்தினார்.

மாணவர்கள்

கலைஞரிடங் கல்விகற்றுச் சிறந்தோங்கியவர்கள் பலர். அவர்களுள், இராவ்சாகிப் சி. என். சரவண முதலியார், தி. அ. சாமிநாதையர், ந. பலராம ஐயர், வ. சு. செங்கல்வராயபிள்ளை முதலியோர் தலைசிறந்தவர்களாவர்.

இவர் இயற்றிய நூல்கள்

1. மாலாபஞ்சகம், 2. ரூபாவதி, 3. கலாவதி, 4. மானவிஜயம், 5. பாவலர் விருந்து, 6. தனிப்பாசுரத்

தொகை, 7. மதிவாணன், 8. தமிழ்வியாசங்கள், 9. தமிழ்ப் புலவர் சரித்திரம், 10. முத்திரா ராட்ஸசம் முதலியன இவரால் இயற்றப்பெற்ற நூல்களாகும். இவற்றுட் சில மறைந்துபோயின. எஞ்சியன வெளிவந்து உலாவுகின்றன. இவரால் எழுதப்பெற்ற தமிழ்மொழி வரலாறு என்னும் நூல் இன்றும் அறிஞரால் பெரிதும் போற்றப் பெறுகின்றது.

## இறுதிக் காலம்

கலைஞர், நிறைந்த கல்வியறிவைப் பெற்றிருந்தாற் போன்று நிறைந்த வாணாளையும் பெற்றாரல்லர். அறிவிலார் சக்கை யென்றும், அறிவுடையோரே இனியரென்றும், கூற்றுவன் விரைந்து அறிவுடையோரை உண்டு தொலைப் பான் என்பது அறிஞர்கள் முடிவு. உலக நிகழ்ச்சியிலும் அவ்வாறே காண்கின்றோம். இவருக்கு இருமல்நோய் ஏற்பட்டுத் தொல்லை செய்துகொண்டிருந்தது. அதனையும் பொருட்படுத்தாமல் தமிழ்த்தொண்டில் ஈடுபட்டிருந்தார். கூற்றுவன் விட்டுவைக்கவில்லை கலைஞருடைய முப்பத்து மூன்றாவது அகவையில், 1903-ம் ஆண்டு அவரை விழுங்கி விட்டான். அறிஞர் பலர் ஒன்றுகூடிக் கலைஞரின் பிரிவுக் காகப் பெரிதும் வருந்தினர்.

## ௧௦. சுப்பிரமணிய பாரதியார்

*தோற்றம்*

1882-ம் ஆண்டு கார்த்திகைத் திங்கள் மூல நாளிலே எட்டையபுரத்திலே, சின்னச்சாமி ஐயர் என்பவருக்கும் இலட்சுமி அம்மாள் என்பவருக்கும் புதல்வராகச் சுப்பிரமணிய பாரதியார் தோன்றினார். அகவை ஐந்து நிரம்புவதற்கு முன்னரே தாயார் விண்ணுலகெய்தினார்.

*கல்வி*

பாரதியார் சிறு பருவத்திலே பள்ளியிற் கற்கவேண்டிய கல்வியைக் கற்றார். அந்நாளில் அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச்சிந்து எங்கும் முழங்கிநின்றது. பாரதியார் காவடிச்சிந்து முழுவதையும் மனப்பாடஞ் செய்தார். பாரதியார் பாவாணர் ஆதற்குக் காவடிச்சிந்தும் நந்தனார் சரித்திரக் கீர்த்தனையும் உறுதுணையாக அமைந்து நின்றன.

*நாட்டுப்பற்று*

மற்றைப்புலவர்களிடம் இல்லாத அரிய பண்பு ஒன்று பாரதியாரிடத்திலே விளங்கிற்று; அதுதான் நாட்டுப் பற்று. ஆங்கிலேயர்க்கு அடிமைப்பட்டுக்கிடக்கும் நாடு உரிமைபெற்று வாழ வேண்டும். ஒருவருக்கொருவர் அடிமையில்லை என்னும் எண்ணம் வளர்ந்தோங்கி நின்றது. போதிய உதவிகள் கிடைத்திருப்பின் வீரபாண்டியக் கட்ட பொம்மன் ஆவதற்கு முயன்றிருப்பார் என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை. இந்த நாட்டுப்பற்றுத்தான் பாரதியாருடைய மேன்மைக்கும் பெருமைக்கும் காரணமாக அமைந்து நின்றது. நாட்டுப்பற்றுக் கொண்டவர்களிடம் பற்றுக்கொண்டார். நாட்டுப்பற்று அமையுமாறு இசைப் பாடல்களைப் பாடினார். அப்பாடலைக்கேட்ட மக்கள் துள்ளி

எழுந்தனர். முதலில் செந்தமிழ் நாட்டுச்சிறப்பு முதலிய பாடல்களைப் பாடிய பாரதியார் பிறகு ஆங்கில அரசாங்கத் தார் அச்சங்கொள்ளத்தக்க பாடல்களையும் பாடினர். பாரதியாருடைய பதினைலாவது அகவையில் அவருக்குத் திருமணம் நடைபெற்றது. மனைவியின் பெயர் செல்லம் மாள். திருமணம் ஆன மறு ஆண்டில் தந்தையாரும் போயினர்.

காசியில் கல்விப்பயிற்சி

பாரதியாரின் நெருங்கிய உறவினர் சிலர் காசியில் இருந்தனர். பாரதியார் காசிக்குச் சென்றார். அங்குள்ள பல்கலைக்கழகத்தில் சேர்ந்து சின்னாள் பயின்றார். சீர்திருத் தத்தில் நோக்கமுடைய பாரதியார் பூணூலை எடுத்துவிட் டார். குடுமியைக் கிராப்பாக மாற்றினர். போதாக்குறைக்கு மீசைவேறே வைத்துக்கொண்டார். பாரதியாருடைய திருக் கோலம் உறவினர்களுக்கு வெறுப்பை யுண்டாக்கியது.

தென்னாடு திரும்புதல்

எட்டையபுரம் மன்னர் டில்லிக்குச் சென்றார். திரும் பும்போது காசிக்குச்சென்று பாரதியாரைக் கண்டார். எட்டையபுரத்திற்கு வந்துவிடுமாறு அழைத்தார். ஒருவ ருக்கு அடங்கியிருத்தலை வெறுத்த பாரதியார் முதலில் மறுத்தாராயினும் பின்னர் உடன்பட்டார். மன்னருடன் புறப்பட்டு எட்டையபுரத்திற்கு வந்துசேர்ந்தார். பாரதி யார்க்கு வேண்டிய உதவிகளையெல்லாம் மன்னர் செய்தார். தாம் பாடிய பாடல்கள் சில மன்னர் உள்ளத்திற்குப் பிடிக்காமல் இருக்கிறதென்பதை உணர்ந்தார். அதையே காரணமாகக்கொண்டு எட்டையபுரத்தை விட்டு வெளிப் பட்டார்.

ஆசிரியர் வேலை

மதுரையை அடைந்து சிறிது காலம் தமிழாசிரியராக வேலைபார்த்தார். அவ்வேலை அவருடைய உள்ளத்திற்குப் பிடிக்கவில்லை. அப்பொழுது அங்கு வந்த சுதேசமித்திரன் ஆசிரியரோடு சென்னையை அடைந்தார். சுதேசமித்திரனின் உதவியாசிரியர் வேலையை மேற்கொண்டார். அவ்வேலையில் எழுதுகோலைத் தம்முடைய மனம்போனவாறு ஓட்ட முடியாதென்பதை உணர்ந்தார். அதனைவிட்டு விலகினார். நண்பர் சிலருடன் சேர்ந்து 'இந்தியா' என்னும் பத்திரிகையைத் தொடங்கினார். தம் மனம்போனவாறு பேனாவை இயக்கி நாட்டின் விடுதலையைப்பற்றி ஒவ்வொருவருடைய உள்ளமும் கொதிக்குமாறு எழுதினார். பத்திரிகையின் உரிமையாளர்கள்மீது பிடிகட்டளை பிறந்தது; பாரதியார் எதற்கும் அஞ்சாத் தீரராயினும் சிறைசென்று அடங்கி ஒடுங்கித் துன்புறுதலை விரும்பவில்லை. நண்பர்களுடன் கலந்து எண்ணினார்.

புதுச்சேரி புகுதல்

புதுச்சேரிக்குச் சென்றுவிடின் ஆங்கில அரசினர் தம்மைப் பின்தொடரமாட்டார்கள் என்று முடிவு செய்து புதுச்சேரியை அடைந்து நண்பர் ஒருவர் வீட்டில் தங்கினார். பாரதியார் சென்னையில் இருந்தபோது பல பொதுநலத் தொண்டுகளில் ஈடுபட்டிருந்தார். வ. உ. சிதம்பரம் பிள்ளையின் சுதேசிக் கப்பல் கம்பெனிக்குத் தம்மால் இயன்ற உதவியைப் புரிந்தார். சூரத் காங்கிரசுக்குச் சென்று தக்கவாறு தொண்டு செய்தார். இவைகளெல்லாஞ் சேர்ந்து அரசினருக்கு அச்சத்தை உண்டாக்கின. புதுச்சேரிக்குப் பாரதியார் சென்ற பிறகு அரவிந்தகோஷ், வ வே. சுப்பிரமணிய ஐயர் முதலிய பலர் புதுவையை அடைந்து தங்கி

ஞர்கள். அந்நாளில் நாட்டுப்பற்றுளர்களுக்குப் புதுச்சேரி அடைக்கலமளிக்கும் இடமாக விளங்கியது. பாரதியார், அரவிந்தர், சுப்பிரமணிய ஐயர் முதலியோர் ஒன்றுகூடி உரையாடி இனிதுறைந்தனர். புதுவையில் புகுந்துள்ள நாட்டுப்பற்றுளர்களைக் கண்காணித்தற்கு ஆங்கில அரசினர் போலீஸ் படை ஒன்றை அங்கு நிறுவிப் பெரும் செலவு செய்தனர். அல்லும் பகலும் தொல்லைவிளைத்தனர். எப்படியேனும் அவர்களைப் புதுச்சேரியைவிட்டு வெளிப்படுத்திச் சிறையில் அடைத்துவிட வேண்டும் என்று முயன்றனர். அம்முயற்சிகள் எல்லாம் பயனற்றுப் போயின.

வெளிப்படுதல்

அரவிந்தர் அறிவு வழியிலே ஈடுபட்டுப் புறப்பற்றை யொழித்தற்கு ஆவன செய்தார். பாரதியார்க்குப் புதுவை வாழ்வு பிடிக்கவில்லை. வந்ததுவரட்டும் என்று புறப்பட்டுக் கூடலூர்க்கு வந்தார். அங்கு போலீசார் அவரைக் கைதுசெய்து சென்னைக்குக் கொண்டு சென்றனர். பிறகு சில கட்டுப்பாடுகளுடன் விட்டுவிடப்பட்டார். அதன் பிறகு கடையம் சென்னை முதலிய இடங்களில் தடையில்லாமல் தங்கியிருந்தார்.

இறுதி

பாரதியார் சென்னையில் இருக்கும்போது திருவல்லிக்கேணியில் தங்கியிருப்பது வழக்கம். அப்பொழுது அவர் நாடோறும் பார்த்தசாரதி கோவிலுக்குச் செல்லுவார். செல்லும்போது தேங்காய் பழம் முதலியன வாங்கிக் கொண்டுபோய்க் கோவில் யானைக்குக் கொடுப்பார்; அதனைத் தடவிக்கொடுத்து அதனுடன் உறவுகொண்டாடுவார். "கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்து முழம்,

வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே," என்னும் அறிஞர் மொழியைப் பாரதியார் சிறிதும் பொருட்படுத்தமாட்டார். வழக்கம்போல் ஒருநாள் கோவிலுக்குத் தேங்காய் பழம் முதலியவைகளோடு சென்றார். அன்று யானைக்கு மதம் பிடித்திருந்தது. அச்செய்தியை அறிந்தோ அறியாமலோ பாரதியார் வழக்கம்போல் அதனிடம் சென்றார். அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் யானை பாரதியாரைத் தந்தத்தால் சிலுப்பிக் கீழே தள்ளிவிட்டது. யானையின் கால்களுக்கு இடையிலே பாரதியார் விழுந்துவிட்டார். ஆயினும் யானை அவரை மிதித்துச் சட்டி[illegible] அப்படியே நின்றிருந்தது. மக்கள் பலர் கூடினராயினும் மதகரியிடம் நெருங்குவதற்கு எவருந்துணிந்திலர்; குவளைக்கண்ணன் என்னும் அன்பர் செய்தியுணர்ந்தார். விரைந்துவந்தார். யானையின் அடிகட்கிடையே விழுந்து கிடந்த பாரதியாரை வாரியெடுத்துச் சென்றார். அதனால் பாரதியார் பெருங் காயமடையவில்லையேனும் சின்னாள் வருந்தியிருந்தார். உடல் நன்றாக நலம்பெறவில்லை. அதனால் ஏற்பட்ட ஊமைக் காயங்களே அவருடைய உயிர்க்கு இறுதியாக முடிந்துவிட்டது. 1921 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 11 ஆம் நாள் தமது முப்பத்தொன்பதாவது அகவையிலே மண்ணுலகத்து அடிமை வாழ்வை வெறுத்து விண்ணுலக வாழ்வை எய்தினார்.

### பாரதியாரின் பண்பு

பாரதியார் மெய்யறிவு கைவரப்பெற்றவர். உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்னும் பாகுபாடுகளிலே அவருக்குச் சிறிதும் நம்பிக்கை கிடையாது. தம்மை யாரேனும் கீழ்வீழ்ந்து வணங்கினால் அதனை வெறுப்பார். சமயத்தில் கண்டிக்கவும் பின்வாங்கமாட்டார். மனிதனையும் விலங்குகளையும் ஒரே நோக்குடன் நோக்கும் தன்மைகூடப் பாரதி

யாரிடம் அமைந்து நின்றது. இத்தகைய மனப்பான்மை யினால் ஒருமுறை கழுதைக்குட்டி ஒன்றைத் தூக்கிக் கொஞ்சினாராம். அதனைக் கண்டவர்கள் பாரதிக்குப் பித்துப் பிடித்துவிட்டதென்று வருந்தினராம்.

சென்னைக்கு மகாத்மா காந்தி வந்திருந்தபோது அவரைக் காண்பதற்குச் சென்றார். கைகட்டி வாய்புதைத்து மற்றையோரைப்போல் நிற்கவில்லை. காந்தியடிகள் அமர்ந்திருந்த இருக்கையிலேயே தாமும் அமர்ந்து பேசவேண்டியவைகளைப் பேசிவிட்டு வாழ்த்துரை கூறிச் சென்றார். இச்செயல் காந்தியடிகளைக்கூடத் திகைக்கச் செய்துவிட்டதாம். மற்றவர்கள் போன்று தமிழ்நாட்டுத் தனிப்பெருங் கவிஞர் கைகட்டி நின்றிருப்பின், அஃது அவருக்கு மிகவும் இழிவன்றோ?

பாரதியாருடைய கையில் சேர்ந்த எப்பொருளும் நிலைபெற்று அவருடைய இடத்தில் சிக்கினதே இல்லை. மிகு விரைவில் வேறு கைமாறிவிடும். எவ்வளவு உயர்ந்த அரிய பொருள்களாக இருப்பினும் அவற்றைப் பாரதியார் பொருட்படுத்துவதே இல்லை. இந்நிலை பாரதியார் ஒரு மெய்யறிவாளர் என்பதை ஐயமறப் புலப்படுத்துகின்றது.

பாரதியாரின் பாடல்கள்

பாரதியாரின் பாடல்கள் எளிய பொருள் அமையப் பெற்றவை. பாடுவதற்கு இனிமையானவை. பாட்டின் பொருள் காண்டற்கு அகரவரிசைத் துணையோ அறிஞர் துணையோ வேண்டியதில்லை. உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசும் இழிதகைமை பாரதியாரிடத்தில் இல்லை. அவர் தம் கொள்கைகளைப் பாடல்களில் நன்றாகப் புகுத்தியிருக்கின்றார். சாதி முதலானவைகளை இவர் வெறுப்பவர் என்பதை,

“சாதி மதங்களைப் பாரோம்—உயர்
சன்மமித் தேசத்தில் எய்தின ராயின்
வேதிய ராயினும் ஒன்றே—அன்றி
வேறுகுலத்தின ராயினும் ஒன்றே.”

என்னும் பாவால் அறியலாம். தமிழர்கள் எல்லா ஆற்றல்களும் அமையப்பெற்றவர்கள் என்பது பாரததேசம் என்னும் பாட்டில் நன்கு விளங்கும். தமிழிடத்துப் பேரார்வங் கொண்டவரென்பது செந்தமிழ் நாடு என்னும் பகுதியில் இனிது விளங்கும். உலகினர் கொண்டாடும் மூடப்பழக்க வழக்கங்களைப் பாரதியார் அறவே வெறுப்பவர். அதனை,

“நெஞ்சு பொறுக்கு திலையே—இந்த
நிலைகெட்ட மனிதரை நினைந்து விட்டால்
அஞ்சி அஞ்சிச் சாவார்—இவர்
அஞ்சாத பொருளில்லை அவனியிலே ;”

“வஞ்சனைப் பேய்க ளென்பார்—இந்த
மரத்தி லென்பார் ; அந்தக் குளத்தி லென்பார்
துஞ்சுது முகட்டி லென்பார்—மிகத்
துயரப்படுவார் எண்ணிப் பயப்படுவார்........”

என்னும், ‘பாரத ஜனங்களின் தற்கால நிலைமை’ என்னும் பகுதியால் அறியலாம்.

பாடல்கள், ‘தேசிய கீதங்கள்’ என்னும் பகுதியில் 57-ம், ‘தோத்திரப்பாடல்கள்’ என்னும் பகுதியில் 66-ம், ‘வேதாந்தப் பாடல்கள்’ என்னும் பகுதியில் 30-ம், ‘கண்ணன்பாட்டு’ என்னும் பகுதியில் 23-ம், ‘பாரதி அறுபத்தாறு’ என்னும் பகுதியில் 18-ம், ‘குயில்’ என்னும் பகுதியில் ஒன்பதும், ‘சுயசரிதை, பிறபாடல்கள்’ என்னும் பகுதியில் 37-ம் அடங்கியிருத்தலோடு, ‘விநாயகர் நான்மணிமாலை,’ ‘புதிய ஆத்திசூடி,’ ‘முரசு,’ ‘பாப்பாப் பாட்டு,’

'பாஞ்சாலி சபதம்' என்னும் தனிப்பகுதிகளும் அடங்கியுள்ளன. பாடலின் பெருமையையுஞ் சிறப்பையும் உணர்ந்த அரசினர், பாடல்களுக்கு உரியவர்கட்குத் தகுந்தவாறு பொருள் உதவி செய்து பாடல்களையெல்லாம் பொதுப் பொருளாக்கியுள்ளனர். இவற்றைத் தவிர உரைநடை நூல்கள் சிலவும் கட்டுரைகளும் பாரதியார் எழுதியுள்ளார். அவைகளும் வெளிவந்து உலவுகின்றன. நமது நாடு இவ்வளவு விரைவில் விடுதலையடைந்து சிறப்புற்றதற்குப் பாரதியார் பாடல்களும் உறுதுணையாக அமைந்து நின்றன என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை.

## கo. பொன்னுச்சாமித் தேவர்

தோற்றம்

மன்னிய புகழ்சேர் பொன்னுச்சாமித் தேவர் தன்னிகரில்லாச் சேதுநாட்டிலே, இராமநாதபுரத்திற்குத் தென்கிழக்கே பதினாறுகல் தொலைவில் உள்ள புதுமடம் என்னுஞ் சிற்றூரில் தோன்றியவர். தந்தையார் பெயர் சிவஞானத் தேவர். தாயார் பெயர் முத்துவீராயி நாச்சியார். இக்குடும்பத்தினர் இராமநாதபுரம் அரச குடும்பத்தினருக்கு நெருங்கிய உறவினர்களாக இருந்தனர். சிவஞானத் தேவர் பெருஞ்செல்வரல்லர்; ஆயினும் சிறப்புடன் வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தனர்.

1837 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் பொன்னுச்சாமி நில உலகில் தோன்றினார். 1841 ஆம் ஆண்டில் பொன்னுச்சாமியாருக்கு இளவல் ஒருவரும் தோன்றினார். அவ்விளவலுக்குத் துரைராசா என்று பெயரிடப்பட்டது. சிறுவர்கள் இருவரும் தக்க காலத்தில் தக்கவாறு கல்விப்

பயிற்சி செய்விக்கப்பட்டனர் அந்நாளில் சேதுமன்னராக இருந்த இராமசாமி சேதுபதி என்பார் ஆண்மக்கட் பேறில்லாமல் காலமல்லாத காலத்திலே காலனூரைச் சேர்ந்தார். அவருடைய மனைவியார் பர்வதவர்த்தனி நாச்சியார் அரசாட்சியைத் தாம் மேற்கொண்டு நடத்தினர். அரசியாருடன் பிறந்த கோட்டைச்சாமித்தேவர் என்னும் தமையனர் அரசியாரின் ஆட்சிக்குத் துணையாக அமைந்து நின்றார். இந்தப் பர்வதவர்த்தனி நாச்சியார் புதுமடம் சிவஞானத் தேவரின் மனைவியாரான முத்துவீராயி நாச்சியாருக்குத் தமக்கையாராவர்; கோட்டைச்சாமித் தேவர் தமையனாராவர். கோட்டைச்சாமித் தேவர் பேராண்மையும் அரசியல் திறமும் நன்கு அமையப் பெற்றவர்.

முகவை அடைதல்

பர்வதவர்த்தனி நாச்சியாரும் அவர்தம் தமையனாகிய கோட்டைச்சாமித் தேவரும், நாட்டின் பிற்கால நிலைமையைக் குறித்துக் கலந்து எண்ணினர். தம் தங்கையின் புதல்வர் இருவரின் பிறந்த நாட்குறிப்புக்களையும் ஆராய்ந்து பார்த்தனர். இளைய மகனை துரைராசா சேதுமன்னன் ஆதற்குத் தக்கவன் என்று முடிவு செய்தனர். தகுந்த சிறப்புடன் அம்மக்களையும் தாய் தந்தையரையும் தக்கார்களை அனுப்பித் தருவித்தனர். செய்திருந்த ஏற்பாடுகளின்படி 1847 ஆம் ஆண்டு மே மாதம் ஏழாந்தேதி துரைராசா முத்துராமலிங்க சேதுபதி என்னும் பெயருடன் அரசராக்கப்பட்டார். சிறுவராக இருந்த அவருக்குத் தகுந்த பாதுகாப்பு, கல்விப்பயிற்சி முதலியன ஏற்பாடு செய்யப்பட்டன. சிவஞானத்தேவர் சேதுநாட்டின் பேஷ்கார் என்னும் அலுவலை மேற்கொண்டு திறமையுடன் பார்த்து வந்தனர். பொன்னுச்சாமி தம் தந்தையோ

டிருந்து அரசியல் முறைகள் எல்லாவற்றையும் நன்கு கற்றுவந்தார்.

தந்தையார் மறைவு

சிவஞானத் தேவர் நோயால் பீடிக்கப்பட்டுக் காலமானார். மைந்தர்கள் இருவரும் தந்தையார் பிரிவுக்குப் பெரிதும் வருந்தினர். சிவஞானத் தேவர் பார்த்துவந்த அலுவலை அகவை இருபதே நிரம்பப்பெற்ற பொன்னுச்சாமி திறமையுடன் பார்க்கலானார். தந்தையாரின் நினைவு என்றும் நிலைத்து நிற்றற்பொருட்டு, மைந்தர் இருவரும் சிவஞானபுரம் என்னும் ஊரைத் தமது தந்தையார் பெயரால் அமைத்தனர்.

வம்பர்கள் வழக்கு

சீமைப் பேஷ்கார் வேலையைப் பொன்னுச்சாமித் தேவர் திறமையுடன் பார்த்துக்கொண்டு வரும்போது சேது மரபினர் சிலர், பர்வதவர்த்தனி நாச்சியார் பிள்ளை வளர்ப்பு எடுத்துப் பட்டங்கட்டிவைத்தது செல்லக்கூடியது அன்று என்று வம்புகளையும் வழக்குகளையும் உண்டாக்கித் தொல்லைகொடுக்கலாயினர். வழக்கு சென்னை உயர்தர நீதிமன்றம் வரையிற் சென்றது. அக்காலத்தில் சென்னை வியாசர்பாடியில் இருந்த விநாயக முதலியார் முதலிய தக்கார்கள் சிலரின் உதவியால் வழக்குப் பர்வதவர்த்தனி நாச்சியாருக்கு நன்மையாக முடிந்தது. பொன்னுச்சாமித்தேவர் அமைச்சராக அமைந்து அரசியல் அலுவல்களை நன்கு நடத்திவந்தார். சிவகங்கை நாட்டை ஆண்டிருந்த மருதுபாண்டியன் என்பவருடைய மரபில் பிறந்த பெரியநாச்சியார் என்னும் பெண்மணிக்கும், பொன்னுச்சாமித் தேவருக்கும் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

பொன்னுச்சாமியும் புலமையும்

பொன்னுச்சாமித்தேவர் அரசியல் அலுவல்களில் மிகுதியாகக் கலந்துகொண்டும் அறிவுத்துறையை மறந்து நின்றவர் அல்லர். தினைத்துணைப்போது கிடைப்பினும் அதனை அறிவுத்துறையிலேயே பயன்படுத்தினர். முத்து ராமலிங்க சேதுபதியும் வீண்பொழுது போக்கி விளையாடு பவர் அல்லர். இருவருமே அருங்கலை விநோதர்களாக இலங்கினர். தமிழறிவு இவர்கட்கு வழிமுறைச் செல்வ மாகவே அமைந்துநின்றது. திருக்குறள், கம்பராமா யணம், பாரதம் முதலிய நூல்களிலே இவர்கட்குப் பற்றும் பயிற்சியும் உண்டு. இவர்களுடைய அவை எப்பொழுதும் புலவர் பெருமக்கள் பொருந்திய பேரவையாகவே அமைந் திருந்தது. கம்பராமாயணச் சொற்பொழிவு முதலியன எப்பொழுதும் நிகழ்ந்தன. தம்மீது செய்யுட்கள் இயற்றி வருபவர்களுக்கும் நூல்கள் இயற்றிவருபவர்களுக்கும் அர சரும் அமைச்சரும் ஆகிய உடன்பிறந்தார்களிருவரும் புலவர்களின் ஏற்றத் தாழ்வுகளை இனிதுணர்ந்து நன் கொடை வழங்கினர். புலவர்களின் அறிவுத்திறமையைச் சீர்தூக்கிப் பார்ப்பதில் பொன்னுச்சாமித்தேவர் தலை சிறந்துநின்றார். போலிப்புலவர்கள் சிலர் பொன்னுச் சாமியை ஏமாற்றமுடியாமல் இன்னலுக்கு ஆளாயினர். பொன்னுச்சாமித்தேவரைச் சூழ்ந்திருந்தவர்களும் நல்ல அறிவாளிகளாக ஆயினர்.

பாடல்கள்

பொன்னுச்சாமித்தேவரிடம் நூல்களைப் படிப்ப தற்கு ஓர் அன்பர் அலுவலாளராக அமைந்திருந்தார். அவர் தகுந்த புலமையுடையவர்; இராமலிங்கம் என்னும் பெயருடையவர். பாடல்களை இசையுடன் படிப்பதில் தேர்ந்தவர். இவர் இரவு பத்துமணி வரையினும் பொன்

னுச்சாமித்தேவரோடு தங்கியிருப்பது வழக்கம். ஒருநாள் எக்காரணத்தினலோ எட்டுமணிக்கே தம்முடைய இல்லத்திற்கு ஏகிவிட்டார். அதனை அறிந்த தேவர்,

"எட்டு மணியோ இலேசீ னையதற்குள்
விட்டுப் பிரிந்த விதமென்னே—இட்டமனை
மாலா மயலா மடியா மமதையா
சீலா இராமலிங்கம் செப்பு"

என்று ஒரு வெண்பாவை எழுதி அந்த இராமலிங்கத்திற்கு அனுப்பிவைத்தார். இராமலிங்கக்குருக்கள் என்னும் ஓர் அறிஞர் நல்ல புலமையும் நாவன்மையும் அமையப் பெற்றவர். பொன்னுச்சாமித்தேவரிடம் எக்காரணத்தாலோ வெறுப்புக்கொண்டு பொன்னுச்சாமித் தேவருக்குப் பகையான மற்றொருவரிடம் சென்று பத்து ஆண்டுகள் வரையில் தங்கிவிட்டார். அந்தக் குருக்களை மீண்டும் தம்மிடம் வைத்துக்கொள்ளவேண்டும் என்று விரும்பிய தேவர்,

"அஞ்சிரட்டி செய்வருடம் ஆளடிமை யில்திரிந்தும்
கஞ்சியன்றிக் காணயக் காவலனல்—மிஞ்சியது
பூணு புதுமனையா பூவாசொல் புத்தியிலா
வீணு இராமலிங்க மே"

என்னும் வெண்பாவை எழுதி அந்த இராமலிங்கக் குருக்களுக்கு அனுப்பிவைத்தார். இச்செய்யுளைப் பார்த்த குருக்கள் பொன்னுச்சாமித்தேவரை அடைந்து பொன்னும் புகழும் பெற்று நன்னிலையில் வாழ்ந்தார்.

கிருட்டிண ஐயங்கார் என்பார் ஒருவர் தேவருக்குச் சில செய்யுட்கள் எழுதி அனுப்பியிருந்தார். தேவர் அந்தச் செய்யுட்களை யாண்டோ போக்கடித்துவிட்டார். தேடிப்பார்த்தும் அகப்படவில்லை. பிறகு மேற்படி ஐயங்காருக்கு,

"கோட்டுமலை கூவுமுனம் கூம்பா மலர்க்கரத்தைக்
காட்டு கிருட்டிணனின் காகிதத்தைப்—போட்டுவிட்ட
தன்றி அயர்த்தாம் அதனுட் பொருளைமறு
தின்றுமொன் றீவா யிசைந்து"

என்று எழுதி அனுப்பினர்.

அரசர் அறிவு

பொன்னுச்சாமித்தேவரேயன்றி அவர்தம் இளவலும் அரசரும் ஆகிய முத்துராமலிங்க சேதுபதியும் பேரறிவு பொருந்தியவராகத் திகழ்ந்தார். அரச செல்வத்தில் புரளும் நமக்கு அறிவுச்செல்வம் எற்றிற்கு என்று அதனைப் புறக்கணிக்கவில்லை. உடன்பிறந்தார்களாகிய அமைச்சரும் அரசரும் உரையாடுதல்கூடச் செய்யுளாக இருக்கும். ஒருகால் பொன்னுச்சாமித்தேவர் தம் இளவலைப் பார்த்து,

"ஊக்கமிலார் கைம்மீ துறைகழித்த வாளேந்திப்
போர்க்கெழுதல் நானன்றே போர்வேந்தே—

என்று வினவினர். உடனே அரசர் தம் தமையனாரைப் பார்த்து,

—நீக்கமறப்
புக்கபுகழ் நீயிருக்கப் புல்லியே னுந்தமிழை
மிக்குரைத்தல் குற்றமன்றோ விள்"

என்று விடையிறுத்தார்.

மேலும், இச் சேதுபதி மன்னர், சரசசல்லாபமாலை, முருகாநுபூதி, நீதிபோதவெண்பா, பிரபாகரமாலை, இரசிக ரஞ்சனம், காயகப்பிரியா முதலிய நூல்களையும் இயற்றியுள்ளார்.

மாம்பழக் கவிச்சிங்கம்

ஒருநாள் பொன்னுச்சாமித் தேவருடைய பேரவை கூடியிருந்தது. மாம்பழக் கவிச்சிங்க நாவலர் என்னும்

புலவர் பொன்னுச்சாமித்தேவரைப் பார்த்துத் தம் புலமையைக் காட்டிப் பரிசுபெறுதற்கு வந்தார். அப்புலவர் கம்மாள குலத்தில் தோன்றியவர். அம்மை நோயால் கண்களை இழந்தவர். முருகன் திருவருளால் முத்தமிழ்ப் புலமை நிரம்பப்பெற்றவர். புலவர் புறக்கண் அற்றவராக இருத்தலைக் கண்ட வாயில் காவலர் அவரைத் தடுத்தனர். உடனே மாம்பழக் கவிராயர்,

"தருமகிமை மிகுமுனது சமுகமுறூர் வறுமையெனச்
சலிக்கக் காய்ந்து
வருமிரவி வெயிலதனல் மயங்கியிங்கு யான்வருந்தி
வந்த போதில்
அருமைதவிர் பாராச்சே வகர்தமது பெயர்ப்பொருளை
அறியக் காட்டிக்
கருவமொடு தடுப்பதென்னே காமர்பொன்னுச் சாமியெனுங்
கருணை மாலே!"

என்னுஞ் செய்யுளை எழுதியனுப்பினர். அவ்வளவில் பொன்னுச்சாமித்தேவர் அறிஞர் ஒருவரை அனுப்பி மாம்பழக்கவியை உள்ளே அழைத்தார். மாம்பழக்கவியின் அரிய செய்யுட்களைக் கேட்டு உள்ளங் களித்தார். அவருக்குக் கவிச்சிங்கம் என்னும் சிறப்புப் பெயரையுங் கொடுத்து வரிசைகள் பல செய்தனர். மாம்பழக் கவிராயர் ஆண்டுப் பன்னாள் தங்கியிருந்த பின்னர்த் தம் நோக்கப்படி வேற்றிடங்கட்குச் செல்லலானர்.

சந்திரசேகர கவிராயர்

தில்லையம்பூர்ச் சந்திரசேகர கவிராயர் என்பவர் பழைய தமிழ்நூல்களைத் திருத்தமாகப் பதிப்பித்து வெளியிட விரும்பினர். அதன்பொருட்டுப் பொன்னுச்சாமித்தேவரிடம் உதவிபெற எண்ணினர். அதற்கு உதவிசெய்யவேண்டும் என்று சில செய்யுட்களை இயற்றிக்

கொண்டுவந்தார். பொன்னுச்சாமித்தேவர் சந்திரசேகரக் கவிராயரின் தன்மையை ஒருவாறு உணர்ந்தார். தாம் திரட்டி வைத்திருந்த தனிப்பாடல்களை அவரிடம் கொடுத்தார். மேலும், அகப்படும் தனிப்பாடல்களையும் தொகுத்துத் தனிப்பாடல் திரட்டு என்னும் பெயருடன் வெளிப்படுத்துமாறு கட்டளையிட்டார். அதன்பொருட்டுத் தக்க பொருள் உதவியும் புரிந்தார். தேவருடைய இச்செய்கையால் பல புலவர்கள் பாடிய பாடல் வீணே அழிந்துபடாமல் உலகில் நிலைபெறலாயின. புலவர் தியாகராசச் செட்டியார் முதலிய பலருடன் பொன்னுச்சாமித் தேவர் அளவளாவி அவர்களுடைய கல்விநிலை முதலியவைகளை நன்குணர்ந்துகொண்டார்.

நாவலரும் தேவரும்

ஆறுமுக நாவலருக்கும் பொன்னுச்சாமித் தேவருக்கும் சென்னைமாநகரில் பழக்கம் உண்டாயிற்று. ஆறுமுக நாவலரின் கல்வியறிவு பொன்னுச்சாமித்தேவருக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. ஆறுமுகநாவலரை இராமநாதபுரத்திற்கு அழைத்துத் தக்கவாறு போற்றுதல் வேண்டும் என்று தேவர் முடிவுசெய்திருந்தார். பல அலுவல்களில் ஈடுபட்ட தேவர் நாவலரை முகவைக்கழைத்துப் போற்றவில்லை. நாவலர் சிவப்பதிகளுக்கு வழிபாடாற்றப் புறப்பட்டார். தில்லை, மதுரை முதலிய இடங்களில் இறை வழிபாடாற்றினார். திரு உத்தரகோசமங்கை, இராமேசுரம் முதலிய இடங்கட்குச் செல்ல விரும்பினார். இராமநாதபுரத்தை அடைந்து தங்கியிருந்தார்.

நாவலர் இராமநாதபுரத்தில் வந்து தங்கியிருக்குஞ் செய்தி பொன்னுச்சாமித்தேவருக்குத் தெரிந்தது. தம் மவர்களை அனுப்பி நாவலர்க்கு வேண்டிய உதவிகளை

யெல்லாம் செய்யுமாறு கட்டளையிட்டார். ஆனால், நாவலரோ அந்த உதவிகளைப் பெறுவதற்கு மறுத்தார். அவர் பொன்னுச்சாமித்தேவரைக் கண்டு உரையாடுதற்கும் விரும்பவில்லை. தேவர் தம் அவைக்களப் புலவர் சிலரை அனுப்பி நாவலரை அழைத்துவரச் சொன்னார். நாவலர் வரமுடியாது என்று மறுத்துவிட்டார். அச்செயல் அரசரையும் அமைச்சரையும் இழிவுபடுத்துவதாகுமென்றும் அதனால் நாவலர்க்குத் தொல்லை யேதேனும் ஏற்படக் கூடும் என்றும் அச்சுறுத்தினர். அஞ்சா நெஞ்சு படைத்த ஆறுமுகநாவலர் அப் புலவர்களுடைய உரைகளை ஒரு பொருட்படுத்தினாரல்லர்.

பிறகு அரசருடைய உறவினர் சிலர் நாவலரிடம் வந்து சேதுமன்னர்கள் சிறந்த அறிஞர்கள் என்றும், தண்டமிழ்த் தொண்டர்கள் என்றும், சிறிய குற்றங்களைப் பொருட்படுத்தாமல் அளவளாவிச் செல்லுதலே நல்லதென்றும் பணிவுடன் வேண்டிக்கொண்டனர். அவர்களுடைய வேண்டுகோள் நாவலர் உள்ளத்தைக் கனியச் செய்தது. அவர்கள்தம் வேண்டுகோளுக்கு ஒருவாறு இணங்கினார். தம்முடைய விருப்பம்போல் சென்று முத்து ராமலிங்க சேதுபதியையும் பொன்னுச்சாமித்தேவரையும் கண்டு அளவளாவினார். தேவருடைய அவையிற் சொற்பொழிவுகள் சில நாவலரால் செய்யப்பட்டன. அச் சொற்பொழிவுகள் அரசருக்கும அமைச்சருக்கும் அறிஞர்கட்கும் மிகுந்த மகிழ்ச்சியை உண்டாக்கின. திருக்குறள் பரிமேலழகர் உரை, திருக்கோவையார் உரை, இலக்கணக் கொத்து, பெரிய புராணம் முதலிய நூல்களைப் பிழையற ஆராய்ச்சி செய்து வெளிப்படுத்தவேண்டும் என்று வேண்டிக்கொண்டார். அதன்பொருட்டுத் தக்கவாறு உதவியும் புரிந்தார். மேற்கண்ட நூல்களும் வேறு சில நூல்களும்

சிறந்த முறையில் வெளிவந்து இன்றுவரை நிலைபெற்று விளங்குதற்குப் பொன்னுச்சாமித்தேவர் அவர்களே மூல காரணராவர். நாவலரால் பதிப்பிக்கப்பட்ட நூல்களில் நூற்றுக்கணக்கான படிகள் தேவர் அவர்கட்கு அனுப்பப் பட்டுத் தகுதியுடையவர்களுக்குக் கைம்மாறில்லாமலே வழங்கப்பெற்றன. இதனைப் பார்க்கினும் சிறந்த தமிழ்த் தொண்டு வேறேயும் உள்ளதோ ?

பரந்த நோக்கம்

தேவர் அவர்கள் சமயக்கொள்கை முதலியவைகளில் பொதுநோக்குடையவர். எச் சமயத்தினும் வெறுப்புக் கொள்ளார். எவரையும் தாழ்வுபடுத்த எண்ணார். சீமை வரை சென்று வழக்கிட்ட எதிரிகள் தோல்வியடைந்த போது அவர்களைப் பெருமைப்படுத்திச் சிறப்புடன் வாழச் செய்தார். கலைத்துறையில் முழுக் கருத்தையும் செலுத்தியிருந்த இவர் ஆட்சித்துறையினும் அணுவும் தவறாமல் செயல்களைப்புரிந்து நின்ற செயல் பலருக்கும் வியப்பையும் திகைப்பையும் அளித்தது.

உடல்நிலை தளர்தல்

தேவர் அளவுகடந்த உழைப்பில் ஈடுபட்டதனால் முப்பத்திரண்டாம் அகவையிலேயே உடல் தளர்ச்சி யடைந்துவிட்டது. பொன்னுச்சாமித் தேவர்க்கு வேண் டிய நிலம் பொருள் முதலியன பர்வதவர்த்தனி அரசியா ரால் மிகுதியாகி வழங்கப்பெற்றிருந்தன. தேவர்க்கு மூன்று மனைவியரும் மூன்று ஆண்மக்களும் மூன்று பெண் மக்களும் இருந்தனர். விரைவில் தாம் மறைய நேரிடும் என்பதைத் தேவர் உணர்ந்தார். தம்முடைய பொருளை உறவினரிடம் ஒப்படைப்பதற்குத் தேவர்க்கு மனமில்லை. புதல்வர்களோ சிறுவர்களாக இருந்தனர். சேஷாத்திரி

ஐயங்கார் என்னும் அந்தணரைத் தெரிந்தெடுத்து அவர்பால் தமது குடும்பப்பொறுப்பை ஒப்புவித்தார். தம் அமைச்சர் பதவியைத் தம் அம்மான் கோட்டைச் சாமித்தேவரின் மகன் சேதுராசாத்தேவர் என்பவரிடம் ஒப்படைத்தார். தாம் உடல்நலங் கருதி ஓய்வெடுத்துக் கொண்டார். சில அலுவல்களைப் பார்ப்பதற்குச் சிவகங் கைக்குச் சென்றார். சிவகங்கையின் சீர்கேடான நிலை,

"மூட்டைப்பூச் சிக்கடியும் மொய்த்தகொசு குக்கடியும்
கேட்டையே தேட்டமுறும் கேடரும்—நாட்டமிகு
கேதபுர மானசிவ கெங்கைவிட்டு மால்ராம
நாதபுரஞ் சேர்வதெந்த நாள்."

என்று தேவரை வெண்பாப் பாடச்செய்தது

## இறுதி

சிவகங்கையில் நோய்வாய்ப்பட்ட பொன்னுச்சாமித் தேவரைக் கிருட்டிண ஐயங்கார் விரைவில் இராமநாதபுரத் திற்குக் கொண்டுபோய்ச் சேர்த்தார். 1870-ஆம் ஆண் டிலே தமது முப்பத்துமூன்றாவது அகவையிலே பொன் னுச்சாமித்தேவர் இறைவன் திருவடிநீழலை எய்தினார்.

## கக. பாண்டித்துரைத் தேவர்

### தோற்றம்

ஈண்டிய புகழ்சேர் பாண்டித்துரையெனும் ஆண்டகையார், பொன்னுச்சாமித்தேவரின் புதல்வராக அவருடைய முதல் மனைவியிடத்திலே 1867-ஆம் ஆண்டு மார்ச்சுமாதம் இருபத்தொன்றுநாள் பிறந்தார். பொன்னுச்சாமியார் பூவுலக வாழ்வை நீத்தபோது பாண்டித்துரைக்கு அகவை மூன்று. இவருக்கு உக்கிர பாண்டியன் என்னும் பெயரும் உண்டு. ஆனால் அப்பெயர் செய்யுள் வழக்கில்மட்டும் பயின்று நின்றது.

### கல்வி கற்றல்

சேஷாத்திரி ஐயங்காரின் மேற்பார்வையில் பாண்டித்துரை தக்கவாறு கல்வி கற்றுவந்தார். அழகர்ராசு என்ற அறிஞர் இளம்பருவத்தில் ஆசிரியராக அமைந்தார். இவர் கல்வி கற்பிக்கும் ஆற்றல் பெரிதும் அமையப்பெற்றவர். வழக்கறிஞர் வேங்கடேச சாத்திரி என்பவர் ஆங்கில ஆசிரியராக இருந்தார். இவரும் கற்பிக்கும் ஆற்றல் உடையவர். இவர்கள் இருவருடைய முயற்சியினால் பாண்டித்துரை இரு மொழிகளிலும் சிறந்து விளங்கினர். பாண்டித்துரை தகுந்த பருவத்தை அடைந்தபோது அவருடைய உரிமைப் பொருள்கள் யாவும் 1884-ஆம் ஆண்டில் அவரிடம் ஒப்படைக்கப்பட்டன. பாலவனத்தம் என்னும் சமீனும் வேறு பல சிற்றூர்களும் பாண்டித்துரைக்கு உரிமையாக அமைந்தன. பாண்டித்துரையின் சிறிய தந்தையாகிய முத்துராமலிங்க சேதுபதியின் திருமகனாகிய பாஸ்கரசாமி சேதுபதியானார். பாஸ்கர சேதுபதியும் பாண்டித்துரையும் உடலிரண்டாகவும் உயிர் ஒன்றாகவும் அமைந்து விளங்கினர். கல்வியிற் சிறந்து

விளங்கிய பாண்டித்துரை தம் இளவலாகிய பாஸ்கர சேதுபதியின் கல்வி வளர்ச்சியினும் உள்ளஞ் செலுத்தினர். பாண்டித்துரை தம் சொத்துக்களைத் தாமே பொறுப்புடன் கவனித்துப் பாதுகாக்கும் பெருவேலையை மேற்கொண்ட போதும கல்வி நிலைமையில் தளர்ச்சி யடைந்துவிடவில்லை. கல்வியை வளர்ச்சிபெறச் செய்வதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார். சதாவதானம் முத்துச்சாமி ஐயங்கார் என்பவர் பாண்டித்துரையின் அரங்கப் புலவராக அமைந்தார். திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த பழநிக் குமாரத்தம்பிரான் என்னும் சைவநூல் புலவர் பாண்டித்துரைக்குச் சைவசமய நூல்களைக் கற்பித்து அவைகளில் வல்லவராக்கினர்.

## பிறருக்கு உதவிசெய்தல்

கைம்மாறு கருதாமல் பிறருக்கு உதவிசெய்யும் வள்ளன்மைப்பண்பு பாண்டித்துரையிடம் மிகுதியாக அமைந்திருந்தது. அந்தணாளர்களும் பிறரும் முத்தமிழ்க் கல்வியிற் சிறந்து விளங்குதற்குத் தம்மால் இயன்றவைகளையெல்லாம் புரிந்தார். பாண்டித்துரையின் உதவியால் பலர் இசைநூற் புலவர்களானர்கள். பலர் இயனூற்புலவர்களானர்கள். சோமசுந்தர விலாசம் என்னும் பெயருடைய மாளிகை ஒன்றைப் பாண்டித்துரைத்தேவர் தமக்காக அமைத்துக்கொண்டார். பாண்டித்துரையின் இறைவழிபாடு, நூலாராய்ச்சி முதலிய செயல்கள் இந்தச் சோமசுந்தர விலாச மாளிகையிலேயே நிகழ்ந்தன.

## தேவர் அவையும் செந்தமிழ்ச் செல்வர்களும்

தம் தந்தையாரைப்போலவே பாண்டித்துரையும் அறிஞர்கள் நிறைந்த அவையினை அமைத்து அதன்கண் நூலாராய்ச்சி, சொற்பொழிவு முதலிய அருங்கலை விநோதங்

களை நடத்திவந்தார். நாராயண ஐயங்கார், சாமி ஐயங்கார், சுந்தரேசுவர ஐயர், அரங்கசாமி ஐயங்கார், சிவகாமியாண்டார் முதலிய பேரறிஞர்கள் தேவரின் திருவரங்கத்தை அழகு செய்துகொண்டிருந்தார்கள். கம்பராமாயணம், பெரியபுராணம், திருவிளையாடற்புராணம் முதலிய நூல்களைப் படித்து மறைபொருள்களை வெளிப்படுத்துதல், புதுப்பொருள் காண்டல், செய்யுள்நயம் பாராட்டல், ஈற்றடிகொண்டு செய்யுள் இயற்றல், சிலேடைபாடுதல், புதுப்புலவர்களின் திறமையை ஆராய்தல், அவர்கட்கு நன்கொடை வழங்கிச் சிறப்புச்செய்தல் முதலிய செயல்கள் பாண்டித்துரையின் அவையில் நிகழ்ந்தன. சிவகாமியாண்டார், சுந்தரேசுவர ஐயர் என்னும் இருவரும் எப்பொழுதும் பாண்டித்துரையுடனேயே தங்கி அவர் விரும்பும் நூல்களை ஒருவர் மாறி ஒருவர் படிப்பார்கள். இந்த இரண்டு அறிஞர்களும் இனிய குரலும் தமிழறிவும் மிகுதியாகப் பெற்றிருந்தார்கள். அரங்கசாமி ஐயங்கார் என்பவரும் பாண்டித்துரையின் நூலாராய்ச்சி முதலியவைகட்கு நற்றுணையாக அமைந்திருந்தார்.

தமிழ்நூல்களுக்கு உதவி

பாண்டித்துரை தம் தந்தையாரைப் பின்பற்றித் தமிழ் நூல் பதிப்புகளுக்கு உதவிசெய்யலானார். புறப்பொருள் வெண்பாமாலை, மணிமேகலை ஆகிய நூல்களை அச்சிற் பதிப்பிப்பதற்கு உ. வே. சாமிநாத ஐயரவர்களுக்குப் பெரும் பொருள் வழங்கினார். தேவரவர்கள் வழங்கிய பெரும் பொருளினால்தான் அரும்பொருள் முதலிய நயங்களோடு அந்நூல்கள் வெளிவந்தன. ஞானசம்பந்தப் பிள்ளை என்னும் ஒருவரைக்கொண்டு தேவாரத் தலமுறைப் பதிப்பைப் பாண்டித்துரை முதலாவதாக வெளியிட்டார். மேலும் அந்த ஞானசம்பந்தப் பிள்ளை சிவஞான சுவாமிகள் பிரபந்

தத்திரட்டு முதலிய நூல்களை வெளியிடுவதற்கு உதவி செய்தார்.

பன்னூற்றிரட்டு

பாண்டித்துரையின் உள்ளத்தில் ஓர் எண்ணம் தோன்றியது. பழைய நூல்களைக்கொண்டே ஒரு புதிய நூலை இயற்றலாம் என்று முடிவு செய்தார். அறிஞர்களோடு நூல்களை ஆராய்ச்சி செய்யும்போது அறம் பொருள் இன்பம் முதலிய செய்திகளைக்கூறும் பாடல்களையெல்லாம் ஒன்றுபடுத்தினர். பிறகு அவைகளை வகை வகையாகப் பிரித்துத் திருக்குறளைப்போல அதிகார அடைவு முதலியவைகளை அமைத்தார். நூலுக்குப் பன்னூற்றிரட்டு என்று பெயர் கொடுத்தார். இந்த ஒரு நூலைக் கொண்டே பல நூல்களினும் கூறப்பெறும் அறநெறிப் பாடல்களையெல்லாம் ஒருங்கே அறிந்துகொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது. இந்நூலின் பயன் பல நூல்களும் ஒன்று சேர்ந்ததாக ஆயிற்று. அறிஞர்பலரின் உதவிகொண்டு பாண்டித்துரை ஆக்கிய இந்நூல், பாண்டித்துரையின் மாட்டு யாவரும் பெருமதிப்புக்கொள்ளக் காரணமாக முடிந்தது. ஒரு புதுநூல் செய்திருப்பினும் பாண்டித்துரைக்கு இவ்வளவு புகழ் ஏற்பட்டிருக்கமாட்டாது.

மதுரைத் தமிழ்ச்சங்கம்

பாண்டித்துரை அடிக்கடி மதுரைமாநகர்க்குச் சென்று அங்குள்ள அன்பர்கள் விருப்பப்படி சொற்பொழிவுகளாற்றி மீண்டனர். அந்நாளில் தமிழ் வளர்ந்த மதுரையம்பதியில் இந்நாளினும் தமிழ் வளரும்படி செய்ய வேண்டுமென்று பாண்டித்துரைத்தேவர் விரும்பினர். 'தமிழ்ச்சங்கம் ஒன்று ஏற்படுத்தினல் புலவர்கள் ஒன்று கூடி உரையாடி மகிழ்வதற்குத் தகுதியாக இருக்கும்;

விரும்புவோருக்குத் தமிழ்மொழியையும் கற்பிக்கலாம். பல நூல்களையும் தொகுத்துப் படிப்பகம் ஒன்றும் ஏற்படுத்திப் பொதுமக்கள் நூல்கற்று மகிழவும் செய்யலாம்' என்று முடிவு செய்தார். 1901-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 14-ம் நாளன்று மதுரையிலே தமிழ்ச்சங்கம் ஒன்றை ஏற்படுத்தினார். இதற்கு முன்னர் மூன்று சங்கங்கள் இருந்ததாக நூல்களால் தெரியவந்தமையின், இந்தச் சங்கம் நான்காம் தமிழ்ச்சங்கம் எனவும், மாணவர்கள் பலர் கல்வி பயிலத் தொடங்கினமையின் மாணவர் செந்தமிழ்ச் சங்கம் எனவும் பெயர் பெற்றது. தொடக்கத்தில் புலவர்கள் பலர் இதில் உறுப்பினர்களாக அமைந்திருந்தனராயினும் காலப்போக்கில் அந்நிலை மாறிவிட்டது.

தமிழ்ச்சங்கம் தொடங்கப்பட்டபோது, உ. வே. சாமிநாதையர், ரா. இராகவையங்கார், வை. மு. சடகோபராமானுசாச்சாரியார், வி. கோ. சூரியநாராயணசாத்திரியார், சோழவந்தான் அரசஞ் சண்முகனார், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், திருமயிலை சண்முகம்பிள்ளை முதலிய அறிஞர்கள் வந்திருந்து பெருமைப்படுத்தினர். பாஸ்கர சேதுபதி மன்னர் தம் கூட்டத்துடன் வந்திருந்தார். சங்கத்தின் சார்பாக, சேதுபதி செந்தமிழ்க்கலாசாலை, பாண்டியன் புத்தகசாலை, நூலாராய்ச்சிச்சாலை முதலியனவும் அமைக்கப்பட்டன. தமிழ்ச்சங்கத் திருவிழா மூன்று நாள் நடைபெற்றது. புலவர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினர்.

செந்தமிழ்க்கலாசாலைக்கு நாராயண ஐயங்கார் தலைமை ஆசிரியராக அமர்த்தப்பெற்றார். இராகவ ஐயங்கார் நூலாராய்ச்சிச்சாலைக்குத் தலைவரானார்; பாண்டியன் புத்தக சாலை பல நூல்களால் நிரம்பியது; செந்தமிழ்க் கலாசாலை

முதலியன இன்றுவரை சிறப்புடன் நடைபெற்று வருகின்றன. தமிழ்ச்சங்கத்தின் சார்பில் அமைக்கப்பட்ட அச்சகம் நூல்கள் பலவற்றை வெளியிட்டு வருகிறது. மதுரைத் தமிழ்ச்சங்கம் அமைக்கப்பெற்ற பின்னரும் பலர் பாண்டித்துரையிடம் நூல் வெளியிடுதல் முதலியவைகளுக்குத் தக்க உதவிபெற்றனர்.

பாஸ்கரசேதுபதி மறைவு

பாண்டித்துரையின் செயல்கள் யாவற்றிற்கும் பெருந்துணையாக அமைந்திருந்த பாஸ்கரசேதுபதி தம்முடைய முப்பத்தாரும் அகவையிலே இறைவனுடைய திருவடி நீழலை அடைந்தார். சேதுபதியின் மறைவு பாண்டித்துரைக்கு மிகுந்த மனவருத்தத்தை உண்டாக்கியது. அதனால் வருந்தியபோது,

"என்னுவி உளங்குளிர அண்ணுவென்
றன்பொடினி எனையார் சொல்வார்,
மன்னுமன் னுமன்னு எனயாரை
யானினிமேல் மதித்துச் சொல்வேன்,
பொன்னுடுந் தொழுஞ்சேது நன்னுடு
புரந்தளிக்கப் போந்த நீவே
றெங்நாடு சென்றனையோ எங்கள்குல
மணிவிளக்கே இசைத்தி டாயே."

என்பதுபோன்ற செய்யுட்களைப் பாடிப் புலம்பினர். பாஸ்கரசேதுபதி தமிழ்ச்சங்கத்திற்குத் தம்மால் இயன்ற உதவிபுரிந்ததுடன் தருந்தவர்களைக்கொண்டும் உதவிபுரியச் செய்தனர். இவருடைய மறைவால் பாண்டித்துரை தமிழ்ச்சங்க உதவியாளரை இழக்கும்படியாக நேரிட்டது.

சொல்லாற்றல்

பாண்டித்துரை சொல்வன்மை உடையவர். கேட்டார்ப்பிணிக்கும் தகையவாகவும், கேளாரும் வேட்பவும்

பேசுவதில் வல்லவர். பாண்டித்துரையின் சொற்பொழிவைக் கேட்டற்குப் பலரும் விரும்பினர். பல அரங்கங்கட்குஞ்சென்று சொற்பொழிவுசெய்து எல்லோரையும் மகிழ்வித்தார் பாண்டித்துரை. முருகக்கடவுள்மீது காவடிச்சிந்து, சிவஞான சுவாமிகள் தோத்திரம் முதலியவைகளையும் பாண்டித்துரை பாடியுள்ளார். பாண்டித்துரை மதுரையில் தமிழ்ச்சங்கத்தை ஏற்படுத்தியபின்னர்ப் பல இடங்களினும் தமிழ்ச்சங்கங்கள் ஏற்பட்டுத் தமிழ்த் தொண்டு புரியலாயின.

திக்கிரையாகிய திருக்குறள்

எவரேனும் பிழையுற எழுதுதலையோ பேசுதலையோ கண்டால் பாண்டித்துரைக்கு மிகுந்த சினமுண்டாகும். எழுத்துக்குற்றம் சொற்குற்றம் முதலிய எத்தவறுகளையும் இவர் பொறுக்கமாட்டார். மதுரையில் ஓர் ஆங்கிலோ இந்தியர் இருந்தார். அவர் வழக்கறிஞராகத் தொழில் புரிந்துகொண்டிருந்தார். தமிழைச் சிறிது கற்ற அளவில் அவர் தம்மைத் தமிழில் பேரறிஞராக மதித்து நடக்கவும் தமிழ்நூல்களைத் திருத்தவும் தொடங்கினர். தெய்வப் புலவரின் திருக்குறள் இந்த வெள்ளைத்துரையின் கையிற் சிக்கியது. தாம் தவறு என்று எண்ணிய குறள்களையெல்லாம் திருத்தத்தொடங்கினர். "அகர முதல வெழுத் தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே உலகு" என்னுங் குறளில் இரண்டாவது அடியில் மோனையில்லை. என்று எண்ணிய துரை, அக்குறளை,

"அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி
உகர முதற்றே உலகு"

என்று திருத்தினர்.

"தக்கார் தகவில ரென்பது அவரவர்
எச்சத்தால் காணப்படும்"

என்னும் குறளில், எதுகை சரியாக இல்லை என்று எண்ணியபடியால்,

"தக்கார் தகவில ரென்பது அவரவர்
மக்களாற் காணப் படும்"

என்று திருத்தினார். இன்னும் இத்தகைய திருத்தங்கள் பலவற்றைச் செய்தார். பொருட் செலவுசெய்து உயர்ந்த பதிப்பாக ஐந்நூறு படிகள் அச்சிட்டார். அச்சிட்ட நூலைச் சிலருக்கு இனமாக வழங்கினார். சிலருக்கு ஒரு ரூபா விலைக்கு விற்றார். இருநூறு படிகள் செலவாயின. முந்நூறு படிகள் செலவாகாமல் இருந்தன. பாண்டித் துரையின் தமிழ்ப்பற்றையும் பேரறிவையும் உணர்ந்த வெள்ளைத்துரை பாண்டித்துரையைக்கண்டு ஒரு திருக் குறள் புத்தகத்தைக் கொடுத்தார். தாம் செய்துள்ள திருத்தங்களையும் விளக்கிக் கூறினார். பாண்டித்துரை தம் மைப் புகழ்ந்து போற்றுவார் என்பது வெள்ளைத்துரை யின் எண்ணம். பாண்டித்துரை அத் திருக்குறளைக் கண்டு மிகுந்த சீற்றங்கொண்டார். அவருடைய உள்ளத்தில் ஓர் எண்ணம் உண்டாயிற்று. அவ்வாறே செய்துவிடலாம் என்று முடிவு செய்துகொண்டு தம்முடைய சீற்றத்தை மாற்றிக்கொண்டார். "தாங்கள் எத்தனை படிகள் அச் சிட்டீர்கள்? இன்னும் கையிருப்பில் எத்தனை புத்தகங் கள் உள்ளன? ஒரு புத்தகத்தின் விலை எவ்வளவு?" என்று கேள்விகளை அடுக்கினார்.

நம்முடைய திருத்தமும் பதிப்பும் இவருக்குப் பிடித் திருப்பதால் புத்தகங்களை வாங்கிக்கொண்டுபோய்ப் பல ருக்கும் வழங்கப்போகிறார் என்று எண்ணிய துரை பாண் டித்துரையைப் பார்த்து, "ஐந்நூறு படிகள் அச்சிட்

டேன். இருநூறுபடிகள் செலவாகிவிட்டன. இன்னும் மூந்நூறு படிகள் கையிருப்பில் இருக்கின்றன. ஒரு புத்தகத்தின் விலை ரூபா ஒன்று" என்று பதில் உரைத்தார்.

பாண்டித்துரை அந்தத் துரையைப் பார்த்து, "நீங்கள் இவைகளை விற்பதற்குத் தொல்லைப்பட வேண்டா. எல்லாப் புத்தகங்களையும் கட்டி இராமநாதபுரத்திற்கு அனுப்புங்கள். நான் விலையைக் கொடுத்துவிடுகிறேன்," என்று கூறிவிட்டு இராமநாதபுரத்திற்குச் சென்றார். துரை திருக்குறள் புத்தகங்கள் யாவற்றையும் அங்கு அனுப்பி வைத்தார். இராமநாதபுரத்தில் திருக்குறளைப் பெற்ற பாண்டித்துரை அப் புத்தகங்களையெல்லாம் தீக்கடவுளுக்கு இரையாக்கினார். அப்பதிப்பினால் ஏற்படக்கூடிய தீமைகளையும், துரையின் மடமையையும் பாண்டித்துரை அறிஞர் பலருக்குங் கூறினார். பாண்டித்துரையின் செந்தமிழ்ப்பற்றும் நுண்ணுணர்வும் பலருக்கும் மிகுந்த மகிழ்ச்சியை உண்டாக்கின.

மறைவு

நாட்டுமக்களின் நலங்கள் பலவற்றினும் உள்ளஞ் செலுத்திய பாண்டித்துரைக்கு இறைவன் நீண்ட வாணாளைக் கொடுக்கவில்லை. அறிவாளிகளை விரைந்துண்ணுங் கூற்று பாண்டித்துரையின்மீதும் பாய்ந்தது. 1911 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் இரண்டாந் தேதி தமது நாற்பத்து நான்காவது அகவையில் திடீரென்று உலகவாழ்வை நீத்தார். பாண்டித்துரையின் பிரிவை உணர்ந்து அறிஞர்கள் பலரும் வருந்திப் புலம்பினர். தமிழ்மாதுபெற்ற பல பெருஞ் சீர்த்திகள் வளர்ச்சிக் கிடமில்லாமல் போய்விட்டன.

---

## கஉ. சுவாமிநாத தேசிகர்

பெயர்

சுவாமிநாதன் என்னும் பெயர் இவருடைய இருமுது குரவரால் இவருக்கு இடப்பட்டது. பிற்றை நாளில் ஈசான தேசிகர் என்னும் பெயர் இவருக்கு உண்டாயிற்று. தேசிகர் என்பது அறிவுநூல்களைக் கற்று ஒழுக்கங்களிற் சிறந்து துறவு நெறிக்கண் ஆசிரியரானமைபற்றி ஏற்பட்ட சிறப்புப் பெயர்.

இடம் காலம் முதலியன

இவர் தோன்றிக் கல்வி கற்றுச் சிறப்படைந்த இடம் பாண்டி நாட்டிலுள்ள திக்கெலாம் புகழும் திருநெல்வேலி. ஏறக்குறைய இருநூறு யாண்டுகட்கு முன்னர் இருந்தவர். சைவ வேளாளர் குலம். சைவசமயம்.

வாழ்க்கை வரலாறு

கல்வியறிவிலும் ஒழுக்கத்திலும் தலைநின்ற இவர் இளமைப் பருவத்திலேயே துறவறநெறிக்கண் உளம் செலுத்தினார். திருவாவடுதுறையை அடைந்து அம்பலவாண தேசிகரிடம் சிவதீக்கை பெற்றுத் துவராடை கட்டி அறிவு நூல்களைப் பயின்றுகொண்டிருந்தார். பதினேழாம் நூற்றாண்டுத் தமிழ்ப்புலவர்கள் வரலாறு எழுதிய சோமசுந்தர தேசிகர் சுசீந்திரத்தில் இருந்த மாசிலாமணித் தேசிகரிடத்தில் நூல்களைப் பயின்றார் என்பர். அந்நாளில் பேரறிஞராக விளங்கியிருந்த மயிலேறும் பெருமாள்பிள்ளை என்பவர் சுவாமிநாததேசிகரின் அறிவு ஒழுக்கம் முதலியவைகளைக் கண்டு வியப்படைந்தார். தாம் கற்ற கல்வியைஅவருக்குக் கற்பிக்க எண்ணினார். ஆதீனத் தலைவரின் உடன்பாடு பெற்று அவரைத் தம்முடன் திருநெல்வேலிக்கு அழைத்துச் சென்றார்.

கல்விப்பயிற்சி

சுவாமிநாத தேசிகருக்கு வேண்டிய உணவு உடை முதலிய எல்லா உதவிகளையும் தம் இல்லத்திலேயே செய்தார். தொல்காப்பியம் இளம்பூரணம், சேனாவரையம், நச்சினார்க்கினியம், திருக்குறள் பரிமேலழகர் உரை, திருக்கோவையார் உரை, சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி ஆகிய இலக்கண இலக்கிய நூல்களை ஐயந்திரிபறக் கற்பித்தார். அந்நாளில் செப்பறைப் பதியில் வடமொழிப் புலமையில் திடமுடைப் புலவராக அமைந்திருந்த கனகசபாபதி சிவாச்சாரியாரைக் கொண்டு வடமொழி இலக்கண இலக்கியங்களையுங் கற்பிக்கச் செய்தார். இவ்வாறு பன்னிரண்டு யாண்டுகள் கல்விகற்றுத் தேர்ந்தார்.

சுவாமிநாத தேசிகருக்குத் தமிழாசிரியர் மயிலேறும் பெருமாள்பிள்ளை யென்பதும், வடமொழி ஆசிரியர் கனக சபாபதி சிவாசாரியர் என்பதும்,

"திருநெல் வேலி எனுஞ்சிவ புரத்தன்
தாண்டவ மூர்த்தி தந்தசெந் தமிழ்க்கடல்
வாழ்மயி லேறும் பெருமாள் மகிபதி
இருபத கமலம் என்தலை மேற்கொண்(டு)
இலக்கணக் கொத்தெனும் நூலியம் புவனே."

"செப்பறைப் பதியின் வாழ்சிவத் துவிசன்
கனக சபாபதி கருதுவட நூற்கடல்
தபோதனர் புகழும் சைவாதி ராசன்
உபய பதங்களை உண்மையொடு பணிவாம்."

என்னும் இலக்கணக் கொத்துரைப் பாயிரத்தாற் பெறப்படும். தாய்மொழியாகிய தமிழைவிட வடமொழியிடத்தில் சுவாமிநாத தேசிகருக்கு மிகுந்த பற்றுண்டு. தமிழ் மொழிக்கும் வடமொழிக்கும் இலக்கணம் ஒன்றென்பது இவருடைய கொள்கை.

இலக்கணவிளக்க ஆசிரியர்

சுவாமிநாத தேசிகர் திருவாவடுதுறையில் தங்கியிருந்த போது, திருவாரூரில் தோன்றியவரும் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுணர்ந்தவரும் இலக்கண விளக்கம் என்னும் நூலைத் தொகுத்தவருமாகிய வைத்தியநாத நாவலர் என்பவர் திருவாவடுதுறைக்கு வந்தார். எல்லோரும் பந்தியில் உண்டுகொண்டிருந்தனர். ஆதீனத் தலைவர் நாவலரை நோக்கி, "வந்த விளேப்பாற் போசனஞ் செவ்வையாகச் செய்தற்கிசைய வில்லையோ?" என்று கேட்டார். உடனே நாவலர், ஆதீனத் தலைவரைப் பார்த்து, 'வந்த விளேப்பு' என்னுந் தொடர் மொழிக்கு இலக்கணம் ஆராயத் தொடங்கினர். அப்போது ஆதீனத்தலைவர் சுவாமிநாத தேசிகரைப் பார்த்துக் குறிப்புக் காட்டினர். உடனே சுவாமிநாத தேசிகர் அச்சொற்றொடரின் பொருள் முடிபுகளை இனிது விளக்கினர். மேலும் சில வினக்களையும் போட்டார். தேசிகர்தம் கேள்விக்கு நாவலரால் பதிலுரைக்க முடியவில்லை. நாவலர் வியப்படைந்து சுவாமிநாத தேசிகரைப் பெரிதும் போற்றினர். இத்தகைய அறிஞர்களை எக்காலத்தும் உடன்வைத்துக்கொள்ள வேண்டும் என்றும் வேண்டிக்கொண்டார்.

இவர் செய்த நூல்கள்

சுவாமிநாத தேசிகர் செய்தனவாக அறியப்பட்டுள்ள நூல்கள் இலக்கணக்கொத்துரை, தசகாரியம், திருச்செந்திற் கலம்பகம் என்பனவாம். இலக்கண இலக்கியங்களில் இலைமறை காய்போற் கிடந்த பலவிதிகளையும் ஒன்று சேர்த்துச் செய்யப்பட்டது இலக்கணக்கொத்துரை. தசகாரியம் என்பது மெய்யறிவு நூல். [illegible] மாநகரின் எழுந்தருளிய திருமுருகப் பெருமானை உள்ள முருகிப் பாடியது திருச்செந்திற் கலம்பகம்.

தேசிகர் தாம் செய்த இலக்கணக் கொத்துக்குத் தாமே உரையும் எழுதினார். நூல் செய்தவர்கள் அந் நூலுக்குத் தாமே உரையுஞ் செய்யலாமா என்று ஐயப் பாட்டை உண்டாக்கினர் சிலர். அதற்குத் தேசிகர்,

"நூல்செய் தவன்அந் நூற்குரை எழுதல்
முறையோ எனிலே அறையக் கேள்நீ
முன்பின் பலரே என்கண் காணத்
திருவா ரூரில் திருக்கூட் டத்தில்
தமிழ்க்கிலக் காகிய வயித்திய நாதன்
இலக்கண விளக்கம் வகுத்துரை எழுதினன்
அன்றியும் தென்திசை ஆழ்வார் திருநகர்
அப்பதி வாழும் சுப்பிர மணிய
வேதியன் தமிழ்ப்பிர யோக விவேகம்
உரைத்துரை எழுதினன் ஒன்றே பலவே."

என்று விடையிறுத்தார்.

சங்கர நமச்சிவாயப் புலவர்

நன்னூற்கு விரிவுரை இயற்றிய சங்கர நமச்சிவாயப் புலவர் இவருடைய மாணவர் ஆவர் என்னை,

"தன்னடித் தாமரை தந்தெனை ஆண்ட
திருவா வடுதுறைத் தேசிக னாகிய
கருணையங் கடலைஎன் கண்ணைவிட் டகலாச்
சாமி நாத குரவனை அநுதினம்
மனமொழி மெய்களிற் றொழுதவ னருளால்"

என்று சங்கர நமச்சிவாயப் புலவர் தம்முடைய உரைச் சிறப்புப் பாயிரத்துள் உரைத்தமையாற் பெறப்படும்.

இலக்கண இலக்கியப்பயிற்சி

வடமொழி தென்மொழி எனுமிரு மொழியினும் உள்ள இலக்கண இலக்கிய நூல்கள் எல்லாவற்றினும் இவர் வல்லவர் என்பது இவருடைய நூலாலும் உரையாலும் நன்கு அறியப்படும். மிகுந்த பொருளைக் கொடுத்தாலும்

மந்த மதியினர் சேர்க்கை கூடாதென்பதும், பொருளைக் கொடுத்தாயினும் அறிவுடையோருடன் பழக வேண்டும் என்பதும் இவருடைய கொள்கை. இதனை,

"மாரிபோற் கொடுப்பினும் மந்தனை விட்டுக்
கூரிய னுடனே கொடுத்தும் பழகுக"

என்று இலக்கணக்கொத்தில் இயம்பியுள்ளார். இவருடைய நூலையும் உரையையும் சிறிது காண்பாம்.

இலக்கணக்கொத்துரை

"சிறிதினை சிறியேன் சிறிய சிறார்தமக்(கு)
உரைத்தனன் அன்றியீ தொருநூ லன்றே
இவ்வழக் கறிந்தோர் இகழுதல் வழக்கே
இவ்வழக் கறியா இகழுதல் வழக்கே."

கற்றோ ரெல்லாருள்ளுங் கடையே னென்பது தோன்றச் சிறியேனென்றும், கூரியோர்க்குத் தொல்காப்பிய முதலிய நூல்களிருத்தலால் ஏனையோர்க்கே இதுவென்பது தோன்றச் சிறியவென்றும், தருணர்க்கெல்லாம் அந்நூல்கள் இருத்தலின் பாலர்க்கே இதுவென்பது தோன்றச் சிறாரென்றும், ஓரதிகாரமாயினும் இதனுள் அறியக்கூடா தென்பது தோன்ற வழக்கே யென்றும், வழக்கறியாதார் வழக்கையு மிகழுதல் இயற்கையே என்பது தோன்ற வழக்கேயென்றும் கூறினும்.

"காணாதாற் காட்டுவான் தான்காணான் காணாதான்
கண்டானுந் தான்கண்ட வாறு"

என்பதனுள் இகழுதல் இயற்கையென்பது காண்க.

அவையடக்கமென்று பெயரிட்டு இங்ஙனம் பலவற்றையும் விரித்தனற் பயனென்னெனின், பலவாற்றானும் புழுத்த நாயினுங் கடையேன தறியாமையை எல்லோர்க்கும் அறிவித்தலொன்றுமே பயனென்க. இவ்வாசகம் முடிந்தது முடித்தலென்னு முத்தி.

## கஙு. உமறுப் புலவர்

**ஊர் முதலியன**

உமறுப்புலவர் என்பவர் சேது நாட்டில் உள்ள கீழக்கரையைச் சேர்ந்தவர். அவர் தோன்றிய காலம் ஏறக்குறைய இருநூற்று ஐம்பது யாண்டுகட்கு முன்பு என்பர். உமறுப்புலவருடைய மதம் முகமதியம்.

**கடிகை முத்துப்புலவர்**

உமறுப்புலவரின் தந்தை முத்து வாணிகத்தில் ஈடுபட்டிருந்தார். அவர் அடிக்கடி எட்டையபுரச் சிற்றரசரிடம் செல்வது வழக்கம். அங்கு செல்லும்போதெல்லாம் கடிகை முத்துப்புலவரையும் பார்த்து அவரோடு உரையாடி மகிழ்தல் வழக்கம். கடிகை முத்துப்புலவரின் சொல்லாற்றல் உமறுப்புலவரின் தந்தை உள்ளத்தைக்கவர்ந்தது. உமறுப்புலவரையும் அவர் அடிக்கடி உடனழைத்துச் செல்வது வழக்கம். கடிகை முத்துப்புலவருக்கு அரசரிடமும் மக்களிடமும் இருந்த செல்வாக்கும் புகழும் உமறு தந்தையின் உள்ளத்தைக் கவர்ந்தது. தம் மைந்தனையும் தமிழறிஞனாக்கவேண்டும் என்று விருப்பம்கொண்டார். தம் விருப்பத்தைக் கடிகை முத்துப்புலவரிடம் தெரிவித்தார். புலவருடைய உடன்பாட்டைப் பெற்றுத் தம் மைந்தனைப் புலவரிடம் ஒப்புவித்துச் சென்றார்.

**உமறு தமிழ்க்கல்வி பயிலல்**

கடிகை முத்துப்புலவரிடம் ஒப்புவிக்கப்பெற்ற உமறு தமிழ்க்கல்வியிலே மிகுந்த விருப்பங் காட்டினார். கடிகை முத்துப்புலவர் இயற்கையிலேயே சொல்லாற்றல் மிக்கவராக விளங்கினமையின் மிகு விரைவிலே தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்பித்தார். நாளடைவில் உமறு, உமறுப் புலவரானார்.

சீறாப்புராணம்

உமறு, தமிழ்மொழியை நன்கு கற்றாரெனினும் தம் மதத்தினிடத்திலே அழுந்திய பற்றுடையவராக விளங்கினார். முகமது நபியின் வரலாறு கூறுவதாகிய சீறாப்புராணத்தை ஐயாயிரம் பாடல்களாகப் பாடி முடித்தார். இப் புராணம் தமிழர்களாற் பாடப்பெற்றதுபோலவே செந் தமிழ் நடையில் அமைந்துள்ளது.

"திருவினுந் திருவாய்ப் பொருளினும் பொருளாய்த்
தெளிவினும் தெளிவதாய்ச் சிறந்த
மருவினு மருவாய் அணுவினுக் கணுவாய்
மதித்திடாப் பேரொளி அனைத்தும்
பொருவினும் பொருவா வடிவினும் வடிவாய்ப்
பூதலத் துறைந்தபல் லுயிரின்
கருவினும் கருவாய்ப் பெருந்தலம் புரந்த
கருத்தனைப் பொருத்துதல் கருத்தே"

என்பது கடவுள்வாழ்த்துச் செய்யுட்களில் ஒன்றாகும். இந்நூல் சீதக்காதியின் அவைக்களத்தில் அரங்கேற்றஞ் செய்யப்பெற்றதாகவும், ஆயினும், சீதக்காதி இந்நூலினைக் கேட்டு மகிழவில்லை என்றும் தெரிகிறது.

---

## கச. சுப்பிரமணிய தீட்சிதர்

தோற்றம்

சுப்பிரமணிய தீட்சிதர் என்னும் பெரியார் ஆழ்வார் திருநகரி என்னும் ஊரில் பிறந்தார். அவர் தோன்றிய காலம் இற்றைக்கு இருநூறு யாண்டுகட்கு முன்னர் என்ப. குலம் பார்ப்பனர் வகுப்பில் தீட்சிதர் என்னும் பிரிவைச் சேர்ந்தது. இவர் இளமைப்பருவத்திலேயே வடமொழி தமிழ்மொழி எனும் இருமொழிகளையுந் தெளிவுபெறக் கற்றார். "வேளாளன் கிரந்தம் வழவழ; பார்ப்பான் தமிழ்

வழுவழு" என்னும் முதுமொழிக்கு விதிவிலக்காகத் தீட்சிதர் அமைந்தார். இத்தீட்சிதரும் இலக்கணக்கொத்துச் செய்த சுவாமிநாத தேசிகரும் ஓர் ஆசிரியர் இடத்தில் வடமொழி கற்றவர்களென்பது சிலர் கொள்கை. இருவரும் ஒரு காலத்தினர் என்பது,

"அன்றியும் தென்திசை ஆழ்வார் திருநக
ரப்பதி வாழும் சுப்பிர மணிய
வேதியன் தமிழ்ப்பிர யோக விவேகம்
உரைத்துரை எழுதினன்.............."

என்று கூறுமாற்றல் பெறப்படும். அக்காலத்தில் பார்ப்பனர்கள் தமிழை ஒரு பொருட்படுத்திப் பயிலார். தமிழ் மொழியைச் "சூத்திர பாஷை" என இகழ்ந்து ஆரிய மொழியையே கற்று அம்மொழிக்குத் தம்மால் இயன்ற தொண்டுசெய்தலே அவர்தம் கொள்கை. அக்கொள்கைக்குத் தமிழறிவும் பெருந்துணை புரிவதாம் என்பதை உளங்கொண்டே தீட்சிதர் தமிழை நன்கு பயின்றார். வடமொழி தென்மொழி இரண்டின் இலக்கணமும் ஒருபுடை யொப்புமையுடையதென்றுணர்த்தி வடமொழி இலக்கணத்தைத் தமிழ்மொழியில் புகுத்தலானார்.

இவர் செய்த நூல்

தமிழ் மொழியில் இவர் பெயரால் வழங்கும் நூல் பிரயோக விவேகம் என்னும் ஒன்றுமட்டுமே. இந்நூல் ஐம்பத்தொரு கலித்துறைச் செய்யுட்களையுடையது. காரகப்படலம், சமாசப்படலம், தத்திதப்படலம், திங்ஙுப்படலம் என்னும் நான்கு படலங்களைக்கொண்டது. இந்நூலுக்கு இவரே உரையும் செய்துள்ளார். இவருடைய பிரயோக விவேகம் மூலமும் உரையும் வடமொழி தென்மொழி என்னும் இருமொழி இலக்கணமும் நன்கு பயின்

ளூர்க்கேயன்றி, மற்றையோர்க்கும் ஒருவாறு பயன்படக் கூடியது. இவர் தமது நூலை இராமபத்திர தீட்சிதர் என்னும் வடமொழி யறிஞர்முன் அரங்கேற்றஞ்செய்தாரென்பது அடியில் வரும் பாக்களால் அறியப்படும்.

"சீதள சந்த்ர முகராம பத்திர தீக்கிதர்க்குப்
போதொடு சென்று புகல்வோம் அவர்க்குப் பொழுதிலையேல்
மேதினி யிற்றமிழ் செய்பிர யோக விவேகந்தன்னைப்
பேதமி லாத பதஞ்சலி பாற்சென்று பேசுவமே."

"பேர்கொண்டு நின்றபிர யோக விவேகத்தைச
சீர்கொண்ட ராமபத்திர தீக்கிதன்தான்—நோகொண்டு
கேட்டான் இனிக்கண்ணுற் கேட்கும் பதஞ்சலிதான்
கேட்டாலென் கேளாக்கா லென்."

## கரு. வீர கவிராசர்

### தோற்றமும் கல்வியும்

பாண்டி மண்டலத்தில் இராமநாதபுரம் மாவட்டத்திலே நல்லூர் என்னும் பெயருடைய ஊர் ஒன்று உளது. அவ்வூர் முற்காலத்திலே குலோத்துங்க சோழநல்லூர் என்று வழங்கிவந்ததாகத் தெரிகின்றது. அவ்வூரில் இற்றைக்குச் சுமார் நானூற்றைம்பது ஆண்டுகட்குமுன்னே வீரன் என்னும் பெயருடையார் ஒருவர் தோன்றினார். அவருடைய குலம் பொற்கொல்லர் குலம் என்ப. இக்குலத்தினர் அந்நாளில் காளி வழிபாட்டினராக இருந்தனர். வீரனும் காளி வழிபாட்டில் தலைசிறந்து நின்றார். அப்பிராட்டியின் அருளால் அவருக்குக் கல்வியறிவும் இனிது சிறந்தோங்கியது. மிகு விரைவாகச் செய்யுள் இயற்றும் திறமையையும் அடைந்தார். அதன்பிறகு இவருடைய

பெயர் வீர கவிராசர் எனவும், வீரன் ஆசு கவிராசர் எனவும் வழங்கிநின்றது.

இவர் செய்த நூல் அரிச்சந்திர புராணமாகும். அப் புராணம் திருப்புல்லாணியில் திருக்கோயில்கொண்டுள்ள திருமால் முன்பு இருக்கும் சக்கரதீர்த்தக் கரையிலே அரங்கேற்றஞ் செய்யப்பட்டதாக,

"விதியினர சிழந்தவரிச் சந்தி ரன்றன்
வியன்கதையை வெண்கவியை விருத்தம் ஆக்கி
அதிவிதமாங் கலியுகத்தில் வருச காப்தம்
ஆயிரத்து நானூற்று நாற்பத் தாறில்
சதுமறைதேர் புல்லாணித் திருமால் முன்னே
சக்கரதீர்த் தக்கரைமேன் மண்ட பத்துள்
கதிதருசீர் நல்லூர்வாழ் வீரன் ஆசு
கவிராசன் கவியரங்கம் ஏற்றி னானே"

என்னும் அரிச்சந்திரபுராண நூன்முகப்புப் பாடலால் அறியப்படுகின்றது. இப்புலவர் செய்ததாக இந்நூல் ஒன்றே அகப்படினும் புலவருடைய போறிவின் போக்கை அறிந்துகொள்வதற்கு இந்நூல் ஒன்றே போதுமானதாக இருக்கின்றது.

## கசு. தண்டபாணி அடிகள்

### தோற்றம்

திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள், மகான் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் எனப் பலச்சிறப்புப் பெயர்களைப் பெற்ற தண்டபாணியடிகள் பாண்டிவள நாட்டிலே, திக்கெலாம் புகழும் திருநெல்வேலியிலே இற்றைக்கு 114 யாண்டுகட்கு முன்னர், அஃதாவது கலியுகம் சகூசக விகாரிவருடம் [ஆங்கிலம் 1839] கார்த்திகை மாதம் கக-ந் தேதி அத்தநாளிலே இவ்வுலகில் தோன்றியருளினார். அடிகளின் தந்தையார் பெயர் செந்தில்நாயகம்பிள்ளை. தாயார் பெயர் பேய்ச்சிமுத்து அம்மையார்.

### இளமைக்காலம்

அடிகளாருக்கு இடப்பெற்ற பிள்ளைப்பெயர் சங்கரலிங்கம் என்பது. பிறந்தவுடன் அழுதல் முதலிய செயல்களின்றிக் குழந்தை சும்மா கிடந்ததைக் கண்டோர் "இக் குழவி பிழைக்குமோ பிழைக்காதோ தெரியவில்லையே," என்றனர். தந்தையார் கனவில் முழுமுதற் கடவுள் தோன்றினார். திருநீற்றையும் செவ்வந்திமலர் ஒன்றையும் தந்தார். "குழந்தைக்குச் சங்கரலிங்கம் என்று பெயரிட்டு அழைப்பாயாக! அவ்வாறு செய்யின் குழந்தை சிறப்புடன் விளங்கும்" என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினார். கண்விழித்த செந்தில்நாயகம்பிள்ளை கையில் நீற்றையும் மலரையும் கண்டார். குழந்தைக்கு நீற்றை யணிந்தார். சங்கரலிங்கம் என்று பெயரிட்டார். இந்தச் செய்தியைப் பலருக்கும் இயம்பி உள்ளங்களித்திருந்தார். சங்கரலிங்கக் குழந்தை நாளொருவண்ணமும் பொழுதொருமேனியுமாக வளர்ந்து ஐந்தாண்டை யடைந்தது. அக்காலை பள்ளியிற்

சேர்த்தனர். ஆறும் அகவையின் இறுதியில் தந்தையார் விண்ணுலகேகினர். சீதாராமநாயகர் என்பவர் செந்தில் நாயகம் பிள்ளையின் நண்பர்; மாந்திரீகப் பயிற்சியுடையவர். அவர் சங்கரலிங்கக் குழந்தையைக் கவனித்து ஆவனசெய்தலை மேற்கொண்டார். திருமகள் ஆனைமுகக் கடவுள் முதலிய கடவுளரின் அருமறையையும் வழிபாட்டு முறையையும் சங்கரலிங்கத்திற்குக் கற்பித்தார். பிறகு முருகனது ஆறெழுத்து மறையையும் வேல் வழிபாட்டு முறையையும் போதித்தார்.

பின்னர் சங்கரலிங்கம் தம் பெரிய தாயின் ஊரான சுரண்டையை அடைந்தார். அவ்விடமே தங்கிக் கல்வி பயின்றார்.

செய்யுள் இயற்றல்

அவ்வூரின் அண்மையில் ஓர் அம்மன் கோயில் இருந்தது. அந்த அம்மனுக்குச் சிறப்புவழிபாடு நடைபெற்றது. அதனைக் காண்டற்குச் சங்கரலிங்கரும் சென்றார். "அம்மனுடைய பெயர் யாது?" என்று அங்கிருந்தவர்களை உசாவினர். "பூமிகாத்தாள்" என்று அங்கிருந்தோர் விடையளித்தனர். "பூமிகாத்தாள் என்று பெயர் வரக் காரணம் யாது?" என்று மேலும் உசாவினர். அந்நாளில் இவருக்கு அகவை எட்டரை. இவருடைய வினாவிற்கு எவரும் பதிலுரைக்கவில்லை. பேசாமல் இருந்தனர். சங்கரலிங்கருக்குத் தெய்வத்திருவருள் உண்டாயிற்று. அம்மனுடைய பெயர்க்காரணம் ஒருவெண்பாவாக இவருடைய உள்ளத்தில் தோன்றியது. உடனே இவர்,

"அமுதங் கடையுநாள் ஆலம் வெடித்துத்
திமுதமெனத் தீயெரித்துச் சென்ற-தமுதமெனத்
தீக்கடவுள் உண்டார் திருக்கண்டத் தைப்பிடித்துக்
காத்ததனால் பூமிகாத் தாள்."

என்னுஞ் செய்யுளை இயற்றி இதன்பொருளையும் நன்கு விரித்துக் கூறினர். கேட்டவர்கள் இறும்பூதடைந்து மகிழ்ந்தனர். பிறகு சிலகாலம் பொறுத்து நெல்லைக்குத் திரும்பினர். தாம் இயற்றியிருந்த பல செய்யுட்களை சீதாராம நாயகருக்குக் காட்டினர். நாயகர் அதனைக் கேட்டு மகிழ்ந்து கொண்டாடினர்.

முருகதாசர்

சங்கரலிங்கனரின் முருகவழிபாடு அன்பு முதலிய பெருமைகளை உணர்ந்த உலகினர் முருகதாசர் என்று ஒரு பெயரை வழங்கினர். அப்போது சங்கரலிங்கனருக்கு அகவை பதின்மூன்று. சீதாராம நாயகர் முருகதாசருக்கு அறிவுரைகள் பல கூறினர். ஊன் உண்பவர்களினும் பெரியோர்கள் உண்டென்று முருகதாசரிடம் உரைத்தார். ஊனுண்டல் நாயகருக்கு உடன்பாடாதலின் இவ்வாறு கூறினர்போலும். இதனைக்கேட்ட முருகதாசர், "உயிர்களை உடம்பைவிட்டு நீங்குமாறு கொன்று இழிவு பொருந்திய ஊனை உண்பவர்கள் ஒருநாளும் பெரியோராக மாட்டார்கள். மறைநெறி என்று வேள்வியிற் கொல்லுகின்றவர்களும் இழிந்தவர்களேயாவர். எவ்வுயிரின் துன்பத்தையும் தீர்க்கும் இரக்கமுடையவர்களே நல்லவர்கள். இரக்கமில்லாதவர்கள் அரக்கர்களேயாவர்," என்று விடை கூறினர்.

துறவுக்கோலம் பூணல்

நாட்கள் பல சென்றன. முருகதாசர் வள்ளியூர் மலைக்குச் சென்றார். முருகனை வணங்கிப் பதிகங்கள் பாடினர். கல்லாடையையும் இலங்கோடு கௌபீனத்தையும திருமுன்புவைத்து வழிபாடுகள் செய்து அவற்றைத் தாமே எடுத்து அணிந்து கொண்டார். பிறகு நெல்லையை அடைந்து தவம்புரிந்து கொண்டிருந்தார். திருச்செந்தில்,

திருவுருமாமலை முதலிய பதிகட்குச் சென்று நூல்கள் பல இயற்றினார்.

சிறுதெய்வ வழிபாடு

எளிதில் முருகன் தோன்றி அருள்புரியாமை முருகதாசருக்கு மிகுந்த மனவருத்தத்தை அளித்தது. சிறு தெய்வம் ஒன்றை வழிபடின் விரைவில் அருள்பெறலாமே என்று எண்ணினார். மாடன், சுடலை, அநுமார், வயிரவர் முதலியவைகளைத் தனித்தனியாக வழிபாடு செய்து மறை யுருவேற்றினார். ஒவ்வொன்றும் இவருடைய மனவெளியில் தோன்றி, "உண்மையான கடவுள் வழிபாட்டிற்கு நாங்கள் வேறன்று," என்று கூறி மறைந்து போயின. "சென்று நாம் சிறுதெய்வஞ் சேர்வோமல்லேம்," என்னும் பெரியாருடைய திருமொழி முருகதாசருக்கு நினைவுக்கு வந்தது. தம் தவற்றைக் குறித்து இரங்கினார். தாம் செய்த பிற தெய்வ வழிபாடுகள் எல்லாவற்றையும் முருகனுக்கே உரியதாக்கினார். பின்னர் முருகக்கடவுளையே உறுதியுடன் வழிபட்டார்.

மலையேறி உருளல்

நாட்கள் பல சென்றன. முருகன் முருகதாசருக்குக் காட்சியளிக்கவில்லை. தாம்பிரபரணியாற்றின் நடுவில் உள்ள முருகன் திருக்கோயிலில் தமது பாடல்கள் எழுதிய பெட்டியை வைத்துவிட்டுத் தாம் திருமலையென்னும் திருப்பதிக்குச் சென்றார். முருகனை வணங்கி, "நீ நினது காட்சியை இப்பொழுது எனக்கு வழங்கியருளுதல் வேண்டும். இன்றேல் நான் உயிரோடு இருக்கமாட்டேன்," என்று கூறி முருகன் திருமுன்பு ஒருநாள் இருந்தார். முருகன் காட்சி கொடுக்கவில்லை; முருகதாசருக்கு மன வுறுதி பிறந்தது. மறுநாள் காலையில் முருகனுக்கு நேர்

கீழ்புறம் நின்று சில வணக்கப்பாடல்களைக் கூறினார். பிறகு வடக்கில் தலையைவைத்துப் படுத்துத் தமது உடலை மலை மீதிருந்து உருட்டிவிட்டார். கீழே சென்று தொப்பென்று விழுந்தார். உடலுக்கு எத்தகைய ஊறுபாடும் உண்டாக வில்லை. கற்களில் உடல் உராய்ந்ததனால் சில சிறுகாயங் களே உண்டாயின. அக்காயங்களில் இருந்து வழிந்த குருதியில் திருநீற்றைப் பூசி மறைத்துக்கொண்டு செங் கோட்டை என்னும் ஊருக்குச் சென்றார். இந்நிகழ்ச்சி உண்மையென்பதை அடியில் வரும் அடிகள் திருப்பாடலே மெய்ப்பிக்கின்றது.

"வடதிசையில் தலைவைத்து மறலிதிசை கால்நீட்டி
உடலையந்தத் திருமலையின் உச்சியினின் றுருட்டிவிட்டேன்
விடலையிடும் தேங்காய்போல் வேறுபட்டுச் சிதறாமல்
மடமடெனக் கொண்டங்கோர் மணதரையில் தங்கியதே."

செங்கோட்டையில் இருந்த ஒரு சைவ வேளாள அன்பர் அடிகளின் உடற்காயங்கள் ஆறுதற்குத் தக்க மருத்துவஞ் செய்தனர். புண்கள் முற்றிலும் ஆறின. இடது தோளில் உண்டாகிய ஒருகாயம் மட்டும் ஆறாமல் துன்பம் விளைத்துக் கொண்டிருந்தது. அடிகள் நெல்லையை அடைந்தனர். அடிகளின் தாயார் உடன்பிறந்தார் முதலியோர் நிகழ்ந் ததை உணர்ந்து உள்ளம் வருந்தினர். ஆற்றுக்கோயிலில் வைத்த ஏடுகளைத் தண்ணீர்ப் பெருக்கு தட்டிக்கொண்டு போய்விட்டது. இதனையறிந்த அடிகள் தமது கையிருப்பில் இருந்த பாடல்களையும் கிழித்து ஆற்றுநீரில் எறிந்து விட்டனர்.

**வள்ளியம்மை திருக்காட்சி**

ஒருநாள் அடிகள் அறிதுயிலில் அமர்ந்திருந்தார். அப்பொழுது ஒரு குறப்பெண் தோன்றினாள். அடிகள் அந்தக் குறப்பெண்ணைப் பார்த்து, "நீ யார்?" என்று

உசாவினார். அப்பெண், "என்னை நீ உணராயா? நான் திருவுருமாமலைக் கடவுளின் இளைய மனைவியல்லவோ?" என்று கூறி அண்மையில் வந்து திருநீற்றினை அடிகளின் நெற்றியிலும் வாயிலும் இட்டு இடத்தோளில் இருந்த புண்ணின் மீதும் சிறிதுபோட்டு மறைந்தனள். நான்கு திங்கள்வரை நலிந்துநின்ற காயம் இரண்டொரு நாட்களில் ஆறிவிட்டது. அடிகளார் தமது இல்லத்தில் முருகக்கடவுளுக்கு நாடோறும் சிறந்த பூசனைகள் இயற்றிக்கொண்டு முருகதாசர் என்னும் பெயருக்கேற்ப ஒழுகிவந்தார்.

பகை

அடிகளுக்கு ஆசிரியராக மறைகளைப் போதித்த சீதாராம நாயகரது மகனாகிய முத்துக்கிருட்டிணன் என்பவனுக்கும் மாந்திரீகத்தொழில்கள் தெரியும். அவன் பலரிடமும் பொருள் பெற்றுக்கொண்டு, மாரணம், மோகனம், தம்பனம், பேதனம், வித்துவேடணம் முதலிய தீத்தொழில்களைச் செய்துகொண்டு திரிந்தான். அவன் அடிகளுக்குச் சில ஆண்டுகள் அகவையில் மூத்தவன். அவன் அடிகளை ஒருபொருட்படுத்தாது செயல்களைப் புரிந்துகொண்டு திரிந்தான். முத்துக்கிருட்டிணன் செயல்கள் முருகதாசருக்கு வருத்தத்தை உண்டாக்கின. ஒருநாள் அவன் அடிகளின்முன் அவரை இகழ்ந்துபேசினான். அவ்வுரைகள் இவருக்குப் பிடிக்காமற்போகவே இவரும் இகழ்ந்து இரண்டொரு சொற்களைப் பேசினார். சீதாராம நாயகருக்குச் சீற்றம் உண்டாகிவிட்டது. அவர் அடிகளை அதட்டினார். "உண்மைதானா?" என்றார். முருகதாசர் சீதாராம நாயகரை நோக்கி, "மாணவனாகிய என்னையும் மகனாகக்கொள்ளவேண்டியது உனது கடமை. அவ்வாறு கொள்வதுதான் உண்மையான ஆசிரியத்தன்மையைப் புலப்படுத்தும். நீ அதனை உணர்ந்துகொள்ளாமல் மகனிடத்

துக்கொண்ட வாஞ்சையால் நெறிபிறழ்ந்தாய். ஆயினும் திருவருள் எனக்குத் துணைசெய்யும். நான் எதற்கும் அஞ்சேன்,'' என்று கூறிவிட்டுத் திருவுருமாமலைக் கோயிலை அடைந்து அதனில் தங்கியிருந்தார்.

ஏவல்

அன்றிரவே முத்துக்கிருட்டிணன் ஆனைமாமுகக் கடவுளை அடிகளார்மீது ஏவல்செய்து அனுப்பினன். அடிகளின் கனவில் ஆனைமாமுகக்கடவுள் அஞ்சததக்க வாறு யானையாகவந்து அடிகளை விரட்டினர். அப்போது முத்துக்கிருட்டிணனும் அண்மையில் நின்றுகொண்டிருக் கக்காணப்பட்டான். முருகக்கடவுள் வேறு வடிவங்கொண்டு தோன்றினர். அடிகளைப்பார்த்து, "அஞ்சற்க" என்று கூறித் திருவருள் புரிந்தார். முருகதாசர் உறக்கம்விட் டெழுந்தார். நெல்லையை அடைந்து சீதாராம நாயகரைக் கண்டார். நிகழ்ந்ததைக் கூறினர். "நீ இனி எது செய் யினும் செய்க,'' என்று கூறிவிட்டுத் தமது இருப்பிடத்தை யடைந்தார்.

பிறகு முத்துக்கிருட்டிணன் அடிகளைக் கொல்லுமாறு அம்பிகையை ஏவல்செய்து அனுப்பினன். உமையவள் முருகதாசர் கனவில் சிறு பெண்ணாகத் தோன்றினள். "முத்துக்கிருட்டிணன் ஏவியதற்காக வந்தேன். என்மீது ஒரு செய்யுள் பாடுக. நான் கேட்டுவிட்டுச் செல்லுகிறேன்,'' என்றாள். அடிகளும் அவ்வாறே பாட அவள் அதனைக் கேட்டுவிட்டு மறைந்துவிட்டாள். முத்துக்கிருட்டிணன் பகை அத்துடன் முற்றுப்பெற்றது.

தன்மகன் முத்துக்கிருட்டிணன் முருகதாசரையாதுஞ் செய்ய முடியாமற்போனது சீதாராம நாயகருக்கு மிகுந்த சினத்தை உண்டாக்கியது. அவர் முருகனை ஏவல்செய்து

முருகதாசர்மேல் அனுப்பினார். முருகக்கடவுள் முருகதாசரது கனவில் ஒருவச்சிராயுதத்துடனும் மிகுந்த சினத்துடனும் வந்தார். வயிரவர் ஒரு நாய்வடிவாகச் சென்று முருகனைத் தடுத்தார். முருகக்கடவுள் அதனால் தடைப்பட்டுத் திரும்பியதுடன் நாயின்வாயில் வச்சிரப்படையால் தாக்கிச்சென்றனர். [இங்கு முருகதாசரைத் தாக்குமாறு வந்த தெய்வங்கள் வன்பின்வழியாகக் கட்டுண்டு வந்தவைகளே அல்லாமல் அன்பின் வழியாக வந்தவைகள் அல்ல. தெய்வங்கள் மறைமொழி(மந்திரம்)கட்குக் கட்டுப்பட்டவைகளாதலின், அவைகள் எத்தகையோரிடத்தும் சென்று தமது கடமையைப் புரியவேண்டியது நெறியாகும்.]

திருப்புகழ்ச் சுவாமிகள்

அடிகள் திருப்புகழின் சந்தம் அமைந்த பாடல்களைக் கணக்கில்லாமல் பாடியபடியால் திருப்புகழ்ச் சுவாமிகள் என்று பெயருண்டாகியது.

தண்டபாணி அடிகள்

அடிகள் திருநீற்றை உடல்முழுதும் பூசி வெள்ளையாடையால் இலங்கோடு கௌபீனம் அணிந்து, இடுப்பிற் சிறிய கல்லாடையைச் சுற்றியணிந்து கையில் தடியொன்று பிடித்துக் காட்சியளித்தார். அடிகளின் இந்தக் கோலத்தைக் கண்டவர்கள் தண்டபாணி அடிகள் என்றும் வழங்கினர்.

வண்ணச் சரபம்

வண்ணப் பாட்டுக்களை எண்ண முடியாதபடியும், வேறெவரும் பாடமுடியாத வகையிலும் வெகு விரைவாகவும் வியக்கத்தக்கவாறும் பாடியமையால், 'வண்ணச்சரபம்' என்றும் பெயருண்டாகியது. இப் பெயர்கள் தோன்

றவே சங்கரலிங்கம் என்னும் பிள்ளைப்பெயர் அடியோடு மறைந்துபோய்விட்டது.

சென்னைப் பிள்ளைத்தமிழ்

அடிகள் நெல்லையைவிட்டுப் பல இடங்கட்குஞ் செல்ல நினைந்தார். திருப்பரங்குன்றம், மதுரை, திருத்தில்லை முதலிய பதிகளைக்கண்டு வணங்கிக்கொண்டு,சென்னைத் திருமயிலையை அடைந்தார். ஓர் அறச்சாலையில் அமர்ந்திருந்தார். அங்கிருந்த சிலர் அடிகளின் திருக்கோலத்தையும் இருபத்திரண்டு அகவைத் தோற்றத்தையுங் கண்டு தம்முள் இகழ்ச்சிக்குறிப்பாகப் பேசிக்கொண்டனர். அதனை யுணர்ந்த அடிகள், "நீவிர் எம்மை இகழ்விராயின் பெருங் கேட்டிற்கு உள்ளாவீர்கள்," 'சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்கும்' சினமாகச், சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்கும் திருப்புகழ் நெருப்பென் றறிவோம் யாம்,' என்று இடி இடித்தாற்போல் முழங்கினர். அடிகளின் உரையையும் அஞ்சாமையையுங் கண்ட அவர்கள் வாயடங்கி ஒதுங்கிப்போயினர். அடிகள் சென்னைக்குச் சென்றனர். ஆறுமுகநாவலர் முதலிய அறிஞர்கள் அடிகட்குப் பழக்கமாயினர். அடிகள் கந்தகோட்ட முருகனைக் கண்டு வணங்கி அப் பெருமான்மீது பிள்ளைத்தமிழ் ஒன்றைப் பாடினர். அதனை அரங்கேற்றுதற்குக் காலம் இடம் முதலியன குறித்து அறிக்கை வெளியிடப்பட்டது. அறிஞர்கள் பலர் நிரம்பிய அவையில் பிள்ளைத்தமிழ் அரங்கேற்றம் இனிது நடைபெற்றுவந்தது. புலவர் பெருமக்கள் பலர் திரண்டிருந்தனர். அவருள் காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியார் என்பவர் சில மறுப்புரைகளைக் கூறினர். அடிகள் அவற்றிற்குத் தக்கவாறு பதிலுரைத்தனர். மகாவித்துவான் சபாபதி முதலியாரின் மாணவர் அட்டாவதானம் சபாபதி முதலியார் பிள்ளைத்

தமிழைப் பெரிதும் புகழ்ந்து போற்றினர். அரங்கேற்றத்தை இனிது முற்றுப்பெறச் செய்தனர். அடிகள் அம்முதலியாருடைய அன்புடைமைக்குப் பெரிதும் மகிழ்ந்து,

"சந்தமலி அட்டாவ தானச் சபாபதிக்கெங்
கெந்தச் சபாபதியும் ஈடில்லை—கந்தனருள்
பெற்றேன் உணர்வால் பெரியோரைப் பேணுநலம்
உற்றேன் முழுப்புலமை யோன்."

என்னும் வெண்பா ஒன்றைக்கூறி வாழ்த்தினர். அண்மையில் இருந்த பல பதிகளையும் வழிபட்டு மேலுஞ் சென்னையை அடைந்த அடிகள் சென்னைக் கந்தர் இதழகலந்தாதி, திருப்புகழ், வகுப்பு, வண்ணம் முதலியவைகளைப் பாடினர். அடிகள் வேற்பூசை முதலியவைகளை விரிவாகச் செய்தபடியினால் ஏற்பட்ட கடனுக்குச் சென்னை முருகன் பொருளளிப்பான் என்று நம்பியிருந்தார். ஆனால் முருகன் ஒன்றுங் கொடுக்கவில்லை. அதனால் மனம் உடைந்த அடிகள்,

"சென்னைநகர்க் கந்தாநீ செட்டிகளைச் சேர்ந்தாலும்
உன்னை உதாரியென்றே உன்னினேன்—என்னையிவ்வா
றேமாறச் செயதனையே இன்னுமென்ன செய்வாயென்
பாமாலைச் சொற்கள்கசப் பா."

என்னும் வெண்பாவைப் பாடினர். திருவொற்றியூருக்குச் சென்று பதிகங்கள் பாடினர். வலம்வரும்போது வட்டப்பாறை நாச்சியாரைக் கண்டார். அவ் வம்மன் புலைப்பூசையாகிய கொலைப்பூசையை விழைபவள் என்னுஞ் செய்தியைச் சிலர் அடிகட்குச் செப்பினர். அவ்வளவில் அடிகள்,

"ஒற்றியூர்க் காளி உனக்கேனோ ஊன்விருப்பம்
வெற்றிமழு வானருட்சீர் வேண்டாமோ—சிற்றுயிரைக்
கொல்வார்க்கும் இன்பம் கொடாதான் அவன்கண்டாய்
நல்வார்த்தை சொன்னேன் இந் நாள்."

என்னும் வெண்பாவைப் பாடினர்.

திருவண்ணுமலை அடைதல்

அடிகள் தமது முற்பிறப்புத் தன்மையை அறிந்து கொள்ளுதற்குப் பெரிதும் விழைந்தார். ஒருநாள் முருகன் அடிகளின் கனவில் தோன்றி, "நீ அருணகிரியின் ஒரு கூருக இவ்வுலகில் தோன்றியுள்ளாய். அதைக்குறித்துச் சிறிதும் ஐயப்படாதே," என்று கூறி மறைந்தருளினுன். இச் செய்தியை அடிகள் ;

"வல்லவந் தன்பரைக் காக்குஞ்செவ் வேற்கை வரதனைக்கண்
டெல்லையில் லாக்களிப் பாய்மடி மீதி லிருக்குமென்னைத்
தொல்லையருண கிரிதானெனன் றன்னவன் சொன்னதுண்மை
இல்லையென் றுற்குமுக் கென்றுசெங் கோடை யிடிவிழுமே"

என்னுஞ் செய்யுளால் இயம்பியுள்ளார்.

திருவருணையிற் சென்று சிலநாளிருத்தல்வேண்டும் என்னும் எண்ணம் அடிகட்கு உண்டாகியது. புறப் பட்டுத் திருவருணையை அடைந்தார். பலநாள் அங்கு தங்கியிருந்தார். அண்ணுமலையாருக்கும் உண்ணுமுலையம் மனுக்கும் ஏழிளையனுர்க்கும் புகழ்நூல்கள் பாடினுர். பூசையற்றுக் கிடந்த சிலமூர்த்திகட்குப் பூசைநடத்தற்கு ஏற்பாடுசெய்தார். வைணவர்கள் சிலர் அடிகளோடு சொற்போரிட்டதன்றி அடிகளை இகழ்ந்தும் பேசினர். அடிகளின் தலையில் பொடிப்பு என்னும் சிறு சிரங்கும் உண்டாகித் தொல்லையைக்கொடுத்தது. முருகனின் இந்தத் திருவிளையாடல்கள் அடிகட்குப் பிடிக்கவில்லை.

"கோதுபடாத் தென்னருணைக் கோபுரத்து வேளுறவு
போதும்போ தும்போதும் போதுமே—வாதுசெயும்
பொல்லார் பகையும் பொடிப்புநோ யுங்கொடுத்தான்
நல்லானு ளுற்பார்க்க லாம்"

என்று செய்யுளொன்று பாடிவிட்டுப் பாண்டிநாட்டை யடைந்தனர்.

கழுகுமலை

பாண்டி நாட்டையடைந்த அடிகள் கழுகுமலைக்குச் சென்றார். பெரியார் ஒருவரைக்கொண்டு முருகன் அடிகட்குப் பனங்கற்கண்டு வழங்கினான். அப்பதிமீது நூல்கள்பல பாடினார். இராமகிருட்டிணபிள்ளை என்னும் அன்பர் ஒருவருக்கு அருளுரைவழங்கித் தங்கியிருந்தார். பேய்பிடித்த பெண் ஒருத்தியை அவளுடைய உறவினர் அடிகளிடம் அழைத்து வந்தனர். பேயை விரட்டியருளவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அடிகள் தமது பூசனையின்போது திருநீற்றைக் கையில் எடுத்தார். அப்பேய் அடிகளை எதிர்த்துநின்று, "நான் மற்றைப் பேய்களைப் போல எளிதில் விலகமாட்டேன். உன்னைப்போலவே யானும் முருகன் வழிபாடு உடையேன்," என்றது. உடனே அடிகள் திருநீற்றை மேலேதூவி அப்பேயைப் பிரமபினால் அடித்தனர். அப்போது அது விலகிப்போயிற்று. பிறகு அடுத்தடுத்து வருவதும்போவதுமாக இருந்தது. அடிகள் அறிதுயிலில் முருகன் தோன்றி, "அப்பேயின் பொருட்டு நீ அதிக முயற்சி எடுக்கவேண்டாம். அதனை நீ அதன் போக்கில் விட்டுவிடு," என்று உரைத்தனர். அதனால் அடிகட்குச் சினம் உண்டாயிற்று. கழுகுமலைப்பதிக்காகப் பாடப்பட்ட ஏடுகள் யாவற்றையும் கிழித்து அங்குள்ள அகிலாண்டக் குளத்தில் எறிந்துவிட்டுப் புறப்பட்டுத் திருநெல்வேலிக்குச் சென்று விட்டனர்.

அறுவகை இலக்கணம் இயற்றுதல்

தமிழ் மொழிக்குரிய எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் இலக்கணங்கள் ஐந்துடன் புலமையிலக்கணம் என்பதனையுஞ் சேர்த்து, அறுவகையிலக்கணம் என்னும் பெயருடன் அடிகள் ஓர் இலக்கணநூல்செய்தனர். அந்நூலின் சூத்திரத்தொகை எஅகூ. முன்னோர்

களின் இலக்கணநூல்களால் விளங்காத சில விதிமுறைகளை அடிகள் அந்நூலில் விளக்கிக் கூறியுள்ளனர். அந்நூலை அரங்கேற்றற்கு முடிவுசெய்து அறிவிப்பு வெளியிட்டனர். பழமையில் பற்றுள்ள அறிஞர்கள் சிலர் புத்திலக்கணநூலைக் கண்டித்தற்கு எண்ணி அச்செய்தியை அடிகளுக்குத் தெரியப்படுத்தினர். அதனைக்கேட்ட அடிகள்,

'ஓதுவார் கவிராயர் எனும்பெயரே
மலையிலக்கென் றுன்னி வாழ்வீர்
வாதுபா டத்துணிந்து வரவேண்டாம்
வருவீரேல் வண்ணப் பாட்டுக்
காதுதான் வேண்டுமென்று கடிக்கவரும்
இதுபழமை கண்டீர் எங்கள்
மோதும்வேற் குருபரன்தான் முழுதுணர்ந்த
புலவனெனும் மொழிபொய் யாதே."

என்னுஞ் செய்யுளை எழுதியனுப்பிவிட்டு, அரங்கேற்றுதற்குச் சென்றனர். அழுக்காறுற்ற புலவர்கள் ஐயப்பாடான சில இடங்களில் மட்டும் கேள்விகள் கேட்டுத் தம் ஐயங்களைப் போக்கிக்கொண்டனர். பல வண்ணப்பாடல்களும் சந்தப்பாடல்களும் இயற்றியரங்கேற்றினர். அவைகளைக் கேட்டோர் வியப்பும் திகைப்பும் அடைந்தனர்.

வண்ணத்தியல்பு

சந்தப்பாட்டின் பகுதியாகிய மாறுபாடுகளை உவமானங்களுடன் விளக்கி, தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தய்ய, தன்ன என்னும் எண்வகையும் அவற்றின் விரிவாகிய தத்தா, தாத்தா முதலியனவும், தத்தன, தந்தன முதலிய ஒன்றரைச் சந்தங்களின் விவரமும் விளக்கி நூறு சூத்திரங்கள் இயற்றி வண்ணத்தியல்பு என்று பெயரிட்டுத் திருப்பரங்குன்றங் கோயிலில் முருகன் திருமுன்பு அரங்கேற்றினர்.

வடமொழியும் தென்மொழியும்

நெல்லையில் இருந்து அடிகள் புறப்பட்டு திருவயிந்திர புரம், திருக்கோவலூர் முதலிய பதிகளை வழிபட்டுக் கொண்டு வேலூரையடைந்தார். மறையவர் ஒருவரும் வேளாளர் ஒருவரும் அடிகளிடம் வந்து வடமொழியே பெருமையுடையதென்றும் சிறந்ததென்றும் சொற்போ ரிட்டனர். சொற்போர் முடிவு பெறவில்லை. இதனை முடிவு செய்தற்கு ஓரவை கூடிற்று. மறையவரும் வேளாளரும் 'வடமொழியே உயர்ச்சி' என்று ஒரு சீட்டில் எழுதினர். அடிகள், "தமிழே உயர்ச்சி" என்று ஒரு சீட்டில் எழுதி னர். இருவர்தஞ் சீட்டுக்களையும் அவையிற் குலுக்கிப் போட்டு, ஒரு சிறு பெண்குழந்தையை விட்டு எடுக்கச் செய்தனர். அப்பெண்குழந்தை "தமிழே உயர்ச்சி" என் னுஞ் சீட்டை எடுத்துக் கொடுத்தது. மறையவரும் வேளா ளரும மனமொடிந்தனர். அடிகள் உள்ளம் மகிழ்ந்தார். "தமிழே உயர்ச்சியென்று சீட்டுக்கொடுத்த பெருமாளே." என்று முடியும் சந்தப்பாட்டு ஒன்றைப் பாடினர். மேலும் தமிழலங்காரம் என்னும் ஒரு நூலையும் நூறு செய்யுட்க ளில் இயற்றினர். தமிழ்த்துதிப் பதிகம் என்பதொன்றும் அப்பொழுது பாடப்பட்டது.

திருச்செந்தூரையடைதல்

அடிகள் திருச்செந்திலையடைந்து முருகனைப் போற்றி வழிபாடு செய்துகொண்டிருந்தார். ஒரு நாள் முருகக் கடவுள் அடிகளுடைய அறிதுயிலில் தோன்றி, "நீ நம் மீது பதினாறு நூல்கள் பாடுவாயாக! அவற்றுள் பதி னொன்றும் நூல் பாடும்போது நமது கந்தலோகத்துத் திருநீறும் சிவகண்மணியும் [உருத்திராக்கம்] தருவோம். நெல்லைக்குச் சென்று வைகாசியில் வருக," என்று திரு வாய் மலர்ந்தருளினர். அடிகள் நெல்லையை அடைந்தார்

செந்திலாண்டவன் கட்டளைப்படி நூல்களைப் பாடத் தொடங்கினார். பத்து நூல்கள் முடிந்தன; பதினொன்றாவதாகக் கந்தமாலை என்னும் பெயருடைய நூல் ஒன்றும் பாடிமுடித்தார். முன்னர் முருகப்பெருமான் மொழிந்தபடி நீறுங் கண்மணியுந் தரவில்லை. அடிகள் உள்ளத்தில் ஊடல் உண்டாயிற்று. பாடிமுடித்த நூல்கள் பதினொன்றையுங் கிழித்துத் தாமிரவன்னியில் எறிந்துவிட்டார்.

பிறகு அடிகளின் உள்ளத்தில் ஓர் எண்ணம் உண்டாயிற்று. முருகன் மொழிந்தவாறு பதினாறு நூல்களையும் பாடி முடித்துப் பாராமல் பதினொன்றின் முடிவிலேயே கிழித்தெறிந்தது தவறு என்று எண்ணினார். வைகாசித் திங்களும் நெருங்கிவிட்டது. புறப்பட்டுத் திருச்செந்திலை யடைந்தார். மீண்டும் முருகன்மீது நூல்களைப் பாடத்தொடங்கினார். ஓரன்பர்மீது முருகன் ஆவேசம் வந்தது. "எனக்குப் பன்னிரண்டு நூல்களும் வள்ளிக்கு ஒன்றும் தெய்வயானைக்கு ஒன்றும், வீரவாகு தேவர்க்கு இரண்டும் ஆகப் பதினாறுநூல்கள் இயற்றுக." என்று கட்டளை பிறந்தது. அடிகள் அவ்வாறே விரைந்து பாடி முடித்தார்.*

அவைகளை அழகுபெற எழுதி மைதீட்டிக் கயிறு சேர்த்துப் பூசித்து முடித்தார். அரங்கேற்றுதற்கு நாள் குறிப்பிட்டு எல்லோருக்கும் அறிக்கை அனுப்பினார். அரங்கேற்றுவிழா மிகுந்த சிறப்புடன் நடைபெற்றது. பதினாறு நாளில் முடிவு பெற்றது. அடிகட்குச் சிறப்புக்கள் செய்யப்பட்டன. முருகன் திருவாய் மலர்ந்தருளியபடி கந்தலோகத்து நீறும் சிவகண்மணியும் கிடைத்தில. அதனால் அடிகள் ஏமாற்றமும் வருத்தமும் அடைந்தனர். முருகன்

* விவரம் இறுதியிற் காண்க.

திருவருட் செயலை எவ்வாறறிதல்கூடும்? பின்னர் ஒருவாறு மனந்தேறி இருப்பிடத்தையடைந்தார். பிறகு அடிகள் புதுவையை அடைந்து நூல்கள் இயற்றி அரங்கேற்றஞ்செய்தார். அதனால் அடிகளின் எண்ணத்தில் ஒரு பகுதி நிறைவேறியது.

கேரளஞ் செல்லுதல்

அடிகளின் வேல்வழிபாடு எப்பொழுதும் மிகுந்த சிறப்புடனும் பெரும்பொருட் செலவுடனும் நடைபெறும். அதனால் அடிகட்கு அடிக்கடி கடன் வாங்கவேண்டிய தொல்லையும், அதனை அடைக்கவேண்டிய தொல்லையும் ஏற்பட்டன. ஒருமுறை ஏற்பட்ட கடனைத் தீர்ப்பதற்கு அடிகள் கேரளநாடு சென்று திருவிதாங்கூர் மன்னனிடம் பொருட்கொடை பெறலாம் என்று எண்ணினர். புறப்பட்டுத் திருவனந்தபுரத்தை அடைந்தார். அமைச்சன் ஒருவன் இல்லத்தில் தங்கியிருந்துகொண்டு தாம் வந்துள்ள செய்தியை மன்னனுக்குத் தெரியப்படுத்தினர். மன்னனிடமிருந்து மறுமொழி வரவில்லை. சில மனிதர்கள் அடிகளிடம் வந்து சிறுமொழி ஒன்றைக் கூறினர். அம்மொழியாவது: "அரசரிடம் உரையாடுங்கால் கைகட்டி வாய்புதைத்து நின்று பணிவுடன் பேசுதல்வேண்டும். தாங்கள் அவ்வாறு பேச இணங்குவீர்களா?" என்பதேயாம். இதனைக் கேட்ட அடிகட்கு மிக வெகுளியுண்டாயிற்று.

"எங்கும் புதையா திலங்குதமிழ்ப் பாடலெனும்
பொங்கு மதுரம் பொழியும்வாய்—நங்குகவேள்
இன்னருள் செய்யான் எனினுமெழிற் கேரளத்து
மன்னனிடம் போய்ப்புதைக்கு மா"

என்னுஞ் செய்யுளைப் பாடினர்.

அந்நகரில் எழுந்தருளிய பத்மநாபப்பெருமானுக்கு யமகவந்தாதி, திருப்புகழ்ப்பதிகம் முதலிய நூல்கள் இயற்றி அரங்கேற்றஞ் செய்திருந்தார். ஒருநாள் அரசன் அழகிய கோலத்தோடு படை புடைசூழத் தெருவில் வந்தான். அப்பொழுது அடிகள் அவனைக் கண்டு பின்வருஞ் செய்யுளைப் பாடினார்.

"உன்றனது கேரளநா டொன்றுமே இங்கிலகும்
என்றனது நாடுலகம் எங்குமே—பொன்றரநீ
மாட்டாயோ சேர மகராச னேமதுரப்
பாட்டாசை இன்றோ பகர்"

அரசன், அடிகளுடைய பாட்டைக் கேட்டும் யாதும் பதிலுரையாமல் தலையை அசைத்துக்கொண்டு சென்றான். மீண்டும் அடிகள்,

"ஆயிலியச் சேரன் அநியாயக் காரனவன்
வாயிலிற்போய்ப் பிச்சையின்றி வந்தேனே—நீயிலையோ
வேலா யுதக்குகனே வெள்ளிமலை போற்குலவும்
காலா யுதக்கைமுரு கா"

என்னுஞ் செய்யுளைப் பாடிவிட்டு அந்நகரைவிட்டு நீங்கினார். பிறகு கொச்சி முதலிய இடங்களில் சுற்றிக்கொண்டு செல்லுங்கால், ஒருநாள் உணவின்றிப் பட்டினியாக இருந்தனர். அப்பொழுது திருமாலே ஓர் அந்தணனாகத் தோன்றி அமுதளித்துச் சென்றார். அடிகள் அந்நிகழ்ச்சியைப் பாராட்டி,

"குருவனப்புக் கண்டறியார் கொச்சிவள நாட்டின்
பெருவனத்தில் என்னையன்பிற் பேணி—அருமையுடன்
அன்னங் கொடுக்கவந்த அந்தணனே அந்தவண்ணஞ்
சொன்னங் கொடுக்கவொண்ணு தோ"

என்று ஒரு செய்யுள் பாடினார்.

பிறகு அடிகள் ஊற்றுக்குழி என்னும் ஊருக்குச் சென்றார். அங்கிருந்த ஒரு கணக்கப்பிள்ளை அடிகளைப் போற்றி வேண்டிய உதவிகளைச்செய்தான். அப்பொழுது அங்கிருந்த சிற்றரசன்போன்ற ஒரு பெருஞ்செல்வனை அடிகள் காண எண்ணினார். தமது வருகையை அவனுக்குத் தெரியப்படுத்தினார். அவன் இவரைக் காணவும் போற்றவும் இல்லை. அவன் செயலும் அடிகளுக்கு வருத்தத்தை உண்டாக்கியது.

"ஊற்றுக் குழியில் ஒருகணக்கப் பிள்ளைசெய்த
ஆற்றல் அளவும் அரணமனையார் செய்யவில்லை
ஏற்றமிகு பழனிக்கு ஏகென் றிரவிசொல்லித்
தேற்றியது வேலனருள் செய்யும்விதம் தேர்ந்திலனே"

என்றொரு செய்யுள் பாடிவிட்டுப் பழநியை அடைந்தார். பழநிமலையில் உள்ள இடும்பனுக்குப் பலி வழிபாடு செய்வது அந்நாளில் வழக்கமாக இருந்தது. கொலைப்பூசையை அடியோடு வெறுக்கும் அடிகள்,

"பாடும்அன்பர் போற்றும் பழநிமலைப் பாதியினின்(று)
ஆடும் இடும்பா அறையக்கேள்—நீடும்
கொலைகண்டு மாமிசமுட் கொண்டுவக்க வேண்டாம்
நிலைகண்டு மெய்யருளில் நில்"

என்றொரு செய்யுள் இயற்றினார். அங்கு மலையடியில் உள்ள கருப்பன் என்னும் சிறுதெய்வம் பலியேற்பதில்லை என்பதை அறிந்த அடிகள்,

"தெய்வப் பழநித் திருமலையின் முன்னிற்கும்
சைவக் கருப்பண்ண சாமியே—பொய்ம்மைக்
கறுப்பண்ணச சாமியெல்லாம காட்டாட்டேன் வேண்டா
வெறுப்பண்ணச் செய்வாய் விரைந்து"

என்று பாடினார். அங்கு அடிகள் சிலநாள் தங்கிப் பழநிப் பெருமானைப்போற்றி வழிபட்டுக்கொண்டிருந்தார். அந்

நாளில் அங்கு சிறந்த புகழ்பெற்ற புலவர் திலகராய் நிலவியிருந்த மாம்பழக் கவிச்சிங்க நாவலர் என்பவரையுங் கண்டு அடிகள் உரையாடினர்.

பல ஊர்களுக்குச் செல்லுதல்

பின்னர் அடிகள் மதுரை, இராமநாதபுரம் முதலிய இடங்கட்குப் போய்விட்டுத் தேவகோட்டையை அடைந்தார். அங்கு சிலநாள் தங்கி இரண்டொரு நூல்கள் செய்து அரங்கேற்றினர். பிறகு காரை, குன்றை முதலிய இடங்களைப் பார்த்துக்கொண்டு வேம்பத்தூர் என்னும் ஊரையடைந்தார். அப்பொழுது அவ்வூரில் பிச்சுவையர் என்னும் பெயருடைய புலவர் ஒருவர் இருந்தார். அவர் தமிழில் மிகவும் வல்லவர்; அந்தணர். அவர் எழுத்தெழுத்தாகப் பிய்த்துப் பாடுவதிலும் கெட்டிக்காரர். அதனல் அவருடைய பெயர் காரணப்பெயர்போலவும் விளங்கி நின்றது. அந்த அந்தணப்புலவர் அடிகளாரை முன்னரே பார்த்திருந்தார். அவர் அடிகளைக் கண்டபோது உணவு வேளை. ஆகவே, அவர் அடிகளைப் பார்த்து,

"பூமிதனி லெங்கும் புகழ்முருக தாசரெனும்
சாமிக்கு நைவே தனமெங்கே—

என்று பாட்டால் உசாவினர். அடிகள் உடனே,

—தேமிக்க
செந்தமிழின் சீரும் திருக்கைவேல் ஏந்திவரும்
கந்தனன்பும் உள்ளமனைக் கண"

என்று பாட்டாகவே பதிலுரைத்தார். பிறகு அடிகட்கு உணவிட்டார். அடிகள் சிலநாள் அங்கிருந்து பிறகு புறப்பட்டுக் கோட்டூரென்னும் ஊரையடைந்தார். அங்கிருந்த சைவஅன்பர் ஒருவர் அடிகளைப் போற்றி உணவிட்டு வழிபாடு செய்தார். அடிகள் அந்த அன்பருடைய அன்புடைமையை எண்ணி,

"கோட்டேறிற் சைவன் முகங் கோணமல் கூடத்தில்
ஈட்டுதென்னை ஓலை இலைகொணர்ந்து—போட்டெனக்குச்
சோறும் இலைக்கறியும் சுண்டைக்கா யும்பருப்புச்
சாறுமிட்டுப் பெற்றான் தவம்"

என்று புகழ்ந்து பாடினார்.

தலைக்குவந்தது தலைப்பாகையோடு போயிற்று

அடிகள் பலபதிகளினுஞ் சுற்றிக்கொண்டிருக்கையில் ஒருநாள், கொங்குநாட்டில் சேலத்தில் சில நூல்கள் இயற்றிச் சிவன் கோயிலில் அரங்கேற்றஞ் செய்தார். அரங்கேற்றம் முடிந்து வெளியே புறப்பட்டுப் போய்க் கொண்டிருக்கும்போது மண்டபத்தின்மேல் இருந்த ஒரு மனிதன் கீழே பாராமல் ஒரு பெரிய கல்லை எடுத்து வீசினான். அக்கல் அடிகளின் தலையை மூடியிருந்த துணியைத் தள்ளிக்கொண்டு அப்பால் விழுந்தது. இந்நிகழ்ச்சியால் அடிகட்கு எத்தகைய ஊறுபாடும் நிகழவில்லை. இதனை அடிகள்,

"சேலநகர்ச சிவன்கோயில் மணடபத்துற் றொருவன்
தெரியாமையால்எறிந்த திரள்கருங்கல் தலைமேல்
காலமிருந் தாகிவிழா தணுவளவில் விலக்கிக்
காததெய்வந் தனைநோக்கிக் களித்துநெல்லை ஊரான்"

என்று தெய்வத்துணைப் பதிகத்தில் பாடியுள்ளார். அடிகள் மேலும் சென்னை, புதுவை முதலிய ஊர்களிற் சுற்றிக் கொண்டு திருத்தில்லையை அடைந்தார்.

தில்லைத் திருவாயிரம்

திருத்தில்லையை அடைந்தவர் சிவகங்கையில் மூழ்கிக் கூத்தப்பிரானை ஏத்துதற்குச் சென்றார். அப்போது அம்பலவாண அடிகள் என்னும் பெரியார் அடிகளைப்பார்த்து "அடிகாள்! தாங்கள் உங்களுடைய முருகனுக்கே எப்

போதும் பாமாலை பாடுகிறீர்களே தவிர, எங்கள் அப்பனாகிய கூத்தப்பிரானைப் பாடுவதே இல்லையே. எங்கள் அப்பன் மீது சிறிதுபாடினால் என்ன?" என்று உசாவினார். அச்சமயத்தில் அடிகளோடு சென்ற ஒருவன் அடிகளைப் பார்த்து, "இந்தக் கோயிலில் தேன் குழல்கள் பெரிது பெரிதாக இருக்கின்றன," என்றனன். உடனே அடிகள், அம்பலவாண அடிகளைப்பார்த்து, "உங்கள் அப்பன் இவன் விரும்புந் தேன் குழல்களைத் தாமே தருவாராயின் அவர் மீதும் பாடுவோம்," என்றார். இச்செய்தி இவர்களைத் தவிர வேறு யாருக்குந் தெரியாது. அம்பலவாண அடிகள் அம்பலவாணனார் அருட்பெருக்கினால் அடிகளுக்குத் தேன் குழல் கிட்டவேண்டும் என்று உள்ளத்தில் வேண்டிக் கொண்டிருந்தனர். எல்லோரும் கூத்தப்பிரான் திருமுன் சென்று வணங்கினர். மாலைப்பூசை முடிந்தது; எல்லோருக்கும் அருட்டிருநீறு வழங்கினர். தில்லைவாழ் அந்தணர் ஒருவர் அடிகளைக் கூப்பிட்டு, "இங்கேயே நில்லுங்கள். உங்களுக்குப் பூசனைப்பலகாரங் கொண்டுவருகிறேன்," என்று இயம்பிவிட்டுச் சென்றனர். தண்டபாணியடிகளோ திருவருட்டிறத்தை எண்ணிக்கொண்டு நின்றனர். அம்பலவாண அடிகள் எவ்வகைப் பலகாரம் வரப்போகிறதோ, தேன்குழல் அல்லவோ வரவேண்டும் என்று எண்ணமிட்டுக்கொண்டு நின்றார். தில்லைவாழந்தணர் திரும்பி வந்தார். ஒரு தட்டிலே இரண்டு பெரிய தேன் குழல்களும், இரண்டு வடைகளும் இரண்டு சுகியன்களும் ... வைகளைத் தட்டோடு அடிகளிடம் நீட்டினார். யாவரும் வியப்புந் திகைப்பும் அடைந்தனர். பாட்டுச் செய்தி பிறகுதான் தில்லைவாழந்தணருக்கும் பிறருக்குந் தெரிந்தது. பிறகு அடிகள் கூத்தப்பிரான்மீது பாடத் தொடங்கி ஆயிரம் பாடல்கள் பாடினார். பிறகு தில்லையைவிட்டுத் திருப்பரங் குன்றையடைந்தார்.

காண்பரங்கிரி

திருப்பரங்குன்றில் முருகனை வழிபட்டுக்கொண்டு தங்கியிருந்தார். அடிகளின் அறிதுயிலில் ஒரு நாள் முருகன் தோன்றினன். அவனுடைய திருக்கோலம் புதுக்காவி யுடையும் திருநீற்றுப் பூச்சும், சிவகண்மணி மாலையும் விளங்க அமைந்திருந்தது. அடிகள் அக்கோலத்தோடு வந்துள்ளவன் அறுமுகன் என்று உணர்ந்து கொள்ளாமல் வெறுங்கோலம் பூண்டவன்போலும் என்று எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தனர். முருகன் தண்டபாணி அடிகளை நெருங்கி, "காண்பரங்கிரி என்ற எடுப்பில் ஒரு வெண்பா இயற்றுக உன்னுடைய தமிழாற்றலை அறி கிறேன்," என்று கூறி எதிரில் அமர்ந்தனர்.

காண்பரங்கிரி என்பதை ஒரு சீராகக்கொண்டால் வெண்பாவுக்குப் பொருத்தமாகாது. இதனைப் பிரித்துப் பாடவும் இயலாது. அடிகள் முருகனை உள்ளத்தில் எண்ணினார். பிறகு,

"காஅண் பரங்கிரிக் கந்தாவென் காதலெல்லாம்
வீஇண் பாடலாமோ வேலுடனே—தூணன்ன
தோளுந் துலங்கமயில் தோகைநிழ லூடெதிர்வந்(து)
ஆளுதற்கே தேசமய மாம்."

என்று அளபெடையைச் சேர்த்துப் பாட்டை இயற்றி முடித்தார். முருகன் திருக்கோலம் மறைந்தது. பிறகு அடிகள் நெல்லையையடைந்தனர்.

உயிர்ப்பலி தடுத்தல்

அடிகள் ஒருமுறை பழநியை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். வழியில் துமிசம்பட்டி என்னும் ஊரில் ஒருவன் சந்நியாசியப்பன் என்னும் தேவதைக்குப் பூசையிட்டுப் பலி கொடுப்பதற்கு ஆட்டை வெட்ட முயன்

றான். அடிகள் விரைந்து சென்று, "எதன் பொருட்டு நீ இந்த ஆட்டைப் பலியிட முயல்கிறாய்?" என்று உசாவினர். அதற்கு அவன், "என் மகனுக்கு வயிற்றுவலி. அது தீர்ந்தால் பலி கொடுப்பதாக இந்த அப்பனை வேண்டிக் கொண்டேன். வலி தீர்ந்துவிட்டது; இப்போது வேண்டுதலை நிறைவேற்றப் போகிறேன்," என்றான்.

அடிகள் அந்த மனிதனைப் பார்த்து "இந்த ஆட்டைப் பலியிடாதே. நானும் சந்நியாசியப்பன்தான். உன் மகனுடைய வயிற்றுவலி நீங்குமாறு செய்கிறேன்," என்று கூறி,

" அயிற்றலைவா தென்பழநி அப்பாஇச் சேய்தன்
வயிற்றுவலி முற்றுமற மாற்றி—வெயிற்புழுப்போன்(று)
ஏழைகள்வா டப்படுத்தும் இப்பேய் உயிர் குடித்திட்(டு)
ஊழைவென்றோர் உண்டென் றுணர்த்து "

என்று செய்யுள் ஒன்று பாடித் திருநீறளித்தார். அவ்வளவில் சிறுவனுடைய வயிற்றுவலி நீங்கியது. அங்கிருந்தோர் வியப்படைந்தனர். பிறகு அந்தச் சிறுவனுக்கு வயிற்றுவலி உண்டாகவில்லை. பிறகு அடிகள் பழநியை அடைந்து அன்பர்களால் அமைக்கப்பட்ட திருமடத்தில் பழநியாண்டவனைப் போற்றிக்கொண்டு தங்கியிருந்தனர்.

கறுப்பண்ணன்

அடிகள் தங்கியிருந்த திருமடத்திற்கு எதிரே யாதவ குலத்தினராகிய துறவிக்கோலத்தினர் ஒருவர் இருந்தார். துறவிக்கோலம் பூண்டும் தீச்செயல்களை விட்டிலர். மாந்திரீக வேலைகளிற் சிறிது பழக்கமுடையவர். மாந்திரீகத் தொழிலைக்கொண்டே பொருளீட்டுந் தொழிலில் ஈடுபட்டிருந்தார். பொருள் கொடுப்பவர்களுக்குச் சிறு நன்மைகள் ஏதேனும் செய்வது, கொடாதவர்களை அச்சுறுத்தித்

தீமைகள்புரிவது என்பது அவருடைய கொள்கை. கறுப் பண்ணன் என்னுஞ் சிறு தேவதையைப் பனைமரம் ஒன்றின் கீழ் அமைத்து, அதற்கு ஆடு கோழி முதலிய உயிர்களைப் பலியிட்டு வழிபாடாற்றியிருந்தார். அந்த மாந்திரீகத் துறவியின் தீச்செயல்களெல்லாம் தண்டபாணி யடிகட்குத் தெரியலாயின. ஒருநாள் அடிகள் ஓர் அன்பரை அனுப்பி அந்த மாந்திரீகத்துறவியைக் கூப்பிடச்சொன்னார். அந்தத் துறவி வரவில்லை. அழைத்தவரிடம், "எதற்காகக் கூப்பிடு வது?" என்று உசாவினார். அவரைக் கூப்பிடச்சென்றவர் "நீர் துறவிக்கோலம் பூண்டும் தீவினைக்கிடமான கொலை புலை முதலியவைகளைச் செய்யலாமோ? சிறு தேவதையைப் போற்றுவது ஒழுங்குதானா? உமக்கு அறிவு இருக்கிறதா? இல்லையா! இச்செய்தியை உமக்கு இடித்துரைத்து அறிவு புகட்டுவதற்காகத்தான் அடிகள் உம்மை அழைக்கச் சொன்னார்கள். நீவிரோ வராமல் தில்லுமல்லுச் செய்கிறீர்," என்று சினத்துடன் கூறிவிட்டுத் திரும்பினார். இச்செயல் மாந்திரீகத் துறவிக்குச் சீற்றத்தை உண்டாக்கியது. அவர் மறைமொழிகளை உருவேற்றிக் கறுப்பண்ணனை அழைத்து, "எதிர்ப்பக்கத்து மடத்தில் உள்ள துறவியைக் கொன்று வா," என்று சொல்லி ஏவினார். ஒரு மண்டலம் உருவேற்றினால் அச் சிறுதேவதை தண்டபாணியடிகளின் பின்புறம் வந்து அடிகளின் இடுப்பைக் கெட்டியாக ஒரு முறை கட்டிப்பிடிக்கும். இவ்வாறு சில தடவைகள் நிகழ்ந்தன. அது வரும்பொழுதெல்லாம் அடிகள் அதனை அதட்டியே விரட்டிக்கொண்டிருந்தனர். ஆறுவது தடவை வந்தபோது முருகப்பெருமான் மயிலின்மேல் வந்து வேற் படையினால் கறுப்பண்ணனைக் குத்தித் தூக்கியெறிய அது பிணமாகக் கீழே விழுவதைப்போல் தோற்றம் உண்டா யிற்று. அதன்பிறகு அப்பேயினால் எவ்வகையான தொல்லை

யும் உண்டாகவில்லை. அந்தக் கறுப்பண்ணன் இருந்த பனை மரம் முறியவும் மாந்திரீகத் துறவியின் பெருமை மலை குலையவும் அடிகள் சில தனிப்பாடல்களும் பதிகங்களும் பாடினர். அவ்வாறே பிறகு நிகழ்ந்தன.

இராமாநந்த அடிகள்

தண்டபாணி அடிகளின் பெருமை நாடெங்கும் பரவி வந்தது. கோயமுத்தூருக்கு அண்மையில் உள்ள சிரவண புரம் என்னும் ஊரில் இராமாநந்தர் என்னும் அன்பர் ஒருவர் முருகன்மேல் முதிர்ந்த அன்புடையவராய் விளங்கி ஞர். அவர் தமக்கு அருளுரை வழங்குவதற்கு அறுமுகக் கடவுளை எழுந்தருளவேண்டுமென்று அப்பிரானைப் போற்றி வழிபட்டுக்கொண்டிருந்தார். அவர் தெய்வத் திருவருளால் பழநியம்பதிக்கு வந்தார். தண்டபாணி யடிகளைக்கண்டு போற்றினார். அவரையே ஆசிரியராகக் கொள்ளுமாறு பழநியாண்டவனுடைய திருக்குறிப்புப் புலப்படுத்தியது. அக்குறிப்பின்படியே தண்டபாணியடி களைக் குருவாகக்கொண்டு ஆறெழுத்தருமறையைக் கூறி யருளப்பெற்றார். அதுமுதல் அந்த இராமாநந்தருடைய பெருமையுஞ் சிறப்பும் மிக வளர்ந்தோங்கியது.

பல ஊர்களுக்குச் செல்லுதல்

இராமாநந்தருக்கு அருளுரை வழங்கி முடிந்தபின் அடிகள் பல தெய்வப்பதிகளுக்குஞ் செல்ல விழைந்தார். புறப்பட்டுத் திருவரங்கத்தை அடைந்தார். முன்னரே பாடப்பட்டிருந்த திருவரங்கத்திருவாயிரத்தை அரங் கேற்ற எண்ணினார். சீரங்கநாதன் தன்னுடைய அன்பர் களின் கனவில்தோன்றி அந்நூலை அரங்கேற்றற்கு ஆவன புரியுமாறு கட்டளையிட்டான். அரங்கேற்று விழாவுஞ் சிறப்புடன் நடைபெற்றுக்கொண்டு வந்தது. அரங்கேற்று

தனில் பெரும்பங்கு எடுத்துக்கொண்டிருந்த அன்பர் ஒருவரின் பெண்ணைப் பாம்பு கடித்துவிட்டதாக அரங்கேற்றுமிடத்திற்குச் செய்திவந்தது. இதனை உணர்ந்த அடிகள், விரைந்து கருடன் திருமுன்புபோய்,

"அரங்கன் திருமுன் பமருங் கருடா
இரங்கிரங்கிப் பார்ப்பனப்பெண எங்கச்—சிரங்கொண்ட
பொல்லா விடத்தைப் பொடியாக்கிப் பூவுலகோர்
நல்லானென் றேதவருள் நல்கு"

என்னும் வெண்பா ஒன்றைப் பாடித் திருநீறு தந்தார். பாம்பு நஞ்சு இறங்கிப் பாவை பிழைத்தபின்னரே மேற்கொண்டு அரங்கேற்றத்தைத் தொடங்குவதென்று முடிவுசெய்து தமது இருப்பிடத்தை நோக்கிச்சென்றார். அப்போது கருடபகவான் ஓர் அந்தணக் கோலத்துடன் அடிகட்குக் காட்சி தந்தான். அடிகள் அந்த அந்தணனைப்பார்த்து, "நும் பெயர் யாது?" என்று வினவியதற்கு அந்த அந்தணன், "கெருடாச்சாரி," என்று விடையளித்துச் சின்னேரம் அடிகளோடு உரையாடித் திடீரென்று மறைந்தான். அதன்பிறகே அவன் கருடன் என்னுஞ் செய்தி எல்லோருக்கும் புலனாகியது. அடிகள் இந் நிகழ்ச்சியை;

"ஓதுங் கருடன் ஒருமனிதன் போலுருக்கொண்(டு)
ஏதும் அறியான் எனத்தோன்றிப்—பேதமற
நம்மோ டுறவாடி நான்கருடா சாரியென்ற
தம்மா நலவதிச யம்."

என்னுஞ் செய்யுளாற் குறிப்பிட்டுள்ளார். பாம்புநஞ்சு இறங்கியது. பெண் பிழைத்துக்கொண்டாள்; மறுநாள் முதல் அரங்கேற்றம் மீண்டும் நடைபெற்று முடிந்தது.

அடிகள் பின்னர், திருவானைக்கா, திருச்சி, தஞ்சை, திருவையாறு, திருவாரூர், திருப்புகலூர், மாயூரம், புள்

ளிருக்குவேளூர், சீகாழி முதலிய சிவப்பதிகளைப் பணிந்து வணங்கிக்கொண்டு திருத்தில்லையை அடைந்தார். பொன்னம்பல அடிகள் மடத்திற்குச்சென்று அவ் வடிகளைக் கண்டு அளவளாவியிருந்தார். முன்பு பாடப்பட்டிருந்த தில்லைத் திருவாயிர நூல் ஆயிரக்கால் மண்டபத்தில் அரங்கேற்றஞ் செய்யப்பட்டது. பிறகு அடிகள் சென்னையை அடைந்து பல அன்பர்களுடைய பொருளுதவியினால், தில்லைத் திருவாயிர நூலை அச்சிற் பதிப்பித்து வெளியிட்டருளினார்.

திருவாமாத்தூரில் விடுபேறு

பிறகு அடிகள் வளவனூர் மதுரைப்பாக்கம் முதலிய ஊர்கட்குச் சென்றார். பிள்ளைப் பேறில்லாது வருந்திய ஓர் அன்பர் திருக்கோயில் கட்டினால் பிள்ளைப்பேறுண்டாகும் என்று,

"சாம்பசிவ ரெட்டிஅன்பில் தந்ததுரை சாமிரெட்டி
ஆம்பன்மலர் வாவிஒன்றும் ஆலயம்ஒன் றுஞ்செய்தால்
காம்பவிர்தோள் கன்னிஒன்றும் காளைஒன்றும் பெற்றிடுவன்
நாம்பகர்ந்த தல்லவிது நாமடந்தை சொன்னதே."

என்று, கொச்சகக் கலிப்பா ஒன்று பாடி அவ்வாறே நிகழச்செய்தருளினார். பிறகு திருவாமாத்தூரை அடைந்தார். அப்பதி அடிகளின் உள்ளத்திற்குப் பிடித்தமாக இருந்தது. அவ்விடத்தில் திருமடம் ஒன்று அமைத்துக் கொண்டு ஆறெழுத்து மறையைக் கோடிக்கணக்கில் உருவேற்றிக்கொண்டிருந்தார். கண்பார்வையை இழந்துவந்த ஒரு தொண்டருக்கு,

"மல்லைய னுக்கு மலர்விழியின் பார்வைநல்கித்
தொல்லைவினைத் துன்பம் துடைத்தருள்வாய்—அல்லைநிகர்
கண்டத்தான் மைந்தா கதிர்வேற்கைக் காவலவா
அண்டத்தார் சேனையதி பா."

என்னும் வெண்பாவைப் பாடித் திருநீறு வழங்கினர். அதனல் அந்தத் தொண்டருடைய கண் மீண்டும் நல்ல பார்வையை அடைந்து விளங்கியது.

மக்கட்பேறற்றிருந்த வேலுக்கவண்டன் என்னும் அன்பருக்குப் பிள்ளைப் பேறுண்டாகுமாறு,

"வேலுக் கவண்டன் விருப்பப் படியொருநல்
பாலன் பிறக்கும் படியருள்வாய்—சீலமறை
ஆகமங்கள் போற்றும் அயில்வேற் குருபரனே
ஏகபிரான் பெற்றமைந்த னே."

என்னும் வெண்பா.பாடித் திருநீறு வழங்கினர். அதனல் அந்த அன்பருக்கு நன்மக்கட்பேறு உண்டாகியது. மேலும் அடிகள் அறிஞர்களின் வரலாறுகள் அமைந்த புலவர் புராணம் முதலிய நூல்களையும் இயற்றிக்கொண்டிருந்தார். ஆறெழுத்து மறையை உருவேற்றலின் கடுமையினல் அடிகளைச் சூட்டுநோய்பற்றித் தொல்லை யளித்தது. அத் தொல்லைக்கு அடிகள் அஞ்சித் தமது கொள்கைகளைச் சிறிதும் மாற்றிக்கொள்ளவில்லை. ஆங்கிலம் 1898-க்குச் சரியான கலி ரு000-த்தில் விளம்பி யாண்டு ஆனித்திங்கள் உரு-ஆம் நாள் திருவோணத்தில், தமது நாற்பத்தொன்பதாவது அகவையிலே முருகக்கடவுளுடைய திருவடிநீழலை அடைந்தார்.

திருக்கோயில் முதலியன

அடிகளின் தொண்டர்கள், அடிகளின் திருவுடலைச் சமாதி வைத்துத், திருக்கோயில் திருமடம் முதலியன அமைத்து வழிபாடாற்றி வருகின்றனர்.

அடிகள் காலத்திய அறிஞர்கள்

அடிகள் இராமலிங்க அடிகளைப் பன்முறை கண்டு அளவளாவியுள்ளார். ஆறுமுக நாவலர், மகாவித்துவான்

மாம்பழக் கவிச்சிங்க நாவலர், மகா வித்துவான் காஞ்சி புரம் சபாபதி முதலியார், அவருடைய மாணவர் அட்டாவ தானம் சபாபதி முதலியார், பூவை. கலியாணசுந்தர முதலி யார் முதலிய அறிஞர்கள் பலர் அடிகள் காலத்திய அறி ஞர்களாவர். தண்டபாணி அடிகள் நூல் அரங்கேற்றம் ஒன்றைச் செய்துவிட்டு அடியார் குழாத்துடன் தெருவில் வந்துகொண்டிருந்தபோது பூண்டி அரங்கநாத முதலியார் என்னும் பேரறிஞர் அடிகளைத் தெருவிற் கண்டு அப் பொழுதே கீழ்வீழ்ந்து வணங்கித் திருநீறுபெற்றுச் சென் றனர். ஒருசில புலவர்கள் தாம் அடிகளின் புலமைத் திறங் கண்டு அழுக்காறுற்றனரேயன்றி மற்றைப் புலவர் கள் தண்டபாணி யடிகளின் புலமைத்திறத்தைப் பெரிதும் வியந்து போற்றியிருந்தனர்.

தண்டபாணி அடிகளால் இயற்றப்பெற்ற நூல்கள்: [கிழித்தெறிந்தனபோக இப்போது எஞ்சியிருப்பவை]

1. சென்னைப் பிள்ளைத்தமிழ்
2. ஷை கந்தர் இதழகலந்தாதி
3. சென்னைத் திருப்புகழ்
4. திருவொற்றியூர்ப்பதிகம்
5. அறுவகை இலக்கணம்
6. வண்ணத்தியல்பு
7. தமிழ் அலங்காரம்
8. தமிழ்த்துதிப் பதிகம்
9. திருச்செந்தில் வெண்பாவந்தாதி
10. ,, சிலேடை வெண்பா
11. ,, திரிவந்தாதி
12. ,, யமகவந்தாதி
13. ,, பதிற்றுப்பத்தந்தாதி

14. திருச்செந்தில் செந்தில்நாயக சதகம்
15. " உலா
16. " நவரசமஞ்சரி
17. " அகப்பொருட்கோவை
18. " தசாங்க வகுப்பு
19. " சந்தமாலிகைத் திருப்புகழ்
20. கௌமார விஜயம்
21. குஞ்சரிமாலை
22. வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ்
23. வாள் அலங்காரம்
24. வண்ணப் பதிகம்
25. புதுவை முருகன் அலங்கார பஞ்சகம்
26. " பிள்ளைத்தமிழ்
27. " கலம்பகம்
28. " பாதாதி கேசம்
29. " பதிற்றுப்பத்தந்தாதி
30. பத்மநாபப்பெருமாள் யமகவந்தாதி
31. திருப்புகழ்ப் பதிகம்
32. தேவகோட்டைத் திருப்புகழ்
33. " திரிவந்தாதி
34. " பதிகம்
35. அருணகிரிநாதர் புராணம்
36. கௌமாரமுறைமை
37. நானிலைச் சதகம்
38. ஞானவந்தாதி
39. சதகவுந்தி
40. தியானுபூதி
41. நெல்லைக்கலம்பகம்
42. சத்திவிசயம்

43. திருவருள் நாட்டம்
44. சென்னைக் கலம்பகம்
45. சென்னைவெண்பாவந்தாதி
46. ,, ஒருபா ஒருபஃது
47. திருவல்லிக்கேணி எழுகூற்றிருக்கை
48. அணிற்காத்த பதிகம்
49. சூரியமாலை
50. திருச்சிற்றம்பல வெண்பாமாலை
51. திருநடனமாலை
52. ஆநந்ததாண்டவமாலை
53. அலங்கார பஞ்சகம்
54. தில்லைத் திருப்புகழ்
55. தில்லை வகுப்புகள்
56. மண்டலத் திருப்புகழ்
57. ஏழாயிரப் பிரபந்தம்
58 திருவரங்கத் திருவாயிரம்
59. திருவாமாத்தூர்ப் புராணம்
60. மயிலாசலக்கலம்பகம்
61. வேலலங்காரம்
62. மயிலலங்காரம்
63. ஆறெழுத்தலங்காரம்
64. புலவர் புராணம்
65. பழநி - வெண்பாமாலை
66. ,, வெண்பாவந்தாதி
67. ,, அலங்காரம்
68. ,, யமகவந்தாதி
69. ,, திரிவுமஞ்சரி
70. ,, குருபரமாலை
71. ,, பதிற்றுப்பத்தந்தாதி

72. பழநி - பிள்ளைக்கவி
73. ,, கலம்பகம்
74. ,, ஒருபா ஒருபஃது
75. ,, நவமணிமாலை
76. ,, நவரசம்
77. ,, சித்திமாலை
78. ,, நடுவொலியலந்தாதி
79. ,, கலவிமகிழ்தல் வண்ணம்
80. ,, வகுப்புகள்
81. ,, முருகாநந்தலகரி
82. ,, தெய்வத்துணைப் பதிகம்

மற்றும்பல.



# தமிழ்ப் புலவர் வரிசை

| | ரூ. | அ. |
|---|---|---|
| முதற் புத்தகம் | 1 | 0 |
| இரண்டாம் புத்தகம் | 1 | 4 |
| மூன்றும் புத்தகம் | 1 | 8 |
| நான்காம் புத்தகம் | 1 | 8 |
| ஐந்தாம் புத்தகம் | 1 | 8 |

கழக வெளியீடு: ௭௮௧

# தமிழ்ப் புலவர் வரிசை

## ஆறும் புத்தகம்



ஆசிரியர் :

திரு. சு. அ. இராமசாமிப்புலவர்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை 1.

# பதிப்புரை

முன்னேற்றத்தை விரும்பும் நாடுகள் எல்லாம், தத்தம் நாட்டுப் புலவர்கள் செய்தருளிய தாய்மொழி நூல்களை விரும்பிப் படித்தலும் படிப்பித்தலும் செய்கின்றன.

அத்துடன், அப் புலவர்கள் வரலாற்றைச் செம்மையுடன் உணர்ந்து அவர்தம் அறிவு, ஆண்மை, அன்பு, ஒழுக்கம், தந்நலமின்மை, தாய்மொழிப் பற்று, எல்லாருக்கும் உதவுதல், விடா உழைப்பு, அஞ்சாமை, வாய்மை, கடமை முதலிய நற்பண்புகளை மேற்கொண்டு நடத்தி நற்பயன் பெறுகின்றன.

அம் முறையில் நம் நாட்டுப் புலவர்பெருமக்கள் வரலாறுகளையும், அவர்கள் செய்தருளிய நூல்களையும் மாணுக்கர் இளமையிலேயே கற்று அதன்படி ஒழுகுவது, நாட்டுக்கும், மொழிக்கும் செய்யும் நல்தொண்டாகும் எனக்கருதி தமிழ்ப் புலவர் வரிசையில் இதுகாறும் ஐந்து நூல்கள் வெளியிட்டுள்ளோம். உங்கள் கையில் மலரும் இந்நூல், இவ்வரிசையில் ஆறும் புத்தகமாகும்.

இதன்கண் திருமூலர் முதல் போப்பையர் ஈருக நக புலவர் பெருமக்கள் வரலாறுகளும், ஆங்காங்கு அவ்வப் புலவர் பெருமக்கள் யாத்த பாடல்களும், உள்ளுறை நயங்களுடன் செவ்விய இனிய எளிய நடையில் எழுதப்பெற்றிருக்கின்றன.

இதனையும் முதல் ஐந்து புத்தகங்கள் போலவே, ஆசிரியர்களும், மாணுக்கர்களும், பொதுமக்களும் வாங்கிக் கற்றும் கற்பித்தும் புலவர் பெருமக்களுக்குச் செய்யும் கடப்பாட்டினைச் செய்து எங்களையும் ஊக்குவார்களாக.

இதனை எங்கள் வேண்டுகோளின்படி ஆக்கித்தந்த திரு. கா. அ. இராமசாமிப்புலவர் அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# தமிழ்ப் புலவர் வரிசை

## [ஆரும் புத்தகம்]



### ௧. திருமூலர்

**வருகை**

திருக்கயிலையில் சிவயோகி ஒருவர் இருந்தார். அவர் திருநந்திதேவருடைய திருவருளைப் பெற்றவர். அவர் பொதியமலையை அடைந்து அகத்தியரைக் கண்டு வணங்க எண்ணினார். திருக்கயிலையை விட்டுப் புறப்பட்டார். வழியில் உள்ள நேபாளம், திருக்கேதாரம், காசி, திருச்சைலம், திருக்காளத்தி, திருவாலங்காடு, காஞ்சிபுரம், திருத்தில்லை முதலிய சிவப்பதிகளை வணங்கிக்கொண்டு திருவாவடுதுறையை அடைந்தார். அங்கே இறைவழிபாடு செய்து கொண்டு சிலகாலந் தங்கியிருந்தார். பிறகு அப் பதியை விட்டுப் புறப்பட்டுச்சென்றார்.

**மூலன்**

செல்லும்போது வழியிலே ஒரு காட்டில் ஆன் கூட்டங்கள் வருந்திக் கதறுதலைக் கண்டார். அண்மையில் சாத்தனூர் என்னும் ஓர் ஊர் இருந்தது. அவ்வூரில் மூலன் என்னும் இடையன் ஒருவன் இருந்தான். அவன்தான் அந்த ஆநிரைகளை மேய்ப்பவன். அந்த மூலன் அன்று ஊழ்வினை உருத்துவந் தூட்டியபடியால் இறந்துபோனான்.

அவன் இறந்தான் என்பதை ஆநிரைகள் அறிந்தே இரங்கின. அருண்மிக்க மூலனூர் ஆநிரையின் அல்லலைக் கண்டார். அவ்வல்லலைப் போக்கவேண்டும் என்று திருவுளத்தில் எண்ணினார்.

வேற்றுடலில் நுழைதல்

சிவயோகியார் சித்திகள் எல்லாவற்றினும் வல்லவர். வேற்றுடலில் நுழையும் (பரகாயப்பிரவேசம்) ஆற்றலும் அவருக்குண்டு. ஆகவே, அவர்தம் உடலைப் பாதுகாப்பான ஓரிடத்தில் வைத்துவிட்டு மூலனுடைய உடலில் தமது உயிரைப் புகவிட்டார். அவ்வளவில் மூலன் உயிர் பெற்றெழுந்தான். ஆன்கூட்டங்கள் அல்லல் நீங்கித் துள்ளிக் களித்தன. அவனுடலை நக்கி மோந்தன. பிறகு மேயலாயின. பொழுது போகும் வரையில் மேய்ந்த ஆக்கள் பிறகு வழக்கப்படி தத்தம் இருப்பிடங்களை நோக்கிப் புறப்பட்டன. சிவயோகியார் ஆக்கட்குப் பின்சென்று எல்லாவற்றையும் வீடுகளிற் சேர்த்தார். பிறகு தாம் ஓரிடத்தில் நின்றார்.

மூலன் மனைவி

வழக்கத்திற்கு மாறாகத் தன் கணவன் நேரஞ்சென்று வந்திருத்தலையும் வீட்டிற்கு வராமல் வெளியிலே நிற்றலையும் மூலன் மனைவி கண்டாள். கணவனுக்கு உடல் நலமின்றியுள்ளது போலும் என்று எண்ணியவளாய் உடல் மீது கையைவைத்துப் பார்க்கச் சென்றாள். உடனே சிவயோகியார், எட்டி நின்றுகொண்டு, "உனக்கும் எனக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. நீ என்னைத் தீண்டாதே," என்றார். பிறகு ஓரிடத்திலே போய்ச் சிவயோகத்தில் இருந்தார். மூலன் மனைவி இரவு முழுதும் உறக்கமின்றிக் கவலைகொண்டிருந்தாள். மறுநாள் பலரிடமுந்

தன் கணவன் செயலைத் தெரியப்படுத்தினள். பலர் சிவ யோகியாரை வந்து பார்த்தார்கள். "இப்பொழுது இவரிடம் பெருமாறுதல் ஏற்பட்டிருக்கிறது இது பைத்தியமன்று. இவர் கருத்து இறைவன்மேல் பதிந்திருக்கிறது. இனி இவர் உலக வாழ்க்கைக்குப் பயன்பட மாட்டார். ஆகவே அவரைத் தொல்லைப்படுத்துவதில் பயன் ஒன்றும் இல்லை," என்று கூறி மனந் தெளியச் செய்தார்கள்.

உடல் மறைவு

பிறகு சிவயோகியார் ஊரைவிட்டுப் புறப்பட்டு முதல் நாள் தமது உடலை வைத்திருந்த இடத்திற்குச் சென்று பார்த்தார். அவ் வுடல் காணப்படவில்லை. முதலில் சிறிது உளங்கவன்றாராயினும் பின் தேறித் தெளிந்தார். பொதியமலைக்குச் செல்லும எண்ணத்தை விட்டுத் திருவாவடுதுறைக்கே சென்றார்.

திருமந்திரம்

சிவபெருமானை வணங்கிக் கோவிலுக்கு அண்மையில் அரசமரத்தின்கீழ் அமர்ந்து சிவயோகஞ் செய்யத் தொடங்கினர். மூலனின் உறவினர்கள் அங்கும் வந்து பார்த்து அவருடைய நிலையைத் தெரிந்துகொண்டு சென்றார்கள். மூலனார் அந்த இடத்தில் மூவாயிரம் யாண்டுகள் சிவயோகத்தில் இருந்தார். ஆண்டுக்கொருமுறை கண் விழிப்பார். அப்பொழுது பாடல் ஒன்று சொல்லுவார். அந்தப் பாடல்கள் சைவாகமங்களிலே கூறப்பட்ட ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் நான்கினையும் கூறுகின்ற திருமந்திரம் என்னும் பெயரைப் பெற்றன. திருமந்திர நூலிலே எல்லாப்பொருள்களையும் காணலாம்.

நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே.

வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்
வேட நெறிநிற்போர் வேடம்மெய் வேடமே
வேட நெறிநில்லார் தம்மை விறல்வேந்தன்
வேட நெறிசெய்தால் வீடது வாகுமே.

குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே.

என்பன திருமந்திரப் பாடல்கள்.

---

## உ. கல்லாடர்

கல்லாடம் என்பது ஒரு சிவப்பதி. அது பாண்டி நாட்டில் உள்ளது.

"கல்லா டத்துக் கலந்தினி தருளி
நல்லா ளோடு நயப்புற வெய்தியும்"

என்பது மணிவாசகப் பெருமான் திருவாய்மொழி. இவர் இப்பதியிற் பிறந்தமையின் இப்பெயரை இடவாகு பெயராகப் பெற்றனரா, அன்றிக் கல்லாடம் என்னும் நூலைச் செய்தமையின் பெற்றனரா என்பது உறுதிசெய்யக்கூடாத ஒன்றாக இருக்கின்றது. இவர் வாழ்ந்திருந்த இடம் மதுரை என்று பல காரணங்களாற் பெறப்படுகின்றது. இவருடைய காலம் கடைச்சங்கத்தார் காலமாகும்.

இவருடைய குலம் முதலியவைகளைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. இவருடைய சமயம் சைவசமயம் என்பது மட்டும் கல்லாடத்தால் நன்கு பெறப்படுகின்றது.

இவர் கடைச்சங்கத்தில் இருந்த புலவர்களில் ஒருவர். இவருடைய தாய் தந்தை முதலியவர்களைப்பற்றி ஒன்றுந் தெரியவில்லை. இவர் பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், அம்பர்கிழான், அருவந்தை, பொறையாற்றுக்கிழான் முதலியவர்களைப் பாடியவர். பதினொராந் திருமுறையில் கண்ணப்ப தேவர் திருமறம் என்னும் நூல் இவராற் செய்யப்பட்டிருப்பதோடு கல்லாடம் என்னும் தனிநூலும் இவராற் செய்யப்பட்டிருக்கிறது. இக் கல்லாடம் நூற்றிரண்டு அகவற்பாக்களை உடையது.

"மாணிக்கவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளிய திருச்சிற்றம்பலக்கோவை அகப்பொருள் இயலுக்கு மாறுபடுகின்றது," என்று சிலர் குற்றங்கூறினர். அக் கூற்றை மறுத்தற் பொருட்டு, அக்கோவையின் நூறு செய்யுட்களைக் குறிக்கோளாகக் கொண்டு இவர் கல்லாடத்தை இயற்றினார். கடைச்சங்கப் புலவரும் பிறருங்கூடிய பேரவைக்கண் கல்லாடம் அரங்கேற்றஞ் செய்யப்பட்டது.

கோவைக்குக் குற்றங்கூறியவர்கட்கு நல்லறிவு புகட்ட வேண்டும் என்று எண்ணிய கல்லாடர், கோவையின் சிறப்பியல்புகளை எடுத்துக் கூறினார். குற்றங் கூறியோர் கல்லாடரைப் பார்த்து, "நீர் நமது கோவையை அரங்கேற்றஞ் செய்யுங்கால் ஏதேனும் புதுமை நிகழ்ந்தால் அன்றி நாங்கள் உமது உரையை ஒரு சிறிதும் பொருட்படுத்தோம்," என்றனர். கல்லாடர் ஆலவாய்ப் பெருமானை வேண்டிக் கொண்டார். ஆலவாய்ப் பெருமான் அரங்கேற்றம் நடக்கு

மிடத்திற்கு ஒரு புலவராக எழுந்தருளினர். ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும், "ஆஆ மிக அருமையாக இருக்கின்றது," என்று கூறி வியந்து பாராட்டியதுடன் நூல் முற்றுப் பெற்றவுடன் திடீரென்று மறைந்தருளினர். இப் புதுமையினைக் கண்டு குற்றங்கூறியவர்கள் திகிலடைந்தனர். தமது ஆணவம் ஒழிந்து நல்லறிவு பெற்றனர். இச் செய்தியின் உண்மை,

> " கல்லாடர் செய்பனுவல் கல்லாடம் நூறுநூல்
> வல்லார்சங் கத்தில் வதிந்தருளிச்—சொல்லாயும்
> மாமதுரை ஈசர் மனமகிழ்ந்து கேட்டுமுடி
> தாமசைத்தார் நூறு தரம் "

என்னும் வெண்பாவால் அறியப்படுகின்றது.

கல்லாடர் தம் மனத்தில் தோன்றிய பொருளைச் சிறிதும் தட்டாத முறையில் பாடுதலில் மிக வல்லவர். கல்லாடத்து அகவற்பாக்கள் எல்லாவற்றிலும் இவர் மதுரை நகரைச் சிறப்பித்தும், திருவிளையாடற் கதைகளைச் சுட்டிக் காட்டியும் பாடியுள்ளார். இவர் பாண்டிய நாட்டிலே பிறந்து வளர்ந்தவரென்பது கல்லாட நூலின் போக்கால் ஒருவாறு உய்த்துணரக் கிடக்கின்றது. இவர் முருகக் கடவுளைத் தம்முடைய வழிபடு கடவுளாகக் கொண்டவர் என்றும் எண்ணலாம்.

> " சமயக் கணக்கர் மதிவழி கூறாது
> உலகியல் கூறிப் பொருளிது வென்ற
> வள்ளுவன் தனக்கு வளர்கவிப் புலவர்முன்
> முதற்கவி பாடிய முக்கண் பெருமான் "

என்னும் கல்லாட மொழிகளால் இவர் பலவேறு சமய ஆராய்ச்சியும் உடையவர் என்பது பெறப்படும். இவர் பாடல் திருவள்ளுவமாலையிலும் ஒன்று காணப்பெறுகிறது. அது,

"ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
அன்றென்ப ஆறு சமயத்தோர்—நன்றெனா
எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி"

என்பதாகும். இவர் தொல்காப்பிய நூலுக்கு ஓர் உரை இயற்றியுள்ளார் என்பது,

"ஒல்காப் பெருமைத் தொல்காப் பியத்திற்(கு)
உரையிடை இட்ட விரகர்கல் லாடர்"

என்பதனாற் பெறப்படுகிறது. ஆனால், அவ் வுரை வழக்காற்றில் இன்மையின் மறைந்துவிட்டது போலும்.

இலக்கண நூல்கள பலவற்றினும் இலக்கிய நூல்கள் பலவற்றினும் இவர் மிகவல்லுநர் என்பதை இவர் இயற்றியுள்ள கல்லாடம் நன்கு புலப்படுத்தும். கல்லாடம் மிகவும் கடின நடையில் அமைந்துள்ளது. உரை இன்றேல் எல்லோரானும் கற்றுணர இயலாது. இறுதியில் உள்ள சில பாடல்கள் பேரறிஞர்களையும் மருட்டுகின்றன. ஒருவர் கல்லாடத்தை நன்கு கற்றுத் தேர்ந்துவிடின் அவர் நிகரற்ற புலமைத் திறம்பெற்று விளங்கலாம் என்பதைக், "கல்லாடம் படித்தவனோடு சொல்லாடாதே," என்னும் பழமொழி விளக்குகின்றது. திருக்கண்ணப்பதேவர் திருமறம், கல்லாடம் ஆகிய இரண்டைத் தவிர வேறு நூல்களை இவர் செய்ததாகத் தெரியவில்லை.

## ௲. சேரமான் பெருமாள்

### தோற்றம்

சேரநாட்டிலே மகோதை என்னும் பெயரையுடைய கொடுங்கோளூரிலே சேரர்குடியிலே சேரமான் பெருமாள் தோன்றினார். இவருடைய பிள்ளைப்பெயர் பெருமாக் கோதையார். அந்நாளில் சேரநாட்டைச் செங்கோற் பொறையன் என்னும் சேரமன்னன் ஆட்சிபுரிந்துவந்தான். அவன் பழம்பிறவியிற் செய்த நல்வினையால் மனவுறுதி தோன்றத் துறவறத்தை மேற்கொண்டு சென்றுவிட்டான். அமைச்சரும் பிறரும் பெருமாக்கோதையாரை அரசனாகத் தேர்ந்தெடுத்தார்கள். பெருமாக்கோதையார் தாம் முன்பு செய்திருந்த சிவத்தொண்டிற்கு ஒரு சிறிதும் குறைவு ஏற்படாதவகையில் அரசாட்சி புரிதலை மேற்கொண்டார்.

பெருமாக்கோதையார் உயிர்த்தொகைகள் எல்லாம் கழறியவைகளை அறியும் அறிவையும், பேராண்மையையும், பெருங்கொடை நலத்தையும், பிற நன்மைகளையும் சிவ பெருமானுடைய திருவருட்டிறத்தால் பெற்றுச் சிறந்து விளங்கினார்.

### நீற்றிடத்தன்பு

சேரமான் பெருமாள், நன்னாளிலே நல்லோரையிலே திருமுடிசூடித் திருக்கோயிலுக்குச் சென்று இறைவனை வணங்கி யானைமேல் ஏறி நகர்வலம் வந்தார். அப்பொழுது ஒரு வண்ணான் உவர்மண் மூட்டையைச் சுமந்துகொண்டு சேரமான் பெருமானுக்கு முன்னே வந்தான். அவனு டைய உடல் மழையினால் நனைந்த உவர்மண் ஒழுகப்பெற்று வெளுத்திருந்த தோற்றம், திருநீற்றைத் தூளாகப் பூசிய சிவனடியார் திருக்கோலத்தைப் போன்றிருந்தது. அதனால்

அவ் வண்ணானை ஒரு சிவனடியார் என்று எண்ணிய சேரமான் பெருமாள் உடனே யானையினின்றும் இறங்கி அவ் வண்ணானுக்கு முன்னே சென்று வணங்கினார். அதனைக் கண்ட வண்ணான் உள்ளங்கலங்கினான். அவன் சேரமானை வணங்கித், "தாங்கள் அடியேனை யார் என்று எண்ணி வணங்குகின்றீர்கள்? அடியேன் அடிமை வண்ணான்," என்று கூறினான். சேரமான் பெருமாள் உண்மையை உணர்ந்தார். "அடியேன் அடிச்சேரன். தாம் திருநீற்றுக் கோலத்தை நினைப்பித்தீர்; வருந்தாதீர்," என்று கூறிச் சென்றார். அமைச்சர் முதலாயினோர் சேரமான் பெருமாளின் திருநீற்றன்பை வியந்து பாராட்டினார்கள். சேரமான் பெருமாள் சிவனடியாரிடத்தும் சிவபெருமானிடத்தும் பேரன்புடையவராய் அரசியற்றிக் கொண்டிருந்தார்.

திருமுகம்

அந்நாளில் பாண்டி நாட்டில் மதுரையிலே பாணபத்திரர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் மதுரைப் பெருமானைப் போற்றி வழிபடுதலையே தமக்குத் தொழிலாகக் கொண்டவர். அப் பாணபத்திரர் வறுமையினால் வாடுதலையறிந்த சோமசுந்தரப் பெருமான் பாணபத்திரருக்குப் பொருள் உதவி செய்ய எண்ணினார் பாணபத்திரரைப் பார்த்து, "உனக்குப் பெரும் பொருள் வழங்குமாறு நம் மாட்டுப் பேரன்புடைய சேரமன்னன் சேரமான் பெருமானுக்கு ஒரு திருமுகம் தருகின்றோம். அதனைச் சேரமான் பெருமாளிடம் கொடுத்துப் பொருள்பெற்று உன்னுடைய துன்பத்தைப் போக்குவாயாக," என்று கூறி,

"மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிறகு
அன்னம் பயில்பொழில் ஆல வாயில்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்

பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்கு
உரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்கும் சேரலன் காண்க
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே."

என்னுஞ் செய்யுளையும் எழுதிக்கொடுத்தருளினார். பாண பத்திரர் உடனே புறப்பட்டுச் சேரநாட்டை அடைந்தார். கொடுங்கோளூரை அடைந்து அரண்மனைக்கு முன்னே வந்தார். சேரமான் பெருமானுக்குத் தெரியப்படுத்தினார் தமது வருகையை. சேரமான் பெருமாள் தலையின்மீது குவித்த கையினராய் உடனே புறப்பட்டு வெளியே வந்தார். பாணபத்திரரைப் பன்முறை வணங்கினார். "அடிகள் எளியேனை ஒரு பொருளாக மதித்து ஈண்டு எழுந்தருளினீரே" என்றார். பாணபத்திரர் சிவபெருமானுடைய திருமுகத்தைச் சேரமான் பெருமாளிடம் கொடுத்தார். சேரமான் அத் திருமுகத்திற்குப் பன்முறை வணக்கஞ்செய்து படித்தறிந்தார். பலநாள் தமது மாளிகையில் வைத்துப் பாண பத்திரருக்கு விருந்து செய்தார். பிறகு அரண்மனையில் இருந்த பொருள்களில் பாணபத்திரருக்கு வேண்டிய அளவு யானை ஒட்டை முதலியவைகளின் மீது ஏற்றியனுப்பினார்.

பொன்வண்ணத்தந்தாதி

கூத்தப்பிரான் கட்டளைப்படி சேரமான் திருத்தில்லைக்குச் சென்றார். கூத்தப்பிரானை வணங்கிப் பொன்வண்ணத்தந்தாதி என்னும் நூலைப் பாடினார்.

"பொன்வண்ணம் எவ்வண்ணம்
அவ்வண்ணம் மேனி பொலிந்திலங்கும்

மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
வீழ்சடை வெள்ளிக் குன்றம்
தன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மால்விடை தன்னைக் கண்ட
என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ண
மாகிய ஈசனுக்கே.”

என்பது பொன்வண்ணத் தந்தாதியின் முதற்பாடல். சேரமான் பெருமாள் திருத்தில்லையை அடைந்து பொவண்ணத் தந்தாதியைப் பாடினார் என்னுஞ் செய்தி,

“அன்றுவெள் ளானையின் மீதிமை யோர்சுற் றணுகுறச்செல்
வன்றொண்டர் பின்பரி மேற்கொண்டு வெள்ளி மலையரன்முன்
சென்றெழி லாதி உலாஅரங் கேற்றிய சேரர்பிரான்
மன்றிடை யோதுபொன் வண்ணத்தந் தாதி வழங்கிதுவே.”

என்னுஞ் செய்யுளாற் பெறப்படும்.

### சுந்தரர் நண்பர்

சுந்தரமூர்த்திநாயனருக்கும் சேரமான் பெருமாளுக்கும் நட்புண்டாயிற்று. இருவரும் ஒன்று சேர்ந்து பல சிவப்பதிகட்கு இறைவழிபாட்டின் பொருட்டுச் சென்றனர். சேரமான்பெருமாள் திருவாரூரில் சுந்தரமூர்த்தி அடிகளுடன் இருக்கையில் திருவாரூர் மும்மணிக்கோவை என்னும் நூல் பாடினார். சுந்தரரும் சேரமான்பெருமாளும் சேரநாட்டில் இருக்கையில் சுந்தரமூர்த்தி அடிகள் திருவஞ்சைக்களம் திருக்கோயிலுக்குச் சென்றார். அப்போது சுந்தரர் இறைவன் அருளால் கைலையை நோக்கிப் புறப்பட்டார்.

### கைலையை அடைதல்

அரண்மனையில் இருந்த சேரமான்பெருமாள் சுந்தரர் செயலை உணர்ந்தார். வெள்ளை யானையின்மேல் கைலைக்

குச் செல்லும் சுந்தரரோடு தாமும் செல்ல எண்ணினர். ஒரு குதிரையின் மேலேறித் திருவஞ்சைக் களத்தை யடைந்து குதிரையின் காதில் ஐந்தெழுத் தருமறையை உரைத்தார். அது விண்ணில் எழுந்து சுந்தரரது வெள்ளை யானையை வணங்கி வலஞ்செய்து அதற்கு முன்னாகச் சென் றது. அப்போது சேரமான்பெருமாள் திருக்கயிலாய ஞானவுலா என்னும் நூலைப் பாடிக்கொண்டு சென்றார். இருவரும் திருக்கயிலையை அடைந்து இறைவனை வணங்கிப் பண்டைய தம் பதங்களைப் பெற்றனர். சேரமான்பெரு மாள் பாடிய உலா திருக்கயிலையில் சிவபெருமான் திரு முன் அரங்கேற்றஞ் செய்யப்பட்டது. அது பின்பு மாசாத்தரென்பவரால் திருப்பிடவூரிலே வெளிப்பட்டது.

சேரமான்பெருமாளால் இயற்றப்பட்ட பொன்வண் ணத் தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, திருக் கைலாய ஞானவுலா என்னும் மூன்று நூல்களும் பதினே ராந்திருமுறையிற் சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

## ௬. கருவூர்த்தேவர்

குலமுஞ்செயலும்

திருவிசைப்பாவில் பத்துத் திருப்பதிகங்களை இயற் றிய கருவூர்த்தேவர் கருவூரிலே மறையவர் குலத்தில் தோன்றினர். இலக்கண இலக்கியங்களைக் கற்று அவை களில் சிறந்து விளங்கினர் சமய ஆராய்ச்சியில் ஈடுபட் டுச் சைவசமயமே மெய்ச்சமயமென்று தேறினர். மற் றைச் சமயங்களினும் விருப்பு வெறுப்பற்றுப் பொது நோக்கங்கொண்டார். சிவபிரான் திருவருள் இவருக்கு மிகுதியாக உண்டாயிற்று. எல்லாச் சித்துக்களையும்

இயற்றுதற்கு வல்லவரானார். சித்தாடலில் வல்லவராகவே இவருடைய பெயர் கருவூர்ச்சித்தர் என்றும் மருவலாயிற்று.

சித்து

கருவூர்மக்கள் கருவூர்த்தேவருடைய பெருமையை அறிந்துகொள்ளவில்லை. கருவூர்த்தேவர் மதுவையும் ஊனையும் உண்ணும் வாம மார்க்கத்தவர் என்று சொல்லி இகழ்ந்தார்கள். கருவூர்த்தேவர் அம் மக்கட்கு நல்லறிவு புகட்ட எண்ணினார். காலமல்லாத காலத்திலே பெரு மழை பொழியச் செய்தார். ஆறு பெருகிவரச் செய்தார். திருக்காப்பிடப் பெற்ற கோயிலின் திருக்கதவுகள் தாமே திறக்கச் செய்தார். விண்ணில் இயங்கி நினைத்த விடங்கட்குச் சென்றார்.

பலவிடங்கட்குச் செல்லுதல்

தேவர், பல பதிகட்குஞ் சென்று கடவுளைப்போற்ற விரும்பினார். கொங்குநாடு, குடநாடு, கன்னடநாடு, துளுவநாடு முதலிய நாடுகட்குச் சென்றார். காசி, காஞ்சி, காளத்தி, தில்லை, அருணை முதலிய சிவப்பதிகட்குச் சென்றார். பிறகு பாண்டி நாட்டை அடைந்து மதுரை முதலிய ஊர்கட்குச் சென்றார். தாமிரவர்ணியாற்றின் கரையில் உள்ள குருகூர்ப்பெருமாள் கோயிலுக்குச் சென்றார். தேவர் செல்வதற்குமுன் திருமால் தம்மடியார் கனவில் தோன்றிக், "கருவூர்ச் சித்தர் இவ்வூருக்கு வருகின்றார். அவரை வரவேற்றுப் போற்றுங்கள்," என்று திருவாய் மலர்ந்தருளினார். திருமாலடியவர்கள் திருக்கூட்டமாகச் சென்று தேவரைப் போற்றி அவருடைய வாழ்த்துரையைப் பெற்றார்கள்.

பிறகு தேவர், திருச்செந்தூர், கன்னியாகுமரி, சுசீந்திரம் முதலிய இடங்கட்குப் போய்விட்டுத் திருநெல்வேலியை அடைந்தார். நெல்லையப்பரை அழைத்தார். நெல்லையப்பர் விரைந்து வராமல் சிறிது தாழ்த்தார். தேவர் சினங்கொண்டு அவ்வூரை, "எருக்கு மூடக்கடவது," என்று சபித்தார். அவ்வளவில நெல்லையப்பர் அடியார் குழாத்தோடு தேவர் முன் தோன்றி அவருக் கருள்புரிந்தார். தேவர், இன்பக்கடலில் இனிது ஆழ்ந்து திருவிசைப் பாப் பாடினார். சாபத்தையு மாற்றினார். பிறகு சில சித்துக்கள் செய்துகொண்டு திருக்குற்றாலத்தையடைந்தார். அங்கும் திருவிசைப்பாப் பாடினார். பிறகு பொதிய மலையை அடைந்து அகத்தியரைக் கண்டு வணங்கி அங்குத் தங்கியிருந்தார்.

தஞ்சைக்குச் செல்லுதல்

அந்நாளில் தஞ்சையில் சோழ மன்னன் ஒரு பெரிய கோயிலைக் கட்டினான். அதில் சிவபெருமான் திருக் குறியான சிவலிங்கத்தை அமைக்க முயன்றான். எவ்வளவோ முயற்சி செய்தும் மருந்திளகிப் பந்தனமாகவில்லை. மன்னன் வருந்தினான். "கருவூர்த் தேவர் வந்தாலன்றிக் காரியம் நடைபெறமாட்டாது," என்று விண்ணொலி எழுந்தது. அங்கு உருவத்தை மறைத்து எழுந்தருளியிருந்த போக நாதர் கருவூர்த்தேவரைத் தம் வியத்தகு ஆற்றலால் அழைத்தார். கருவூர்த்தேவர் கோயிலுக்குட்சென்று சிவலிங்கத்தை ஆவுடையாருடன் சேர்த்து ஒழுங்காகப் பிடித்துத் தமது வாயிலிருந்த பாக்கு வெற்றிலைச் சாற்றை உமிழ்ந்து இறுக்கினார். சிவலிங்கமும் ஆவுடையாரும் இறுக்கமாய் ஒன்றுபட்டுப் பசும்பொன்னை உருக்கி அமைத்ததைப்போல் அமைந்தது. அதனைக் கண்டு எல்லோரும் மிகுந்த வியப்படைந்தார்கள்.

திருவரங்கம் சேறல்

தேவர் பிறகு திருவானைக்காவுக்குப் போய்ப் பின் திருவரங்கத்தையடைந்தார். தேவரின் அழகைக்கண்டு திகைத்த ஒரு விலைமகள் தேவரிடத்தில் அன்புடையவளாய் அவரைப் போற்றி வழிபட்டாள். தேவர் அவ் விலை மாதின் இல்லத்திற்குச் சென்று அவளது இன்பத்தை நுகராமல் நுகர்ந்து இரண்டு நாள் தங்கினார். பிறகு திருக்கோயிலுக்குச் சென்றார். அரங்கநாதனை அழைத்து அவருடைய மார்பிலே இருந்த விலையேறப்பெற்ற மாணிக்க மாலையைக் கேட்டார். பெருமாளும் மறுக்காமல் கொடுத்தார். தேவர் அம் மாலையை அப் பொதுமகளுக் களித்தார். மேலும் அவளைப் பார்த்து, "நீ எப்பொழுது நினைத்தாலும் நாம் உடனே வருவோம்," என்று கூறி அங்கிருந்து புறப்பட்டார். திருப்பராய்த்துறை முதலிய இடங்கட்குப் போய்விட்டுக் கருவூரை அடைந்தார். திருவரங்கத்தில் திருமாலடியார்கள் திருவரங்கநாதனின் திருக்கழுத்தில் திகழ்ந்த மாணிக்கமாலையைக் காணுமல் திகைத்தார்கள். பிறகு விலைமகளிடம் மாலை இருத்தலை உணர்ந்து உசாவினார்கள். அம்மாது, "இம்மாலையை அடியாளுக்குக் கருவூர்த் தேவர் வழங்கினார். அவர் இன்றும் என் இல்லத்திற்கு வருவார்," என்று இயம்பினாள். அன்றிரவு அவ் விலைமகள் கருவூர்த் தேவரை எண்ணினாள். அச் சித்தர் வந்தார். அவரைக் காவலாளர் பிடித்துக் கோவில் அதிகாரிகளிடம் கொண்டு போனார்கள். கோவில் அதிகாரிகள் சித்தரைப் பார்த்து, "மாலையை எப்படிக் களவு செய்தாய்?" என்று உசாவினார்கள். தேவர், "திருவரங்கநாதரே எனக்கு மாலையைத் தந்தனர்," என்றுகூறினார்.

கோவில் அதிகாரிகள் தேவர் மொழியைக் கேட்டு நகைத்தார்கள். "அரங்கநாதனை அவைக்கு அழைத்து அதனை மெய்ப்பிக்க வேண்டும்," என்றார்கள். தேவர் திருவரங்கநாதனுக்குத் தெரியப்படுத்தினார் அரங்கநாதன் விண்ணில் தோன்றினார். யாவருங் கேட்குமாறு, "மாணிக்க மாலையை நாமே கருவூர்த் தேவருக்கு வழங்கினோம்," என்று இயம்பி மறைந்தார். திருமாலடியார்கள், குற்றம் பொறுக்க வேண்டுமென்று தேவரை வேண்டிக் கொண்டார்கள். தேவரும் அவர்கட்கு அருள்புரிந்து கருவூரையடைந்தார்.

கோனிடம் கோள்

கருவூர்த் தேவரின் குலத்தினராகிய அந்தணர்கள் ஒருநாள் இரவு அரசன் இடத்திற்குப் போய்க், "கருவூர்த் தேவர் குலத்திற்குத் தகாத செயல்களைச் செய்கின்றார். மதுவும் ஊனும் மாந்தி வாமபூசை செய்கின்றார். அவரைக் கண்டித்தல் வேண்டும்," என்று கோளுரை கூறினார்கள். கருவூர்த் தேவரைக் கண்டிக்கக் காவலன் இசைந்தான். தேவரது இருப்பிடத்திற்குச் சென்றான். கருவூர்த் தேவர் கட்டளைப்படி அவருடைய மாணவர் இருப்பிடம் முழுவதையுஞ் சுற்றிக் காட்டினார். மதுவையும் ஊனையும் எங்குங் காணவில்லை. தூய பொருள்களே இருந்தன. அரசன் அவைகளைக் கண்டு ஐயந் தெளிந்தான். தேவருடைய திருவடிகளிலே வீழ்ந்து வணங்கி மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். பிறகு தேவர் அரசனைப் பார்த்து, "இப்போது இங்குள்ள அந்தணாளர்களின் இருக்கைகளையெல்லாம் ஆராய்ந்து பார்," என்று கூறினார். அரசன் அவ்வாறே சென்று எல்லாருடைய இருப்பிடங்களையும் ஆராய்ந்து பார்த்தான். யாண்டும் மதுக்குடங்களும்

ஊனும் நிறைந்திருத்தலைக் கண்டான். அவர்கள் மீது சினங் கொண்டு நகரத்தை விட்டுத் துரத்தினன்.

வீடுபேறு

கருவூர்த்தேவர் அரசனைப் பார்த்து, "அவர்களை விரட்டவேண்டாம்," என்று கூறினர். கருவூர்த் தேவரிடம் பகைமைகொண்ட அந்தணர்கள் கருவூர்த்தேவர்க்கு இடையூறு செய்யவேண்டும் என்னும் எண்ணத்துடன் ஆம்பிர நதிக்கரையில் கூடியிருந்தார்கள். ஆம்பிர நதிக்குச் சென்ற தேவர் அந்தணர் கையில் அகப்படாமல் திருவாயிலக்கோயிலுக்குத் திரும்பினர். அந்தணர்களும் பின் தொடர்ந்து கோயிலை யடைந்தார்கள். கருவூர்த் தேவர் பசுபதீச் சுரரைத் தழுவிக்கொண்டார். அவர் வீடுபேற்றை அடையவேண்டிய காலம் அண்மியபடியால் சிவபெருமான் திருவடி நீழலைச் சேர்ந்தார். அந்தணர்கள் தேவரின் மெய்யன்மையையும் சிவபெருமானுடைய திருவருளையுங் கண்டு அஞ்சித் தாங்கள் செய்த குற்றத்திற்காக உள்ளம் வருந்தினர்கள். "அந்தணாளர்களின் தவறுகள் மன்னிக்கப் பட்டன," என்று விண்ணொலி எழுந்தது. அதனைக் கேட்டு அனைவரும் வியப்படைந்தார்கள்.

திருவிசைப் பாவையல்லாமல் கருவூரார் இரண்டொரு மருத்துவ நூல்களும், பூசாவிதி என்னும் நூலும் செய்திருப்பதாக அறியப்படுகிறது. கருவூர்த் தேவர் வரலாற்றைக் கொங்குமண்டல சதகம் பின்வருமாறு கூறுகிறது:

"வாய்த்தம் பலவெச்சி லாலட்ட பந்தன மாண்புறமீன்
காய்த்து மராஞ்சொரி யச்செய்து பத்தி கனிந்துசெந்தேன்
தோய்த்த திருவிசைப் பாப்பா டொருசித்தர் தோன்றிவர
வாய்த்த கருவூர்ப் பதிசேர்வ துங்கொங்கு மண்டலமே."

---

## ரு. புராணத் திருமலைநாதர்

### ஊர், காலம் முதலியன

பிற்காலத்தில் புராணத் திருமலைநாதர் என்று வழங்கப்பெற்ற திருமலைநாதர் இற்றைக்கு ஏறக்குறைய நானூறு யாண்டுகட்கு முன் இருந்தார். இவர் பிறந்த ஊர் காலம் முதலியன விளக்கமாகத் தெரியவில்லை. இவர் காஞ்சியில் உள்ள ஞானப்பிரகாச மடத்துப் பெரியார்களிடம் கல்வி கற்றுச் சமயதீக்கை பெற்றுச் சிறந்து விளங்கினார். இவர் அடிக்கடி தில்லையை அடைந்து கூத்தப் பிரானைப் போற்றிச் செல்வது வழக்கம்.

### சிதம்பர புராணம்

திருமலைநாதரின் கல்விச் சிறப்பை யறிந்த தில்லை மூவாயிரர்கள் இவரைக் கொண்டு தில்லைக்குப் புராணஞ் செய்விக்க வேண்டும் என்று எண்ணினார்கள். வடமொழி நூல் ஒன்றைக் கொடுத்து அதனை மொழிபெயர்த்துப் பாடச் சொன்னார்கள். திருமலைநாதரும் அவ்வாறே பாடினார். அவ் வடமொழிப் படியில் இறுதிப்பகுதியில்லை. அதனை முடித்தற்கு எவ்வளவோ முயன்றும் இறுதிப் பகுதி அகப்படவில்லை. அப் புராணத்தைப் பாடிய பிறகு அவருடைய பெயர் புராணத் திருமலைநாதர் என நீண்டு நின்றது.

### சொக்கநாத ருலா

பிறகு திருமலைநாதர் மதுரைக்குச் சென்றார். அப்பொழுது அங்கு அரசாட்சி செய்துகொண்டிருந்த வீர மாறன் என்பவனோடு பழக்கம் ஏற்பட்டது. அம் மன்னன் திருமலைநாதரைத் தன் அவைக்களப் புலவராக இருக்குமாறு வேண்டிக் கொண்டான். திருமலைநாதரும் அவ்

வாறே அங்குத் தங்கி அம் மன்னனுக்குத் தமிழ்ச் சுவையைப் புகட்டிக் கொண்டிருந்தார். அக் காலை சொக்கநாதர் உலா என்னும் நூலை மதுரையில் எழுந்தருளிய சொக்கநாதப் பெருமான்மீது பாடினார். அவ் வுலா 516 கண்ணிகளைக் கொண்டது. மதுரைக் கடவுள் இயற்றிய 64 திருவிளையாடல்களும் ஒன்பது பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு உலாவில் அமைக்கப் பெற்றுள்ளன.

பரஞ்சோதி என்னும் மகன்

புராணத் திருமலைநாதருக்குப் பரஞ்சோதி என்னும் பெயருடைய மகனார் ஒருவர் இருந்தார். இவர் தம் தந்தையாகிய திருமலைநாதரிடமே இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தாமும் இலக்கணநூல் செய்யக்கூடிய ஆற்றலடைந்து பொருத்த இலக்கணமும் நூல்இலக்கணமும் அமைந்த சிதம்பரப் பாட்டியல் என்னும் அரிய இலக்கண நூல் ஒன்றையுஞ் செய்தார். சிதம்பரப் பாட்டியல் என்னும் நூலைச் செய்த பரஞ்சோதியார் புராணத் திருமலைநாதருடைய மகன் என்பது,

"பூமன்னு பொழில்வெண்ணெய் மெய்கண்டான் கச்சிப்
புகழ்புனைதத் துவஞான ப்ரகாசமாய் வந்து,
பாமன்ன வுரையென்ன வவனருளா லவன்றன்
பதம்பரவிச் சிதம்பரப்பாட் டியலெனப்பேர் வகுத்தான்;
மாமன்னு சிதம்பரபு ராணமுதல் நூலும்
மதுரையுலா வும்பகர்ந்தோன் மருவுகுல மைந்தன்,
தேமன்னு புராணகலை பலதெரிபு ராணத்
திருமலைநா யகனருளின் தேசுபூண் டோனே."

"சிதம்பரப் பாட்டியலைச் செய்தான் தமிழால்
சிதம்பரபு ராணமுதற் செய்து—விதம்பெறுசீர்
சேர்ந்த புராணத் திருமலைநா தன்தவத்தால்
சார்ந்தபரஞ் சோதியென்பான் தான்."

என்னுஞ் செய்யுட்களால் பெறப்படுகின்றன.

திருமலைநாதர், சிதம்பர புராணம், சொக்கநாதருலா ஆகியவைகளேயன்றி வேறு நூல்களும் பல செய்தார். அவைகள் காலப்போக்கில் மறைந்துவிட்டன. மதுரைச் சொக்கநாதருலா அச்சியற்றப்பெற்று வெளிவந்துலவு கிறது.

---

## கூ. முத்துத்தாண்டவர்

ஊர்

முத்துத்தாண்டவர் திருஞானசம்பந்தப் பிள்ளையார் தோன்றிய சீகாழியிலே தோன்றினர். அவருக்கு இடப் பட்ட பிள்ளைப்பெயர் தாண்டவன் என்பது. முத்துத் தாண்டவர் இளமைக் காலத்தில் விலைமகளிர் கூட்டுறவைக் கொண்டார். அதனால் குட்டநோய் உண்டாயிற்று. கை கால்களின் விரல்கள் குறைந்தன. கண்டவர்கள் முத் துத்தாண்டவரை இகழ்ந்து ஒதுக்கினர்கள். அதன் பின் முத்துத்தாண்டவர் கோயிலிலேயே அமர்ந்து கடவுளை எண்ணி எண்ணி வழிபட்டார். “தமது நோயைப் போக்கி யருள வேண்டும்,” என்று இறைவன்பால் வேண்டிக் கொண்டார்.

விலைமகளே தேவி

அந் நாளில் சீகாழிக் கோயிலில் சிவபாக்கியம் என் னும் பெயருடைய தேவகணிகை ஒருத்தி தொண்டு செய் திருந்தாள். அவள் இறைவனிடத்தில் பேரன்புடையவள். இறைவன்மீது கொண்ட அவளுடைய தூய அன்பு அவளை உயர்நிலையில் நிற்கச் செய்தது. அவள் நாள்தோறுந் திருக் கோயிலை அடைந்து இனிய இசையுடன் பாடுவாள். அன்பு மிகுதியினல் ஆடுவாள். அவளுடைய மெய்யன்பு முத்துத்

தாண்டவருக்கு மகிழ்ச்சியை அளித்தது. அவர் அவளிடமும் அச்சமும் அன்புங்கொண்டார். அவளுடைய அழகை அவர் விரும்பவில்லை. அவளது இறையன்பையே அவர் பாராட்டினார். அக் கணிகையைத் தேவியாகவே போற்றினார்.

இறைவியின் திருவருள்

ஒரு நாள் இரவு முத்துத்தாண்டவர் நீண்டநேரம் கோயிலில் இருந்தார். பசிப்பிணி அவரை வருத்தியது. வாகன மண்டபத்திற்குச் சென்று ஒரு வாகனத்தின் கீழ் படுத்து உறங்கிவிட்டார். நள்ளிரவுப் பூசை முடிந்த பிறகு கோயிலைப் பூட்டிக்கொண்டு எல்லோரும் சென்றுவிட்டனர். அப்பொழுது இறைவி ஒரு சிறு பெண்ணாக முத்துத் தாண்டவருக்கு முன்னால் தோன்றினாள். முத்துத் தாண்டவரைத் தட்டி யெழுப்பினாள். முத்துத்தாண்டவர் திடுக்கிட்டெழுந்தார். இறைவி முத்துத்தாண்டவரைப் பார்த்து, “வருத்தமுறாதே; உணவு இதோ இருக்கிறது; உண்டு பசி தீர்,” என்று கூறி உணவளித்தாள். முத்துத் தாண்டவர் அவ்வுணவினை உண்டு பசி தீர்ந்தார். பிறகு தேவியைப் பார்த்து, “எனது பசிப் பிணியைத் தீர்த்தாற் போல் பிறவிப்பிணியையுந் தீர்த்தருள வேண்டும்,” என்று வேண்டிக்கொண்டார். இறைவி முத்துத்தாண்டவரைப் பார்த்து, “நீ தில்லைக்குச் செல். எல்லா நலன்களும் உண்டாகும்,” என்று கூறி மறைந்தாள்.

முத்துத்தாண்டவர் இறைவியின் திருவருளை எண்ணி எண்ணி மகிழ்ந்தார். அம்பிகையின் திருமுன் சென்று உட்கார்ந்து மெய்மறந்திருந்தார். விடியற்காலையில் கோவிலைத் திறந்தனர். முத்துத்தாண்டவரைக் கண்டதும் மெய்காவலன் திடுக்கிட்டான். “இரவில் களவுசெய்வ

தற்கு இங்கு வந்தாயோ? எவ்வழியாக வந்தாய்? எப்படி வந்தாய்?" என்று பல கேள்விகளை அடுக்கினன்.

தில்லைக்குச் செல்லுதல்

முத்துத்தாண்டவர் கோயிலுக்குள் இருந்த செய்தி எங்கும் பரவிற்று. பலபேர் கோயிலுக்கு வந்து கூடினர்கள். எல்லோரும் முத்துத்தாண்டவரை உசாவினர்கள். முத்துத்தாண்டவர் நிகழ்ந்ததை மொழிந்தார். அவரிடந் தோன்றிய மாறுதலையும் உடலொளி விளக்கத்தையுங் கண்டவர்கள் அவர் கூறியதை நம்பினர்கள். முத்துத்தாண்டவர் உடனே தில்லைக்குப் புறப்பட்டார். தில்லையை அடைந்ததும் அவருக்கு எல்லையற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. கூத்தப்பிரானைப் போற்றி வணங்கினர். திருவருளால் இசைப்பாடல்களை இயற்றும் ஆற்றல் அவருக்கு உண்டாயிற்று. உடனே அவர், கூத்தப்பிரான்மீது பாடல்களியற்றினர். கூத்தப்பிரான் படிக்காசுப் புலவருக்குப் பொருள் அளித்ததுபோல் முத்துத்தாண்டவருக்கும் பொருள் அளித்தார். நாள்தோறும் பஞ்சாட்சரப் படியில் ஐந்துபணம் வைத்தார். முத்துத்தாண்டவர் அப்பொருளைக் கொண்டு தமக்கு வேண்டியவைகளைத் தேடிக்கொண்டார்.

ஆறு வழிவிடல்

முத்துத்தாண்டவர் தில்லையில் கூத்தப்பிரானைப் போற்றி வழிபட்டுவிட்டுத் தம் ஊரான சீகாழிக்குத் திரும்பிவிடுவார். எக்காரணத்தாலோ அவர் தில்லையில் தங்கியிருக்கவில்லை. முத்துத்தாண்டவர் ஒருநாள் சீகாழியில் இருந்து புறப்பட்டுக் கொள்ளிடக் கரையை அடைந்தார். கொள்ளிடம் ஆற்றில் தண்ணீர் கரைபுரண்டு ஓடிக்கொண்டிருந்தது. எவ்வாறு ஆற்றைக்கடந்து செல்வது என்று எண்ணமிட்டார். அந்த இடத்தில் நின்றுகொண்டே

கூத்தப்பிரானைப் பாடினார். பிறகு எது நேர்ந்தாலும் நேரட்டும் என்னும் துணிவுடன் ஆற்றுநீரில் இறங்கினார். ஆறு திருவையாற்றில் சமயாசாரியர்கட்குப் பிரிந்து வழி விட்டதுபோல் பிரிந்துவிட்டது. முத்துத்தாண்டவர் அவ் வழியே இறங்கிச் சென்று மறுகரையை அடைந்தார்.

பாம்பு நஞ்சுக்கு மருந்து

ஒருநாள் முத்துத்தாண்டவர் தில்லையிலிருந்து சீகாழியை நோக்கிப் புறப்பட்டார். வழியில் புதர்கள் அடர்ந்த ஓரிடத்தில் நச்சரவு ஒன்று தாண்டவரைத் தீண்டிவிட்டது. உடனே தாண்டவர்,

பல்லவி

அருமருந்தொரு திருமருந்து
அம்பலத்தே கண்டேனே (அரு)

அநுபல்லவி

திருமருந்துடன் வரு மருந்து
தில்லை அம்பலத் தாடு மருந்து
இருவினைகள் அறுக்கும் மருந்து
ஏழைஅடியார்க் கிரங்கு மருந்து (அரு)

சரணம்

திருத்தித் தித்தியென் றாடுமருந்து
தேவாதி மூவர்கள் காணுமருந்து
கருத்தைத் திருத்தி இருத்துமருந்து
காலனைக் காலால் உதைத்தமருந்து (அரு)

என்னும் இசைப்பாட்டைப் பாடினார். பாம்பு நஞ்சு இறங்கி விட்டது.

முடிவு

முத்துத்தாண்டவர் கூத்தப்பிரானைப் பல ஆண்டுகள் போற்றியிருந்து பின் திருவடி நீழலை யடைந்தார்.

## எ. ஈழத்துக்குச் சென்ற இரு புலவர்கள்

*புலவர் வறுமை*

ஏறக்குறைய அறுநூறுயாண்டுகட்கு முன்னர்ப் பாண்டிய நாட்டிலே தெய்வத் திருவருள் கைவரப்பெற்ற இருபுலவர்கள் இருந்தனர். இருவரும் பல நூல்களைக் கற்றுத் துறைபோயவர்கள். இருவருக்கும் தெய்வத் திருவருள் இனிது அமைந்திருந்தது. ஆயினும் புலவர்களைப்பற்றி வாட்டும் வறுமை இருவரையும் நன்கு வருத்தியது. மிடிக் கனலால் அவர்கள் நன்கு வாட்டப்பெற்றனர்.

*ஈழத்துக்கேகல்*

அந்நாளிலே ஈழநாட்டில் தமிழ்நாட்டரசன் ஒருவன் அரசாட்சி புரிந்திருந்தான். தமிழ்நாட்டில் இருந்து புலவர்கள் சென்றால், அவர்களை அவன் மிகவும் போற்றி அவரவர் தகுதிக்கேற்றவாறு பரிசில்கள் வழங்கி அனுப்பிக் கொண்டிருந்தான். அம்மன்னனின் புகழைக் கேட்ட இருவரும் புறப்பட்டு ஈழநாட்டை யடைந்து அரசன் அவையை அடைந்தனர். இதில் வியக்கத்தக்க செய்தி என்னவென்றால், புலவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் உணரார். இருவரும் அரசனை அடைந்து அவன்மீது அருமையான செய்யுட்களைப் பாடினார்கள். அரசன் இருவருக்கும் ஒரே தன்மையில் நன்கொடைகள் வழங்கிச் சிறப்புச்செய்தான். அப்பொழுதுகூட ஒருவரை ஒருவர் உணர்ந்து நட்புக் கொள்ளவில்லை. இருவரும் தாந்தாம் உயர்ந்தவரென்றும் தத்தமக்கே சிறந்த பரிசுகள் வழங்கவேண்டும் என்றும் போட்டியிட்டனர்.

*வியத்தகு நிகழ்ச்சி*

இருவரில் உயர்ந்தவர் யார், தாழ்ந்தவர் யார் என்று அரசனால் கண்டுபிடிக்க முடியவில்லை. அதன் பொருட்டு

அவன் ஒரு சூழ்ச்சியை உள்ளத்தில் எண்ணிக்கொண்டு இருவரையுஞ் சிறிதுகாலம் அவ்விடமே தங்கியிருக்கப் பணித்தான். புலவர்களும் அவ்வாறே தங்கியிருந்தனர். அந்நாளில் கதிர்காமத்தில் திருவிழா நடைபெறத் தொடங் கியது. ஒருநாள் முருகப்பெருமான் மஞ்ஞையூர்தியில் திருவுலாப் போந்தருளினர். அரசன் அறிஞர்கள இருவ ருடனும் அங்குச் சென்றான்

புலவர்கள் இருவரையும் பார்த்து, ''உங்களில் ஒருவர், முருகப்பெருமானுடைய ஊர்தியாக அமைந்துள்ள மயில் தன் வாயிற் பற்றியுள்ள பாம்பை விட்டுவிடும்படியாகப் பாடவேண்டும். உடனே அந்தப் பாம்பை மயில் பற்றிக் கொள்ளும்படியாக மற்றவர் பாடவேண்டும். இதனால் நான் உங்கள் தகுதியறிந்து உங்கள் விருப்பப்படியே நடப் பேன்,'' என்று நவின்றான். அரசன் கூறிய இம்மாற்றங் களைக் கேட்ட உடனே ஒருபுலவர்,

> தாயரவைச் சீறிவரு சந்த்ரோத யந்தனக்குன்
> வாயரவை விட்டுவிட வேண்டாவோ—

என்று அரைவெண்பாப் பாடினர். உடனே மயிலின் வாயில் அமைக்கப்பட்டிருந்த பாம்பு வாயிலிருந்து நழுவி விழுந்தது. இதனைக் கண்டதும் மற்றைப் புலவர்,

> —தீயரவைச்
> சீறுமடி யார்பரவும் செங்கதிர்கா மப்பெருமாள்
> ஏறு மயிலே எடு.

என்றார். அவ்வளவில் நழுவிவிழுந்த பாம்பு மயிலின் வாய்க்கு முன்னிருந்தபடியே போய்விட்டது. இதனைக் கண்டு அரசன் பெரு வியப்படைந்தான். புலவர் இருவரும் சமமான பெருமையுடையவர்கள்தான் என்று முடிவு செய்து, இருவரும் விரும்பியவைகளையெல்லாம் வழங்கிப்

போற்றினன். அதன்பின் இருவரும் நண்பர்களாகி நாடு திருமபினர். இவ்வளவு பெருமையுடையவர்களாக விளங்கிய அவர்கள்கூடத் தமது பெயரை உலகில் நிலைநாட்டாமல் மறைந்து போயினர்.

---

## அ. அரச கேசரி

### தோற்றம்

ஏறக்குறைய ஐந்நூறு யாண்டுகளுக்குமுன் யாழ்ப்பாணத்து நல்லூரிலே அரசகேசரி என்னும் மன்னர் குலப் புலவர் ஒருவர் தோன்றினர். இவர் பரராசசேகர மன்னரின் மருகர். இவர் தோன்றிய சமயம் சைவசமயம்.

### கல்விப் பயிற்சி

இவர் மன்னர் குலத்தில் தோன்றியும் கல்வியிலே கருத்துச் செலுத்தினர். தம் மாமனுகிய பரராச சேகரரைப் போல் கல்வியிற் சிறந்து விளங்கவேண்டுமென்று பெருவிருப்புக்கொண்டார். அந்நாளில் பாண்டி மண்டலத்தில் ஆழ்வார் திருநகரியில் அட்டாவதானம் இராமாநுசக் கவிராயர் என்பவர் கல்வியறிவிற் சிறந்து விளங்கினர். அரசகேசரி ஆழ்வார் திருநகரியை அடைந்து இராமாநுசக் கவிராயரிடம் கல்வியை நன்கு கற்றார். சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, அகநானூறு, புறநானூறு முதலிய சங்கநூல்களையெல்லாம் ஐயந்திரிபறக்கற்று அவைகளிலெல்லாம் வல்லவரானர். வடமொழி வல்லாரிடத்தில் அம் மொழியையும் நன்கு கற்றுத் தேறினர்.

### நூல் இயற்றல்

காளிதாசரால் செய்யப்பெற்ற இரகு வமிசத்தைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடினர். இந்நூல் 2500

செய்யுட்களைக் கொண்டதாய்ச் சொன்னயம், பொருள் நயம், கற்பனாலங்காரம் முதலிய நூல் அழகுகளெல்லாம் அமையப்பெற்றுச் சிறந்து விளங்குகிறது. இந்நூலின்கண் திலீப மன்னன் காமதேனுவை வழிபட்டு மகனாக இரகு என்பவனைப் பெற்றகதையும், இரகுவின்கதையும், இரகு வின் மகனான அயன் கதையும், அவன் மகன் தசரதன் கதையும், தசரதன் மகன் இராமன் கதையும், இராமன் மகன் குசன் கதையும் பிறவும் சொல்லப்படுகின்றன. செய்யுட்கள் பல விடங்களில் அரிதிற் பொருள் உணரு மாறு விளங்கும். இந்நூல் திருவாரூரில் தியாகேசர் திரு முன்பு அரங்கேற்றஞ் செய்யப்பட்டதென்பர். அரசகேச ரியைப் பற்றிய பிற வரலாறுகள் விளக்கமாகவில்லை.

## ௪௯. சேந்தனார்

சேந்தனார் என்பவர் பட்டினத்தடிகள் இல்லறத்தில் இருந்தபோது பட்டினத்தடிகளின் தலைமை அலுவலாள ராக அமைந்திருந்தார். பட்டினத்தடிகள் துறவை மேற் கொண்டு சென்றபின் அரசன் பட்டினத்தடிகளின் செல் வத்தைக் கைப்பற்றிக் கொண்டு சேந்தனாரைப் பார்த்து, "பட்டினத்தாரின் செல்வம் அளவுகடந்தது என்று கேள் விப்பட்டிருக்கிறேன். அவருடைய பொருள்கள் இன்னும் எங்கெங்குள்ளன காண்பிப்பீராக," என்று சொல்லி வருத் தினான். சேந்தனார், "உள்ளன இவ்வளவுதான். மேற் கொண்டு நான் ஒன்றும் அறியேன்," என்றார்.

அரசன் சேந்தனார் உரைகளை நம்பவில்லை. அவரைச் சிறையில் அடைத்து வருத்தினான். சேந்தனாருடைய மனைவியும் ஒரே மைந்தனும் அரசனுடைய கொடுங்

கோலுக்கு அஞ்சினர். கூலிவேலை செய்து நாள் கழித்த னர். பட்டினத்தார் பல விடங்களினுஞ் சுற்றித் திரிந்து திருவெண்காட்டை யடைந்தார். சேந்தனுருடைய மனைவி யும் மைந்தனும் பட்டினத்தடிகளைக் கண்டு தொழுது வணங்கிக் கதறியழுதார்கள். அவர்களுடைய வருத்தத் தைக் கண்டு பட்டினத்தடிகள் உள்ளம் இரங்கினுர். "நீங் கள் யாவர்? உங்களுக்கு நேர்ந்த குறை யாது?" என்று உசாவினுர். அவர்கள் நிகழ்ந்ததைக் கூறினுர்கள். உடனே அடிகள் மனமிரங்கி,

"மத்தளை தயிருண்டானும் மலர்மிசை மன்னினுனும்
நித்தமுந் தேடிக்காணு நிமலனே அமல மூர்த்தி
செய்த்தலைக் கயல்பாய் நாங்கூர்ச் சேந்தற்கு வேந்தனிட்ட
கைத்தளை நீக்கி என்முன் காட்டுவெண் காட்டுளானே."

என்றொரு செய்யுளைப் பாடினுர். அவ்வளவில் இறைவன் கட்டளைப்படி ஆனைமுகக்கடவுள் சேந்தனுரின் விலங்கைத் தறித்துப் பட்டினத்தடிகளின் முன்னர் உய்த்தார். சேந்த னுர் பட்டினத்தடிகளை வணங்கினுர். பட்டினத்தடிகள் அவருக்கு அருள்புரிந்தார். "திருத்தில்லைக்குச் சென்று காட்டு விறகின் விலையினுல் அடியவர் ஒருவருக்கு அமு தருத்தி அங்கு உறைக," என்று கட்டளையிட்டார். சேந்த னுர் தில்லையை அடைந்து அடிகள் கட்டளைப்படியே நடந்து வந்தார்.

ஒருநாள் சோழமன்னன் தில்லைக் கூத்தப்பிரானுக் குச் சிறப்பான வழிபாடுகள் செய்து பூசை செய்விக்கப் போனுன். அப்போது விண்ணெலி ஒன்று, "நாம் இப் போதுதான் சேந்தனிட்ட களியை உண்டனம். உனது பூசையைச் சிறிதுபோது பொறுத்துச் செய்யலாம்," என்று எழுந்தது. மன்னன் அவ்வொலியைக் கேட்டான். சேந்தன் என்னும் அருந்தவன் யாவனே தெரியவில்லையே.

நாம் அவனை எப்போது கண்டு வணங்கப்போகிறோமோ என்று உள்ளம் வருந்தினன். "சேந்தன் என்னும் பெரியாரை எனக்குத் தெரிவிப்பவர்கட்கு நன்கொடை மிக வழங்குவேன்," என்று பறையறைவித்தான். வேற்றூரில் இருந்து தில்லைக்குள் நுழையும எல்லையில் ஆயம வசூலிக்கும் கணக்கன் ஒருவன், "சேந்தனை நான் அறிவேன்; நண்பகற்போதில் அவனைக் காட்டுகிறேன்," என்று கூறினன். அரசனும் மற்றையோரும சுங்கச் சாவடியில் திரண்டிருந்தனர்.

சேந்தனார் காட்டில் இருந்து விறகுவெட்டி மனைவிமக்களுடன் கட்டித்தூக்கிக்கொண்டு சுங்கச் சாவடியை நெருங்கினர். சாவடியில் கூட்டம் மிகுதியாக இருத்தலைக் கண்டு நம்மிடம் இருந்து தீர்வைப் பணத்தைப் பெற்றுக் கொண்டு உள்ளே விடுவதற்கு எவ்வளவு நேரம் ஆகுமோ தெரியவில்லையே என்று எண்ணமிட்டுக்கொண்டு வந்தார். சுங்கக்கணக்கன் முன்னால் வந்து சேந்தனாரை அரசனுக்குக் காட்டினன். அரசன் உடனே கீழே விழுந்து சேந்தனாரை வணங்கினன். சேந்தனார் மருண்டு ஒருபக்கமாக ஒதுங்கி நின்றார். கூடியிருந்த மக்கள் அரசனுக்குப் பித்து மிகுந்துவிட்டதோ என்று எண்ணமிட்டுக்கொண்டு நின்றார்கள். சேந்தனார் அரசனைப் பார்த்து, "அரசே உன்னால் சிறையிடப்பட்டு வருந்திக்கிடந்த என்னை நீ வணங்குவது முறைமை அன்று," என்று கூறினார். அரசன் சேந்தனாரைப் பார்த்து, "நீ கூத்தப்பிரானது திருவருட்குரியோன். உனது பெருமையை நான் உணர்ந்து கொண்டேன். எனது வழிபாட்டை ஏற்றுக்கொண்டு நீங்கள் இனிமேல் எனது அரண்மனையில் அமர்ந்திருத்தல் வேண்டும்," என்று கூறி வேண்டிக்கொண்டான். அரசனுடைய வேண்டுகோளுக்குச் சேந்தனார் இணங்கவில்லை.

மேலும் இறைவன் திருவடித்தொண்டைக் குடும்பத்துடன் செய்துகொண்டிருந்தார்.

மார்கழித் திருநாள் ஒன்றிலே தேர் ஓடாமல் தெருவிலே சேற்றில் தடைப்பட்டு நின்றது. அதனை இழுத்து நிலையிற் சேர்த்தற்கு அரசன் பெருமுயற்சி செய்தான். கூத்தப்பிரான் சேந்தனாரது பெருமையை இப்பொழுதும் வெளிப்படுத்த எண்ணினார். அவர் விண்ணொலியாக "சேந்தா நீ தேர் நிலைக்கு வருமாறு பல்லாண்டு பாடுக," என்று திருவாய் மலர்ந்தருளினார். உடனே சேந்தனார் திருப்பல்லாண்டு பாடத் தொடங்கினார். கூத்தப்பிரான் திருவருளால் செய்யுள் பாடும் ஆற்றலும் சேந்தனார்க்கு உண்டாயிற்று.

"மன்னுக தில்லை வளர்கநம் பத்தர்கள்
வஞ்சகர் போயகலப்
பொன்னின்செய் மண்டபத் துள்ளே புகுந்து
புவனியெல்லாம் விளங்க,
அன்னநடை மடவாள் உமைகோன்
அடியோமுக் கருள்புரிந்து
பின்னைப் பிறவி அறுக்க நெறிதந்த
பித்தர்க்குப் பல்லாண்டு கூறுதுமே."

என்று தொடங்கித் திருப்பல்லாண்டு பாடியருளினார். உடனே எல்லோரும் மனங்களிக்கும்படி தேர்விரைந்து சென்று நிலையை அடைந்தது. மக்கள் சேந்தனாரின் பெருமையை நன்கு உணர்ந்து போற்றி வழிபட்டார்கள். சேந்தனால் இயற்றப்பெற்றவைகள் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருவிடைக்கழி முருகர் பதிகம் முதலியவைகள். இவைகள் ஒன்பதாந் திருமுறையிலே சேர்க்கப்பெற்றுள்ளன. சேந்தனார் கூத்தப்பிரான் திருவடிகளைப் போற்றி வழிபட்டுக்கொண்டிருந்து வீடுபேற்றை யடைந்தார்.

---

## ௬௦. தலைமலைகண்ட தேவர்

தலைமலைகண்ட தேவர் என்பவர் மறவர் குலத்திலே தோன்றினார். முற்பிறப்பின் நல்வினையினால் நல்லறிவு மிக்கவராய் விளங்கியிருந்தார். அவருடைய குலத்தொழில் போர் செய்தல். ஆயினும் தலைமலைகண்ட தேவர் குலத் தொழிலில் ஈடுபடாமல் நல்லொழுக்கத்தில் நிலைத்து நின்றார். இளமை முதற்கொண்டே நல்லவர்களுடைய கூட்டுறவும் சிவபெருமானுடைய திருவடிகளிடத்திலே நிறைந்த அன்பும் தலைமலைகண்ட தேவரிடத்திலே பொருந்தியிருந்தன. செய்யுள் பாடுந்திறனும் தலைமலைகண்ட தேவரிடம் நன்கு அமைந்திருந்தது.

தலைமலைகண்ட தேவரின் மனைவியொடு பிறந்தவர்கள் ஏழுபேர். அவர்கள் போர்புரிதல் வேட்டையாடுதல் கன்னம்வைத்துக் களவுசெய்தல் முதலிய மறக்குலத் தொழிலை மேற்கொண்டு காலங்கழித்திருந்தார்கள். தலைமலைகண்ட தேவர் அவர்களைப்போல் தொழில் பழகாமல் ஏடுங் கையுமாக இருந்தமையால், வறுமையால் பீடிக்கப் பட்டார். தேவரின் மனைவியோ கணவன் குலத்தொழிலில் புகாமையைக் கண்டு உள்ளம் வருந்தினாள். தேவர் தம் மனைவியைப் பார்த்து, "நம்மை இறைவன் காப்பாற்றுவான். இந்த வறுமையைக்கண்டு உள்ளம் வருந்தாதே," என்று ஆறுதல் உரைகள் கூறினார். ஆனால், தேவரின் மனைவிக்கு மனநிறைவு உண்டாகவில்லை. கணவனும் தன் உடன் பிறந்தார்களோடு களவிற்குச் செல்லவேண்டும் என்று எண்ணினாள். தன் விருப்பத்தைக் கணவனிடமுந் தெரிவித்தாள். தேவரோ களவுக்குச் செல்ல விரும்பவில்லை. நாள்தோறும் வறுமையின் கொடுமை மிகுந்து வந்தது. மனைவியின் தொல்லையோ வளர்ந்தது. தன்னுடன்

பிறந்தாரின் மனைவிமார்கள் உதவுவதைக் கொண்டே குடும்பம் நடத்திய அம் மாது ஒருநாள் தன் கணவனையும் தன்னுடன் பிறந்தார்களோடு களவுக்குச் செல்லுமாறு மிகவும் வற்புறுத்தினாள். அக் காலை தலைமலைகண்ட தேவர் இறைவன்மீது யமகவந்தாதி ஒன்று பாடி முடித்திருந்தார். அவ்வந்தாதி திருக்கடவூர்ச் சிவபெருமான்மேல் இயற்றப் பெற்றது. மனைவியின் தொல்லையையும் வறுமையின் கொடுமையையும் பொறுக்காத தேவர், ஒருநாள் தாமும் தம் மைத்துனன்மார்களோடு களவுக்குச் செல்ல இணங்கினார். தேவரின் மனைவி அச் செய்தியைத் தன்னுடன் பிறந்தவர்களுக்குத் தெரியப்படுத்தித் தன் கணவனையும் உடனழைத்துச் செல்லுமாறு கேட்டுக்கொண்டாள். அவர்களும் அதற்கு இணங்கினார்கள்.

காரிருள் மிக்க ஓர் இரவிலே தலைமலைகண்ட தேவர் தம் மைத்துனன்மார்களோடு களவுக்குப் புறப்பட்டார். அவருடைய உள்ளமோ சிவபெருமானுடைய திருவடிகளின்மேற் பதிந்திருந்தது. தலைமலைகண்ட தேவரின் மைத்துனர் ஏழுபேரும் தலைமலைகண்ட தேவரையும் உடன் அழைத்துக்கொண்டு திருப்புவனம் என்னும் ஊரில் ஒரு பெருஞ் செல்வன் வீட்டிற்குச் சென்றனர். அவ் வீட்டுக்காரன் பொருட்செல்வத்தோடு கல்விச் செல்வத்தையும் குறைவறப் பெற்றவன். ஒவ்வொருநாளும் இரவில் உறங்கத் தொடங்கும்போது சிவபெருமான்மீது ஒரு செய்யுள் பாடிவிட்டுத்தான் உறங்குவது என்னும் உறுதி படைத்தவன். தலைமலைகண்ட தேவரின் மைத்துனர்கள் பொருளறைக்கு நேரே கன்னக் கோலால் வழியுண்டாக்கினர். ஒருவன் தலைமலைகண்ட தேவரையும் உடனழைத்துக்கொண்டு உள்ளே நுழைந்தான். அன்று அந்த வீட்டுக்காரன் வழக்கம்போல் பாடத் தொடங்கினான்.

" தலையில் இரந்துண்பான் தன்னுடலிற் பாதி
மலைமகளுக் கீந்து மகிழ்ந்தான்—உலையில் "

என்று அரை வெண்பாவைப் பாடினன். அதற்குமேல் அப் பாட்டை எப்படிப் பாடிமுடிப்பதென்று அவனுக்கு விளங்கவில்லை, நள்ளிரவு வரையில், " உலையில் உலையில்," என்று சொல்லிக்கொண்டே இருந்தான். உள்ளே களவு செய்ய நுழைந்த இருவரும சிறிதுபோது காத்திருந்தனர். பாட்டின் பிற்பகுதியை அமைக்க வேண்டிய விதம் தலைமலை கண்ட தேவருக்கு நன்கு விளங்கிவிட்டது. அவர் தாம் இருக்கும் இடத்தையும் மறந்தார், " இருப்புவண மேனியனே என்றாலோ........" என்று கூறினர். உடனே செல்வன்,........ஆமாம் திருப்புவனத் தீசன் திறம்...." என்று பாட்டை முடித்தான். தலைமலைகண்ட தேவரோடு உள் நுழைந்திருந்தவன் தலைமலைகண்ட தேவரின் செயலைக் கண்டதும் அஞ்சி எழுந்து வெளியே ஓடிப்போனன். செல்வனல் தொடங்கப்பெற்ற பாடல் :

" தலையில் இரந்துண்பான் தன்னுடலிற் பாதி
மலைமகளுக் கீந்து மகிழ்ந்தான்—உலையில்
இருப்புவண மேனியனே என்றாலோ ஆமாம்
திருப்புவனத் தீசன் திறம்."

என்று அமைந்ததைக் கண்டதும் மகிழ்ச்சியடைந்த செல்வன் எழுந்து தேடிப்பார்த்தான். தலைமலைகண்ட தேவரைக் கண்டான். அவரைப் புகழ்ந்து போற்றினன். " தாங்கள் யார் ? இந்நேரத்தில் இங்குவரக் காரணம் யாது ?" என்று உசாவினன்.

தலைமலைகண்ட தேவர் தாம் ஒரு கள்வன் என்றும், களவு செய்தற்பொருட்டு வந்ததாகவும் கூறினர். தேவரின் சைவக்கோலத்தையும் முகத்தோற்றத்தையுங் கண்ட செல்வன் தேவரின் மொழியை நம்பவில்லை. மேலும்

வற்புறுத்திக் கேட்டான். தேவர் தம் வறுமையின் கொடுமையையும் மனைவியின் தொல்லையையும் பொறுக்காமல் களவுக்கு வந்ததை விவரமாகச் சொன்னார்.

செல்வன், தன்னுடைய பொருளில் வேண்டிய அளவு அள்ளி மூட்டைகட்டிச் செல்லுமாறு பணித்தான். தேவரும் அவ்வாறே கட்டிச் சென்றார். அன்றுமுதல் அவருடைய வறுமை தொலைந்தது. தேவரின் மைத்துனர்கள் நிகழ்ந்ததை அறிந்தார்கள். தாமும் அன்றுமுதல் கொலை களவு முதலியவைகளை நீக்கி நல்லவர்களாகி ஒழுகத் தொடங்கினார்கள்.

---

## கக. வசைகவியாண்டான் புலவர்

பாண்டி நாட்டிலே ஒட்டப்பிடாரம் என்னும் ஊரிலே வசைகவியாண்டான் புலவர் தோன்றினார். அவருக்கு இடப்பெற்ற பிள்ளைப்பெயர் ஆண்டான் என்பது. ஆண்டானுடைய சமயம் வைணவம் என்ப. குலம் அந்தணர் குலம். ஆண்டானுடைய தந்தையின் பெயர் வைகுந்தநாதன்.

ஆண்டானுக்கு அகவை ஐந்து ஆனதும் அவனுடைய பெற்றோர் அவனைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பினர். ஆண்டான் கல்வி பயிலச் சென்ற பள்ளிக்கூடம் திண்ணைப் பள்ளிக்கூடம். உபாத்தியாயரோ மாணவர்கட்குக் கடுமையான தண்டனைகள் விதிப்பவராகவும் மிகக் கொடியவராகவும் இருந்தார். ஆகவே, ஆண்டான் பள்ளிக்கூடத்தைக் கொல்லுங் கொலைக்கூடமாக எண்ணினான். பள்ளிக்குப் போகாமல் ஏய்க்கத் தொடங்கினான். அகவை ஐந்திரட்டியாகியது.

ஒருநாள் ஒரு சித்தர் ஆண்டானுக்கு முன்தோன்றி ஞர். ஆண்டானை உற்றுப்பார்த்தார். ஆண்டானுக்கு அருளுரை வழங்க எண்ணிஞர். காளியின் அருமறையை ஆண்டானுடைய காதுகளிலே உரைத்து, "இதனை நன்ருக உருவேற்றுவாயாகில் உனக்கு நல்ல பயன்கள் ஏற்படும்," என்று கூறிச்சென்றுர்.

வெளியிலே சுற்றித்திரிந்தால் பள்ளி மாணவர்கள் பற்றிச் சென்று பள்ளியிற் சேர்ப்பர் என்று அஞ்சிய ஆண்டான், அவ்வூர்க் காளிகோயிலில் காளிக்குப்பின் பதுங்கியிருந்து அருமறையை உருவேற்றிஞன். நாட்கள் பல சென்றன. ஒருநாள் காளி ஆண்டானுக்கு முன் தோன்றிஞள். "உனக்கு இசைபாடும் வரம் வேண்டுமா? அல்லது வசைபாடும் வரம் வேண்டுமா? இரண்டில் ஏதாவது ஒன்றினைக் கேள். அவ்வாறே கொடுக்கிறேன்," என்று திருவாய் மலர்ந்தருளிஞள். வினைவழிப்பட்ட ஆண்டான், "எனக்கு வசைபாடும் வரந்தான் வேண்டும்; அதனையே அருள்வாயாக!" என்றுன். உடனே காளி தேவி வேப்பிலையின் ஈர்க்கு ஒன்றிஞல் வல்லெழுத் தொன்றை ஆண்டானுடைய நாவில் எழுதி," உன்னுடைய வாக்கில் இருந்து பிறக்கும் மொழிகள் பிறந்தவாறே பலிக்குமே யல்லாமல் ஒன்றும் பொய்க்காது," என்று கூறி மறைந்தாள்.

ஆண்டான் காளிதேவியின் வரத்தை ஆராய்ந்து பார்க்கத் தொடங்கிஞன். காளி உருவச்சிலையின் ஒரு கொங்கை அற்று விழவேண்டுமென்றும் கோவிலுக்கு முன்ஞல் அமைக்கப்பட்டிருந்த கீற்றுக் கொட்டகை தீப் பற்றியெரிய வேண்டும் என்றும் ஒரு செய்யுள் பாடிஞன். உடனே சிலையின் கொங்கை அற்று விழுந்ததுடன் கொட்டகையுந் தீப்பற்றி எரிந்து தொலைந்தது.

காளி கொடுத்த வரத்தைக் கொண்டு அவளுக்கே தீமையை உண்டாக்கிய ஆண்டான் அச்சம் முழுவதையும் விட்டான். அவனுடைய குணம் கோரகுணமாக மாறியது. மறுநாள் காலையில் ஆண்டான் எழுந்து தெருவிற்போய் விளையாடினான். ஆண்டானைத் தெருவிற்கண்ட பள்ளி யாசிரியர் அவனைப் பிடித்து வருமாறு சிறுவர்களை அனுப் பினார். சிறுவர்கள் ஆண்டானைக் கட்டியிழுத்துச் சென்று ஆசிரியர் முன்பு நிறுத்தினார்கள். ஆசிரியர் ஆண்டானை அடித்துத் தண்டனைகள் விதிக்கத் தொடங்கினார். ஆசிரியர் செயல் அவருக்கு நமனாக முடிந்தது.

"கூலியீந்தனன் குறைத்திலன் படித்திலன் கொடிய
கோலி லங்குகை வாத்தியான் கொண்டபெண் டாட்டி
தாலி யற்றிடும் படிவரந் தாடி ........"

என்று வசைகவியை ஆண்டான் பாடத் தொடங்கினான். பாட்டு முடியுமுன்பே ஆசிரியன் தலை படீரெனப் பிளந்தது. அவர் கீழே விழுந்து மாண்டார்.

அந்த உபாத்தியாயருக்குச் சடகோபன் என்னும் பெயருடைய மகன் ஒருவன் இருந்தான். அவன் தன் தந்தைக்கு நேர்ந்த கதியைக் கண்டு உள்ளங் கலங்கினான். ஆண்டான் அடிகளிலே விழுந்து புரண்டு கதறினான். அவனுடைய துன்பநிலைக்கு இரங்கிய ஆண்டான், "நான் உன்னைக் காப்பாற்றுகிறேன் அஞ்சாதே," என்று தேறுதல் மொழிகள் கூறினான்.

ஆண்டானுடைய தன்மையை உணர்ந்த செல்வர்கள் மிகுந்த அச்சங் கொண்டனர். ஆண்டானுக்குப் பொருள் சிவிகை முதலியவைகளை வழங்கினர். பொருள்களை யெல்லாம் ஆண்டான் சடகோபனுக்கே வழங்கினான். தன்மாட்டுச் சிறு பிழை புரிவார் மீதும் ஆண்டான் வசை

கவியை விசையுடன் வீசினன். உயிர்மீது நசையுடைய எவரும் வசைகவிவாணனுக்குத் தவறு செய்யத் துணிய வில்லை.

ஒருகால் ஆண்டான் வெற்றிலைத் தோட்டம் ஒன்றின் வழியாகச் சென்றான். சிறிது வெற்றிலை கொடுக்குமாறு தோட்டக்காரனிடம் கேட்டான். ஆண்டான் தன்மையை அறியாத அவன் "கொடுக்கமாட்டேன்" என்றான். அதனாற் சினங்கொண்ட ஆண்டான் வசைகவி ஒன்றைப் பாடி அவ் வெற்றிலைத்தோட்டம் கரிந்து ஒழிந்து போகும்படியாகச் செய்தான்.

திருமணம் நடந்துகொண்டிருந்த வீடு ஒன்றிற்கு ஆண்டான் சென்றான். அங்கிருந்தவர்கள் ஆண்டானை மதிக்கவில்லை. தவறுஞ் செய்தார்கள். ஆண்டான் மண வீட்டைப் பிணவீடாக்கி வேற்றிடஞ் சென்றான்.

ஒருசமயம் நாட்டில் பஞ்சம் ஏற்பட்டது. மக்கள் உணவுக்குத் திண்டாடினர். ஆண்டான் மலையாள நாட்டு மன்னனிடஞ் சென்று ஏதேனும் பெற்றுவரலாம் என்னும் எண்ணத்துடன் புறப்பட்டான். பாண்டி நாட்டைக் கடந்து நாஞ்சில் நாட்டை அடைந்தான். ஒற்றர்கள் சிலர் இச் செய்தியை உணர்ந்தனர். விரைந்து மன்னனிடஞ் சென்று, "வசைகவி யாண்டான் என்னும் விடத்தினுங் கொடியவன் வருகிறான். அவன் வாக்கால் ஏதேனும் பாடத் தொடங்கினால் நமக்கு அழிவு நேர்தல் திண்ணம்," என்று செப்பினர். கேரளமன்னன் இதனைக் கேட்டு அஞ்சி நடு நடுங்கினன். தன்னுடைய முதலமைச்சனைப் பார்த்து, "நீ அந்த வசைகவி யாண்டான்பாற் சென்று, 'தாங்கள் யாது செய்யக் கட்டளையிட்டாலும் அவ்வாறே செய்யக் காத்திருக்கிறோம். எங்கள்மீது வசைகவி பாடாமல்

செல்லவேண்டும்' எனறு வேண்டிக்கொள்,'' என்று சொல்லியனுப்பினன். முதலமைச்சனும் அவ்வாறே சென்று ஆண்டானைக்கண்டு வேண்டிக் கொண்டான். ஆண்டான் முதலமைச்சனைப் பார்த்துத், "திங்கள் தோறும் ஒவ்வொரு பாரஞ் சர்க்கரை ஒட்டப்பிடாரத்திற்கு அனுப்ப வேண்டியது,'' என்று கட்டளையிட்டுவிட்டுத் திரும்பினன்.

"அக்கணமாங் கவன்நடுங்கி முதலமைச்சன்
தனைஏவி ஐய நீயிங்கு
எக்கடமை விதித்தாலும் செய்கின்றேம்
எம்மிறைவர்க் கெதிர்வா ராமல்
மெய்க்கவியொன் றும்பகரா தேகுகெனப்
பணிந்துமிக வேண்டச் செய்தான்
சர்க்கரையோர் பாரம்மதி தோறும் அனுப்
புதிர்எனுஞ்சொல் சாற்றிப் போனன்.''

திங்கள்தோறும் மலையாள மன்னனிடம் இருந்து ஒவ்வொரு பாரம் சர்க்கரை வந்துகொண்டிருந்தது. ஆண்டான் அந்தச் சர்க்கரையைப் பலருக்கும் வழங்கிக் கொண்டிருந்தான். ஆண்டானுடைய தந்தை வைகுந்த நாதன் ஒருநாள் பல தடவை, "சர்க்கரை கொடு; சர்க்கரை கொடு,'' என்று கேட்டுத் தொந்தரவு செய்தான். ஆண்டானுக்குச் சினமுண்டாகியது.

"நக்கவரி சித்தவிடோ ருடுப்பதற்குத்
துணியுமின்றி நாட்டில் உள்ளோர்
ஒக்கவருந் திடும்பஞ்ச காலத்தில்
சிறிதேனும் உணர்வி லாமல்
சர்க்கரைசர்க் கரையென்றே
சிணுங்குதற்குத் தலைப்பட்டாய்.''

என்று பாடத்தொடங்கினன். அக்கணமே வைகுந்த நாதனது தலை திடீரென்று வெடித்தது. அவன் மாண்டு

முடிந்தான். தன் தந்தையினுடைய தலை தன் பாட்டினால் வெடித்ததைக் கண்ட ஆண்டான் உள்ளம் வருந்தினான். ஆண்டானது செயலைக் கண்டவர்கள் அனைவரும் அவனை வெறுத்தார்கள்.

ஆண்டான் வாழ்ந்திருந்த அந்தணத் தெருவில் இருந்த பைந்தொடி யொருத்தி கன்றுக்குச் சிறிதும் பால் விடாமல் நாள்தோறும் பால் கறந்தபடியினால் கன்று காலியாகியது. இச்செய்தியை உணர்ந்த ஆண்டான் அந்த படமாதுமீது வசைபுராணம் ஒன்று பாடினான்.

ஆண்டானது நன்செய் நிலத்தை அளந்தறிவதற்காக அந்த ஊர்க் கணக்கப்பிள்ளை வந்து அளக்கத் தொடங்கினான். கணக்கனுக்கும் ஆண்டானுக்கும் பிணக்கு நேர்ந்தது. அந்தக் கணக்கப்பிள்ளையின் கையிற் பாம்பு கடிக்குமாறு ஆண்டான் வசைகவி ஒன்று பாடினான். எங்கிருந்தோ பாம்பு ஒன்று வந்து ஆண்டானுடைய கையிற் கடித்துவிட்டது. ஆயினும் அந்தக் கணக்கப்பிள்ளை சிறிதும் அஞ்சவில்லை. கத்தியால் பாம்பு கடித்த விரலை அறுத்தெறிந்துவிட்டு வீட்டிற்குப்போய் உயிரோடிருந்தான். ஆயினும் ஆண்டான், அந்தக் கணக்கனை அந்தகன் உலகினுக்கு அனுப்பியே தீர்வதென்று முடிவுசெய்து காளிமடல் என்னும் நூலைப்பாடி அவனைக்கொன்றே தீர்த்தான்.

சிந்துக்களஞ்சியப் புலவன் என்பவன் ஒருவன் அந்நாளில் வண்ணங்கள் சிந்துகள் முதலியவைகளைப் பாடுவதில் புகழ்பெற்றவனாய் விளங்கியிருந்தான். அவன் ஒட்டப் பிடாரத்திற்குத் திக்குவிசயஞ் செய்துகொண்டு வந்து சேர்ந்தான். அவன் புலவர்களிடமெல்லாம் திறை வாங்கும் பெரும்புலவனாகப் புலவரேறாகத் திகழ்ந்துகொண்டிருந்தான். ஆண்டானையும் அடக்கித் திறைபெறவேண்டு

மென்பது அவனுடைய எண்ணம். சிவிகையில் இவர்ந்து வந்த அவன் திண்டு மெத்தை முதலியவைகளைப் போட்டுப் பேராரவத்தோடு அமர்ந்திருந்தான். சில புலவர்கள் ஆண்டானிடஞ் சென்று சிந்துக்களஞ்சியப் புலவனின் செருக்கை அடக்கவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர் ஆண்டான் தன்னுடைய கையில் ஒரு தேங்காயை எடுத்துக்கொண்டு சிந்துக்களஞ்சியப் புலவன்பாற் சென்றான். அப்புலவன் அமர்ந்திருந்த இருக்கையில் தானே ஆண்டானும் அமர்ந்து திண்டில் சாய்ந்தான். ஆண்டான் செயல் சிந்துக்களஞ்சியப் புலவனுக்குச் சினத்தை உண்டாக்கியது. அவன் ஆண்டானைச் சினத்துடன் பார்த்து, "என்போல் நீ சிந்து பாட வல்லையோ?" என்று உசாவினான். ஆண்டான் தான் கொண்டுபோன தேங்காயை அப்புலவன் முன்பு வைத்துத், "துண்டு துண்டு துண்டு துண்டு" என்று அடுக்கொலிச்சொல் சிலவற்றைக் கூறினான். ஆண்டான் கூறிய அத்தனை துண்டுகளாக அத்தேங்காய் தானாகவே உடைந்து சிதறியது. ஆண்டான் அத் தேங்காயைப் புலவனுக்குச் சுட்டிக்காட்டி, "இவ்வாறு பாட்டினால் உன்னுடைய தலையையும் உடைக்க வல்லேன். நீயும் இவ்வாறு செய்யவல்லையா?" என்று உசாவினான். சிந்துக்களஞ்சியப் புலவனைப் பேரச்சம் சூழ்ந்துகொண்டது. அவன் ஆண்டானை வணங்கி, "என்னை ஒன்றுஞ் செய்யாதே. நான் தோற்றேன்," என்று கூறி வந்தவழியே ஓடிப்போனான்.

ஆண்டான் ஒருநாள் எண்ணமிட்டான் "நாம் பலருடைய உயிருக்கு நமனாக இருந்தோம். சேதுக்குப் போய்க் கடலில் மூழ்கித் தீவினையைப் போக்கிக்கொள்ள வேண்டும்," என்று முடிவுசெய்தான். தான் மிக விருப்பத்துடன் நேசித்திருந்த ஒருமாதைத் தனியே விட்டுச் செல்லுதற்கு ஆண்டானுக்கு மனமில்லை. ஆகவே அவன்,

"சேதுக்குப் போய்நான் திரும்பும் அளவும்இந்த
மாதுக்குக் காவல் வயிரனும் மாடனுமே"

என்று சொல்லிவிட்டுச் சென்றான். அன்றுமுதல் அந்த மாது குடியிருக்கும் வீட்டுப்பக்கம் செல்லும் ஆடவர் உடனே குருதியைக் கக்கி மாண்டொழியத் தொடங்கினார்கள். இச்செயலைக் கண்டோர், "ஆண்டான் செயல் புலி ஏகாதசி விரதம் பிடித்தாற்போல் இருக்கிறது," என்று கூறினார்கள். திரும்பி ஊர் வந்து சேர்ந்த ஆண்டான் தான் ஊரில் இல்லாத சமயத்தில் நிகழ்ந்ததை அறிந்து உள்ளம் வருந்தினான்.

வசைகவியாண்டான் திருச்செந்தூருக்குச் சென்றான். முருகக்கடவுள்மீது செய்யுள் இயற்றத்தொடங்கினான். பழக்க வாசனையினால் வசைதான் வந்தது.

"மைச்சேலுண் கண்ணொருத்தி மாதவிடாய்க் காரியவள்
மாட்டுச் சென்று
கைச் சேட்டை செய்தகந்தா.. ..."

என்று பாடத் தொடங்கினான். அவ்வளவில் அசரீரி, "அடடா! போதும். இந்த மட்டில் நீ நிறுத்தவில்லையானால் இன்று உன்னுடைய உயிர்க்கு முடிவுவரும். நீ இனிமேல் இந்த உலகத்தில் பலருக்கும் நமனாக இருக்க மாட்டாய். மிகு விரைவில் விண்ணுலகஞ் செல்வாய்," என்று ஒலித்தது. இதனைக்கேட்ட ஆண்டான் எப் பதியிலும் நாம் இத்தகைய புதுமையைக் கண்டதில்லையே என்று வியப்படைந்து நாணி அவ்வூரைவிட்டுப் புறப்பட்டான்.

வழி நடந்து வேற்றூர் செல்லும்போது அவனுடைய நாவில் கொடிய புண் உண்டாயிற்று. ஆண்டான், "அந்தோ நாம் தீவழியிற் சென்று தொல்லையைத் தேடிக் கொண்டோம்," என்று உள்ளம் வருந்தினான். ஓர் ஊரில்

நோயாக ஓரிடத்தில் வீழ்ந்துவிட்டான். ஆண்டானுடைய தன்மையை உணர்ந்த எவரும் அவனை நெருங்கவில்லை. அவன் உயிர்விடும்போது ஒரு பெண், "நான் இனி எங்கு செல்வேன்," என்று கூறிக்கொண்டு அவனிடமிருந்து குதித்தோடினளாம்.

---

## கஉ. நந்திக்கலம்பக ஆசிரியர்

*நந்தி*

தென்பாண்டி நாட்டிலே நெல்லை மாவட்டத்தில் பாண்டிய மன்னர்கள் காலத்தில் சிற்றரசன் ஒருவன் வாழ்ந்திருந்தான். அவன் பாண்டியனுக்கடங்கிக் கப்பம் கட்டுபவன். அவனுக்கு மனைவியும் நான்கு புதல்வர்களும் இருந்தனர். அரசன் வாழ்ந்திருந்த ஊரின் சேரியில் இழி குலத்தில், மாதொருத்தி நால்வகைப் பெண்களில் பது மினியாகத் தோன்றினள். அந்த மாதின் எழில் அரசனை மயக்கியது. அவன் அவளை மணந்து இன்பந் துய்த்தான். அவளைத் தீண்டும்பொழுதெல்லாம் தீட்டுக்கழிதற்கேற்ற கழுவாயைச் செய்த பின்னரே அரண்மனையில் நுழைவான். ஆயினும் தக்கோர்கள் அரசனது செயலை வெறுத்தனர். அந்த இழிகுல மாதினிடம் மைந்தன் ஒருவன் தோன்றி னன். அரசன் அந்த மைந்தனுக்கு நந்தி என்று பெயர் சூட்டினன். அப்புதல்வன் கல்விகற்று அறிவுடையவனாக விளங்கினன்.

*கடனும் சூழ்ச்சியும்*

அந்நாளில் செட்டியொருவன் விலையுயர்ந்த ஆடை யொன்றை விலை கூறிக்கொண்டு தெருவழியே சென்றான்.

நந்தி செட்டியை அழைத்தான். ஆடையின் விலை யாது என்று உசாவினான். அதற்குச் செட்டி, "இவ்வாடையின் விலையைக் கேட்டு அரசனே திகைத்துப்போனான். அவனாலும் வாங்கமுடியவில்லை. அவ்வாறாக நீ விலையைக் கேட்டு யாது செய்யப்போகிறாய்?" என்றான். "மூன்றாண்டிற்குப்பின் வட்டியும் முதலுமாக விலையைத் தருகிறேன். இவ்வாடையைத் தந்துவிட்டுச் சீட்டெழுதி வாங்கிச்செல்," என்றான் நந்தி. அரசனின் மகன் நந்தி என்பதை உணர்ந்த செட்டி விலையை வசூலித்துவிடலாம் என்னும் துணிவுடன் சீட்டெழுதிப் பெற்றுக்கொண்டு ஆடையைத் தந்து சென்றான். நந்தி அந்த ஆடையைத் தாயிடம் கொடுத்தான். அவள் அதனை அணிந்துகொண்டாள். அன்றிரவு அரசன் வந்தான்; ஆடையைப் பார்த்தான். "இஃதெவ்வாறு உனக்குக் கிடைத்தது?" என்று கேட்டான். மகன் வாங்கித் தந்தான் என்றாள் மாது. அரசன் நந்தியை அழைத்து நிகழ்ந்ததை அறிந்தான். "மூன்றாண்டிற்குப் பிறகு விலையை எவ்வாறு கொடுப்பாய்?" என்று உசாவினான். "திருவருள் எவ்வாறு வழிகாட்டுமோ தெரியவில்லை," என்று நந்தி பதிலுரைத்தான். நாட்கள் பல சென்றன. அரசன் திடீரென்று இறந்தான்.

நந்தி வாள் ஒன்றைக் கையிலேந்திக்கொண்டு தன் முன்னவர்கள்பாற் சென்றான். "நீங்கள் நான்குபேர், நானே ஒருவன். சத்திரியமாதின் வயிற்றில் பிறந்த நீங்கள் முடி சூடுவதாயின் என்னை வென்று முடி சூடுங்கள்," என்று கூறிப் போர்புரிவதற்கு அறை கூவினான். அரசனுடைய மக்கள் நால்வரும் அஞ்சினர். அந்த ஊரை விட்டே ஓடிப்போனார்கள். நந்தி அரியணை யேறினான். மறையவர்களும் பிறரும் நந்தியின் ஆட்சிக்கீழ் இருந்தால் தாழ்ச்சி வரும் என்று வேற்றிடங்களுக்குச் சென்றுவிட்

டார்கள். நந்தியின் செயலைக் கண்டவர்கள் வியப்படைந்திருந்தார்கள். நந்தி மேலும் வியக்கத்தக்க செயல்களைச் செய்யத்தொடங்கினான். பொன்னாலாகிய காசுகளையெல்லாம் மாற்றிவிட்டுக் காசுகளையெல்லாம் தோலால் அமைத்தான். நந்தியின் ஆட்சியில் தோல் காசுகள் வழங்கின; பாண்டிய மன்னனுக்குத் தரவேண்டிய கப்பத்தை நெல்லாகக் கொடுத்துவிட்டான். நந்தியிடம் சீட்டெழுதி வாங்கிய செட்டி வந்தான். அவனுக்குச் சேரவேண்டிய பொருள் முழுவதையும் தோற்காசாகவே தந்தான். செட்டியோ அந்தத் தோல் காசுகளையெல்லாம் நந்தியின் நாட்டிலேயே கொடுத்துவிட்டுத் தனக்கு வேண்டிய பொருள்களை வாங்கிக்கொண்டு போய்விட்டான். செட்டியின் கடன் தீர்ந்தபின் மீண்டும் பழைமைபோற் பொற்காசுகளே வழங்கச்செய்தான்.

உடன்பிறந்தார் சூழ்ச்சி

நந்திக்கு அஞ்சி ஓடிய நால்வரும் ஊர் ஊராக அலைந்து திரிந்தார்கள். முடிவில் அவர்கள் நந்தியை வென்று எவ்வாறேனும் அரசாட்சியைக் கைப்பற்றுவதென்று முடிவுசெய்தார்கள். ஒருவன் மந்திரவாத வித்தைகளில் சிறந்தவனானான். ஒருவன் வாட்போரில் கெட்டிக்காரனானான். ஒருவன் தந்திர வித்தைகளில் தேர்ச்சி பெற்றான். மற்றொருவனோ தமிழ்நூல்களை நன்கு கற்றுத் தமிழ்ப்புலன் ஆகி வசைபாடுவதில் கைதேர்ந்தவனானான். பிறகு எந்தவழியில் நந்தியைத் தொலைத்து நாட்டைக் கைப்பற்றலாம் என்று நால்வரும் கலந்தெண்ணினர். வசை பாடி நந்தியைத் தொலைப்பது தான் தக்கது என்று முடிவாகியது.

தமிழ்ப்புலவனானவன் நந்திக்கலம்பகம் என்னும் பெயரோடு நந்தியின்மீது கலம்பகம் ஒன்றைப் பாடினான்.

அதில் அறம் வைத்துப்பாடினன். அந்த அறம் நந்தியின் உயிரை விரைந்து போக்கத்தக்கதாக அமைந்திருந்தது. நால்வரும் நந்தியின் அரண்மனை வாயிலை அடைந்தார்கள். தங்கள் வருகையை நந்திக்குத் தெரியப்படுத்தினர்கள். நந்தி நால்வரையும் அழைத்து வழிபாடுகள் செய்தான். கலம்பகம் இயற்றியோன், "தங்கள் மீது கலம்பகம் ஒன்று இயற்றியுள்ளேன், தாங்கள் அதனைக் கேட்க வேண்டும்," என்றான். நந்தி தன் அவைப்புலவர்களை, "அக்கலம்பகம் எவ்வாறிருக்கிறது? படித்துப்பாருங் கள்," என்றான். அவர்கள் படித்துப் பார்த்தார்கள். "இந்தக் கலம்பகப் பாடலைக் கேட்டால் எமன் உலகடை வது திண்ணம். ஆனல், கலம்பகம் அருமையாக இருக் கிறது," என்றார்கள். நந்தி நமக்கு இத்தகைய பகைவர் யாராக இருத்தல் கூடும் என்று எண்ணினன். அவர்கள் தன்னுடன் பிறந்தார்களே என்பது நந்திக்கு அப்பொழுது தான் விளங்கியது. நாம் இறந்தாலும் சரி. இதுவரையில் அரசாண்டது போதும் இப் பனுவலைக் கேட்போம் என்று முடிவுசெய்தான். அமைச்சர் முதலியோர் கேட்கக் கூடாது என்று எவ்வளவோ கூறித்தடுத்ததையும் அரசன் பொருட்படுத்தவில்லை. "நீங்கள் கலம்பகத்தைப் படியுங் கள்," என்றான்.

### கலம்பகத்தால் முடிவு

கலம்பகம் இயற்றிய புலவன், "அதனை இங்கிருந்து கேட்டல் கூடாது; இடுகாட்டிலே சிதையடுக்கிச் சிதை யின்மீது படுத்துக்கொண்டு கேட்கவேண்டும்," என்றான். நந்தி இடுகாட்டிலே சிதை அடுக்கச்சொன்னன். அவ்வாறே சிதை அடுக்கப்பட்டது. அமைச்சர் புலவர் முதலியோ ருடன் இடுகாட்டை யடைந்து சிதையின்மீது படுத்துக்

கொண்டான். படுத்துக்கொண்டு கலம்பகத்தைப் படிக்கச் சொன்னான். கலம்பகம் பாடியவன் கலம்பகத்தைப் படிக்கத் தொடங்கிப் படித்தான். பாடல்கள் முடியுந் தோறும் முடியுந்தோறும் நந்தியின் ஆவி சிறிது சிறிதாக ஒடுங்கி வந்துகொண்டேயிருந்தது. புலவன் கலம்பகத்தின் இறுதிப் பாட்டாகிய,

"வானுறு மதியை அடைந்ததுன் வதனம்
வையகம் அடைந்ததுன் கீர்த்தி
கானுறு புலியை அடைந்ததுன் வீரம்
கற்பகம் அடைந்ததுன் கரங்கள்
தேனுறு மலராள் அரியிடஞ் சேர்ந்தாள்
செந்தழல் புகுந்ததுன் மேனி
யானுமென் கலியும் எவ்விடம் புகுவேம்
எந்தையே நந்திநா யகனே."

என்னுஞ் செய்யுளைப் பாடியவுடன் நந்தியின் தலை இரண்டாகப் பிளந்தது. அவன் விண்ணவரூர் புகுந்தான். நால்வரும் நந்தியின் உடல்மீது விழுந்து புலம்பினர். செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து முடித்து நால்வரும் அரசாட்சியை மேற்கொண்டனர். நந்திக்கலம்பக நூல் அச்சிடப்பட்டு உலகில் நிலைபெற்றுள்ளது. ஆயினும் ஆசிரியர் பெயர் தெரியாமல் வழங்கி வருகின்றது.

---

## கஅ. பகழிக்கூத்தர்

### தோற்றம்

மதுரைமாவட்டத்திலே உள்ள சிற்றூர் ஒன்றில் கரும்பொன் விளைநர் குலத்திலே பகழிக்கூத்தர் தோன்றினார். கூத்தர் என்பது பெற்றோரால் இடப்பட்ட பெயர். பாண்டிய மன்னர்களது போருக்கு வேண்டிய பகழிகளை (அம்புகளை)க் கூத்தர் செய்யுந்தொழிலில் தலைசிறந்து நின்றமையால் பகழி என்னும் அடை, பெயருக்குமுன் சிறப்பிற்காகப் பொருந்தி நின்றது. முற்பிறப்பின் நல்வினையினால் பகழிக்கூத்தருக்குக் கலைமகள் திருவருள் எளிதில் அமைந்து நின்றது. அழகிய பாக்களைப்பாடும் ஆற்றலைப் பெற்றிருந்தார். ஆயினும் செய்யுட்களைக் கடவுளர்மீதோ மனிதர்கள்மீதோ பாடவில்லை. தமது குலத்தொழிலிலேயே கருத்தைச் செலுத்தி யிருந்தார்.

### கூத்தர் நோக்கமும் முருகன் கட்டளையும்

"எந்தத் தெய்வம் செந்தமிழில் விருப்பம் உடையதாக இருக்கிறதோ அந்தத்தெய்வம் தன்மீதுபாடுமாறு கட்டளையிடட்டும். அவ்வாறு கட்டளையிட்டால் பாடுகிறேன்," என்று கூத்தர், கடவுளர்கள்மீது பாட்டுப் பாடுமாறு தம்மிடம் கூறியவர்கட்கெல்லாம் பதிலுரைத்துக் கொண்டிருந்தார். செந்திலம்பதிவாழ் முருகக் கடவுள் ஒரு நாள் பகழிக்கூத்தரின் கனவில் தோன்றினார். இலைத்திருநீற்றையும் சீட்டு ஒன்றையும் தந்து மறைந்தருளினார். பகழிக்கூத்தர் திடுக்குற்று விழித்தார். முருகன் கனவில் வழங்கிய பொருள்கள் பக்கத்தில் இருக்கக்கண்டார். மிகுந்த வியப்படைந்து திருநீற்றையும் சீட்டையும் விழுந்துவிழுந்து வணங்கி யெழுந்தார். திருநீற்றை அணிந்து கொண்டார். சீட்டைப் படித்துப் பார்த்தார். அந்தச் சீட்டில்,

"பூமாது போற்றும் புகழ்ப்பகழிக் கூத்தாவுன்
பாமாலை கேட்கயாம் பற்றேமா—ஏமம்
கொடுக்க அறியேமா கூற்றுவன்வா ராமால்
தடுக்க அறியேமா தாம்."

என்று வெண்பா ஒன்று எழுதப்பட்டிருந்ததைக் கண்டார். உடனே முருகப்பெருமான்மீது பிள்ளைத்தமிழ் என்னும் நூல் ஒன்றைப் பாடத் தொடங்கினார். அக் கடவுள் தந்த பாட்டிலிருந்த பூமாது என்னும் சொல்லையே முன்னாக அமைத்துப் பாடி முடித்தார். பிறகு பிள்ளைத்தமிழை எடுத்துக்கொண்டு திருச்செந்தூரை அடைந்தார்.

### செந்தூரில் தங்கியிருத்தல்

திருச்செந்தில் சென்ற பகழிக்கூத்தர், அப் பதியில் எழுந்தருளிய முருகனை வழிபடுபவர்களும் இரண்டாயிரம் என்னும் தொகையினை யுடையவர்களும் ஆகிய அந்தணாளர்களைக் கண்டு, தாம் முருகன் கட்டளைப்படி பிள்ளைத்தமிழ் பாடி வந்திருத்தலைத் தெரியப்படுத்தினார். பகழிக்கூத்தர் நம்பிய குலத்தினர் என்பதை உணர்ந்த அவர்கள் கூத்தரை ஒரு பொருட்படுத்தவில்லை. குலவெறியில் மூழ்கிய அவர்கள் முருகன் கட்டளையிட்டான் என்பதையும் நம்பவில்லை. முருகனை முழுதும் நம்பி வந்த கூத்தர் திண்டாடும் படியாக நேரிட்டுவிட்டது. தங்குமிடத்திற்கும் உணவுக்கும் திண்டாடிய அவர் மிகத் தொல்லையுடன் மூன்று திங்களைக் கழித்தார். முருகன்மீது அவருக்கு அடிக்கடி சினமும் உண்டாயிற்று. ஆயினும் அவர் கனவினை எண்ணிக் களிப்புடன் இருந்தார்.

### முருகன் திருவிளையாடல்

முருகன் பகழிக் கூத்தருக்கு அருள்செய்ய எண்ணினார். தமக்கு அணியப்பட்டிருந்த பதக்கம் ஒன்றை எடுத்

துக் கனவில் பகழிக் கூத்தரிடம் தந்தார். "இதனை ஈடாக வைத்துக் கொண்டு இன்னவிடத்தில் இரு. நூல் அரங் கேற்றமாகும்," என்று இடமுங் குறிப்பிட்டார். கனவை யும் பதக்கத்தையுங் கண்ட கூத்தர் கவலை நீங்கினார். முருகன் குறிப்பிட்ட இடத்திற் சென்று தங்கியிருந்தார்.

அந் நாளில் குலசேகரன்பட்டினம் என்னும் ஊரில் காத்த பெருமாள் மூப்பனார் என்பவர் ஒருவர் முருகக் கடவுண்மாட்டுப் பேரன்புடையவராக இருந்தார். முருகக் கடவுள் அம் மூப்பனாரின் கனவின்கண் தோன்றிப் பகழிக் கூத்தரைப்பற்றிக் கூறிப் பிள்ளைத் தமிழ் நூலை அரங்கேற் றஞ் செய்யுமாறு செய்விக்க வேண்டுமென்று திருவாய் மலர்ந்தருளியதுடன் பகழிக் கூத்தர் தங்கியிருக்குமிடத் தையும் தெரிவித்து மறைந்தார்.

கனவு கண்ட மூப்பனார் முருகக் கடவுளின் திருவருளை எண்ணிப் பெருமகிழ்வு அடைந்தார். செல்வநலம் மிக்கா ராதலின் பல்லக்கில் புறப்பட்டுத் திருச்செந்தூரை அடைந் தார். பதக்கம் களவு போனதனால் கோவிலில் குழப்பம் மிகுதிப்படுவதற்குள் கோவிலாளர்களைக் கண்டு முருகப் பெருமான் கட்டளையைக் கூறினார். முருகன் அடியவர்க ளாகிய அந்தணாளர்களின் ஆணவம் அடியோடு அடங்கி விட்டது. அந்தோ இழிகுலத்தினன் என்று எண்ணினோம். இவ்வாறு பழி விளைத்திடும் என்பதை அறியாமற் போயி னோமே என்று வருந்தினர். இரண்டாயிரரும் மூப்பனா ரோடு புறப்பட்டுப் பகழிக் கூத்தரைத் தேடிச் சென்றனர்.

மூப்பனார் பகழிக்கூத்தரைக் கண்டு அவருடைய அடிகளைப் பணிந்தார். இருவரும் ஒருவரை ஒருவர் பாராட்டிப் புகழ்ந்து பேசிக்கொண்டனர். பிறகு இருவரும் புறப்பட்டு அந்தணாளர்களுடன் திருக்கோவிலை அடைந்

தனர். கூத்தர் முருகப்பிரானைப் போற்றி வணங்கிப் பிள்ளைத் தமிழைப் படித்துப் பொருளை விரித்துரைத்தார். பிள்ளைத்தமிழ்ப் பாக்களின் இனிமையையும், பொருள் நயத்தையும் கேட்டவர்கள் அனைவரும் பெருங் களிப்படைந் தனர். முருகக்கடவுள் ஒரு புலவனாக அவையில் எழுந் தருளியிருந்து பிள்ளைத்தமிழைக் கேட்டு மகிழ்ந்ததுடன்,

> "செந்தமிழ்க்கு வாய்த்த திருச்செந்திற் பதிவாழும்
> கந்தனுக்குப் பிள்ளைக் கவிசெய்தான்—சொந்தத்
> திருமாது சேர்மார்பன் தேர்ப்பாகன் வண்மை
> தருமால் பகழிக்கூத் தன்."

என்றொரு சிறப்புப்பாயிரமுங் கூறியருளி மறைந்தார். அரங்கேற்றம் முடிந்தபின் பகழிக் கூத்தருக்குப் பெரும் பொருளை மூப்பனார் நன்கொடை வழங்கிப் பகழிக் கூத்த ரிடம் இருந்த முருகப்பெருமானது பதக்கத்தை மீட்டார். பிள்ளைத்தமிழ் அரங்கேற்றத்தைக் கேட்டு மகிழ்ந்தவர்கள் பெருங்களிப்படைந்தனர்.

---

## கசு. குரு நமச்சிவாயர்

குரு நமச்சிவாயர் என்பவர் திருவருணையில் எழுந் தருளியிருந்த குகை நமச்சிவாயர் என்பவருடைய மாணவர். குரு நமச்சிவாயருடைய காலம் பல நூற்றாண்டுகட்கு முற் பட்டமையான் அவருடைய ஊர் நாடு முதலியன அறியப் பெறவில்லை.

குரு நமச்சிவாயர் குகை நமச்சிவாயருடைய அரு ளுரையைப் பெற்று மெய்யறிவு கைவரப்பெற்றவராக விளங்கினார். குகை நமச்சிவாயர் தம் மாணவர் தம்மினும் சிறந்த மெய்ஞ்ஞானியாக மாறிவருதலைக் கண்டு மிகுந்த வியப்படைந்தார். ஒரு நாள்,

"ஆல்பழுத்துப் பட்சியினுக் காகார மானதென
வேல்பழுத்து நின்றவிலை வீணிலென—

என்று அரை வெண்பாவைப் பாடினார். எஞ்சியதை முடிக்குமாறு தம் மாணவராகிய குரு நமச்சிவாயருக்குக் கட்டளையிட்டார். குரு நமச்சிவாயர்,

—சாலவனசு
செய்யா வொருத்தருடன் சேர்ந்தும் இருப்பீரோ
ஐயா நமசிவா யா."

என்று வெண்பாவைப் பாடி முடித்தார். குரு நமச்சிவாயரைக் குகை நமச்சிவாயர் நோக்கி, "நீ தில்லையிற் சென்று இரு" என்று திருவாய் மலர்ந்தருளினார். குரு நமச்சிவாயர் தில்லையை நோக்கி அருணையில் இருந்து புறப்பட்டார். இரவில் ஓர் இடத்தில் தங்கினார். பசி நோய் மிகுதியாயிற்று. அப்போது அவர் உண்ணாமுலை அம்மையை எண்ணி,

"அண்ணா மலையார் அகத்துக் கினியாளே
உண்ணா முலையே உமையாளே—நண்ணா
நினைதோறும் போற்றிசெய நின்னடியார் உண்ண
மனைதோறும் சோறு கொண்டு வா."

என்னும் வெண்பாவைப் பாடினார். உமையவள் உணவு கொண்டு வந்து வழங்கினாள். பிறகு குருநமச்சிவாயர் தங்கிய இடங்களிலெல்லாம் உமையவளைப் பாடியே உணவு பெற்றார். ஓர் ஊரில்,

"தாயிருக்கப் பிள்ளை தளருமோ தாரணியில்
நீ யிருக்க யான்தளர நீதியோ—வேயிருக்கும்
தோளியே விண்ணோர் துதிக்குந் 'திருமுத்து
வாளியே சோறுகொண்டு வா.'
மின்னும் படிவந்த மேககளத் தீசருடன்
மன்னுந் திருமுத்து வாளியே—பொன்னின்
கலையாளே தாயேயென் கன்மனத்தே நின்ற
மலையாளே சோறுகொண்டு வா."

என்னும் வெண்பாக்களைப் பாடினார். விருத்தாசலம் என்னும் பழமலையில்,

“நன்றிபுனை யும்பெரிய நாயகிஎ னுங்கிழத்தி
என்றுஞ் சிவன்பால் இடக்கிழத்தி—நின்ற
நிலைக்கிழத்தி மேனி முழுநிலக் கிழத்தி
மலைக்கிழத்தி சோறுகொண்டு வா.”

“முத்தநதி சூழும் முதுகுன் றுறைவாளே
பத்தர் பணியும் பதத்தாளே—அத்தா
இடத்தாளே மூவா முலைமேலே ஆர
வடத்தாளே சோறுகொண்டு வா”

என்னும் வெண்பாக்களைப் பாடினார்.

பிறகு சிதம்பரத்தை அடைந்தார். கூத்தப்பிரானுடைய கட்டளைபடி தில்லைவாழ் அந்தணர்கள் குருநமச்சிவாயருக்குத் தங்கியிருப்பதற்கு இடம் ஏற்படுத்திக் கொடுத்தார்கள். குருநமச்சிவாயர் அங்கு யோக நிட்டையில் அமர்ந்திருந்தார். அப்போது பசிநோய் அடுத்தது. உடனே,

“ஊன்பயிலுங் காயம் உலராமல் உன்றனது
வானபயிலும் பொன்னடியை வாழ்த்துவேன்-தேன்பயிலும்
சொல்லிய நல்லார் துதிக்குஞ் சிவகாம
வல்லியே சோறுகொண்டு வா.”

என்னும் வெண்பாவைப் பாடினார். சிவகாமி அம்மையார் உணவினைக் கொண்டுவந்து குருநமச்சிவாயர் முன்பு வைத்து,

“கொண்டுவந்தேன் சோறு குகைநமச்சி வாயரது
தொண்டர் அடியார் சுகிக்கவே—பண்டுகந்த
பேய்ச்சிமுலை யுண்ட பெருமாள் உடன்பிறந்த
நாச்சி சிவகாமி நான்.”

என்னும் வெண்பாவைப் பாடிச்சென்றார். குருநமச்சிவாயரைக் கண்டு வழிபடச் சென்றவர்கள் அவர் முன்பு

காசுபணம் முதலியவைகளை வைத்துவைத்துச் சென்றனர். குருநமச்சிவாயர் அப்பொருள்களை யெல்லாம் ஏழை எளியவர்களை வாரிக்கொள்ளச் செய்தார். இதனைக் கண்ட தில்லைவாழ் அந்தணர்கள் பொருள்கள் வீணாகப் போகின்றன. இவரைக் கோயிலுக்குள் கொண்டுபோய்ச் சேர்த்தால் பல திருப்பணிகள் நடந்தேறும் என்று எண்ணமிட்டார்கள். பெருமுயற்சி செய்து கோயிலுக்குள் கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். குருநமச்சிவாயருடைய முயற்சியால் கூத்தப்பிரானுக்குத் திருப்பணிகள் பல நடந்தேறின. கூத்தப்பிரான் குருநமச்சிவாயருக்குத் திருநடனத்தையும் ஆடிக் காட்டினார். அக் கூத்தைத் தில்லை வாழ் அந்தணர்களும் கண்டு மகிழ்ந்தார்கள்.

"தூக்கியகால் நோகாதோ துட்டன் முயலகன்மேல்
தாக்கியகால் தானுஞ் சலியாதோ—வாக்கா
தினவரதா தில்லைத் திருத்தாண்ட வாநீ
அனவரதங் கூத்தாடி னால்."

என்னும் வெண்பாப் பாடிக் குருநமச்சிவாயர் அம்பலவாணனின் திருக்கூத்தை நிறுத்தினார்.

குருநமச்சிவாயர் பாடிய தனிப்பாடல்கள் எண்ணற்றவை. பரமரகசியமாலை, சிதம்பர வெண்பா, அண்ணாமலை வெண்பா முதலியவை நூல்வடிவில் உள்ளன. இவருடைய ஆசிரியராகிய குகைநமச்சிவாயர் அருணகிரியந்தாதி, தனிவெண்பாமாலை முதலிய நூல்களைப்பாடியுள்ளார்.

## கரு. அபிராமப்பட்டர்

அபிராமியந்தாதியைப் பாடியருளிய அபிராமப்பட்டர் என்பவர், சோழநாட்டிலே திருக்கடவூரிலே அந்தணர் குலத்திலே தோன்றினர். சோதிடத்தை நன்கு பயின்ற இவர் சோழ மன்னனிடத்திலே சோதிடஞ் சொல்லுந் தொழிலை மேற்கொண்டிருந்தார். இவரும் இவருடைய வழிமுறையினரும் திருக்கடவூரில் எழுந்தருளிய அபிராமியம்மை மீது பேரன்பு கொண்டு விளங்கினர். பழவினைப் பயனுல் அபிராமப்பட்டரிடம் மயக்கந்தரும் பொருள்களை உண்ணும் தீய பழக்கம் ஏற்பட்டது. அறிவினைத் திரிக்கும் பொருள்களை அடிக்கடி உண்டு அறிவு திரிந்து நின்றுர். சிலர் இச்செய்தியை அரசனிடம் அறிவித்தனர். அபிராமப்பட்டர் அறிவுநிலை திரிந்துள்ள சமயம் பார்த்து அவரைத் தன்னிடம் அழைத்து வருமாறு ஏற்பாடு செய்தான் அரசன்.

பட்டர் அறிவு திரிந்திருந்த சமயம் பார்த்துச் சிலர் பட்டரை அழைத்துப்போய் அரசன் முன்பு நிறுத்தினர். பட்டர் அறிவு திரிந்துள்ளார் என்பதை அரசன் அறிந்து கொண்டான். அவன் உடனே பட்டரைப் பார்த்து, "இற்றை நாளின் ஐந்துறுப்புக்களை (பஞ்சாங்கத்தை)க் கூறும்," என்று சொன்னுன். மறுநாள் மதியின் முழு மறைவு (அமாவாசை) நாள். ஆனுல், அறிவு திரிந்திருந்த அபிராமப்பட்டர் மறுநாள் முழுத்திங்கள் நாள் (பௌர்ணமி) என்று கூறிவிட்டார். அரசன் உடனே தன் சபையில் இருந்த பலரையும் சாட்சி வைத்தான். பிறகு அபிராமப்பட்டரைப் பார்த்து, "நாளைக்குக் கதிரவன் மறைந்தவுடன் கிழக்குத் திக்கிலே முழுமதி தோன்றுதல் வேண்டும். அவ்வாறு தோன்றுதொழியில் உன்னை

என்னுடைய வாட்படைக்கு இரையாக்கி விடுவேன். நான் அந்தணனைக் கொன்றுவிட்டேன் என்று உலகினர் யாது கூறினும் கூறுக. அதனை நான் ஒரு பொருட்படுத்தமாட்டேன்,'' என்று மிகுந்த கடுஞ்சினத்துடன் கூறினான்.

அபிராமப்பட்டர் தம்முடைய தவற்றினை எண்ணி மனம் வருந்தினார். வாளைக்கொண்டு அரசன் நம்மைக் கொலைபுரிவதற்குமுன் நாம் நம்முடைய வழிபடு கடவுளாகிய அபிராமியின் தாளைப்போற்றி நாளைக்குத் திங்கள் தோன்றுமாறு வேண்டுவோம்; அவ்வாறு தோன்றாவிடின் உலகம் அறிய இறந்தொழிவோம் என்று முடிவு செய்தார். மறுநாள் ஒரு பெரிய தீக்குழியை உண்டாக்கினார். நூறு கால்களோடு கூடிய ஒற்றைவார் உறியொன்றை அமைத்துத் தாம அந்த உறியின் மேலடுக்கில் அமர்ந்து இறைவியைப் போற்றிப் பாடத்தொடங்கினார். கிழக்குத் திக்கில் கதிரவனும் தோன்றினான்.

“உதிக்கின்ற செங்கதி ருச்சித் திலக முணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்க மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனி அபிராமி யென்றன் விழித்துணையே.”

என்பது முதலாவது பாட்டு. ஒவ்வொரு பாட்டு முடியும் தோறும் உறியின் அடுக்கு ஒன்றைச் சேதித்துக் கொண்டே சென்றார். செய்யுட்கள் தொண்ணூற்றொன்பது முடிந்தன. உறியின்கால்களும் தொண்ணூற்றொன்பது சேதிக்கப்பட்டு ஒன்றுமட்டும் எஞ்சி நின்றது. அபிராமிதேவி அதுவரையிலும் தோன்றவில்லை.

அபிராமிப்பட்டருக்குக் கவலை மிகுதியாயிற்று. இறைவி அருள்புரியாள் போலும். அரசனுடைய வாளால்

மாய்தலைவிட ஈண்டுத் தீயில் வீழ்ந்து மாய்தலே சிறந்தது என்று முடிவு செய்தார்.

"குழையைத் தழுவிய கொன்றையந் தார்கமழ்
கொங்கைவல்லி
கழையைப் பொருத திருநெடுந் தோளும்
கருப்புவில்லும்
விழையப் பெருதிறல் வேரியம் பாணமும்
வெண்ணகையும்
உழையைப் பொருகண்ணு நெஞ்சிலெப் போதும்
உதிக்கின்றவே."

என்னும் இறுதிப் பாட்டையும் பாடி முடித்து உறியின் இறுதிக் காலையும் கொய்தார். அவர் தீயில் விழுமுன் அபிராமியம்மை தோன்றினாள். தனது கைகளை நீட்டிப் பட்டரைப் பற்றித் தரையில் விட்டாள். விண்ணவர் மலர்மாரி பெய்தனர். தேவியின் திருவடிகளைப் பட்டர் வணங்கிப் போற்றினார். தேவி பட்டரைப்பார்த்து "அஞ்சாதே" என்று அடைக்கலங்கொடுத்தருளினாள். தனது இடது காதில் அணிந்திருந்த குண்டலத்தை வலது கையால் வாங்கிக் கிழக்குத்திக்கில் வீசினாள். அக்குண்டலம் திங்கள் தோன்ற வேண்டிய இடத்திற்குச் சென்று திங்களைப்போல் விளங்கி நின்றது. அமாவாசை நாளில் திங்கள் தோன்றி விளங்குதலைக்கண்டு உலகினர் பெரு வியப்படைந்தனர். சிலர் இஃதோர் இந்திரசாலம் என்றனர்.

சோழமன்னன் திங்கள் தோன்றியதைக் கண்டு திகைப்படைந்தான். அபிராமப்பட்டன் இடத்திலே தெய்வத் திருவருள் மிகுதியாக அமைந்திருக்கிறது. நாம் இதனை நன்கு உணர்ந்து கொள்ளாமற் போனோமே என்று உள்ளங் கலங்கினான். "பட்டர் யாண்டுளார்?" என்று உசா

விக்கொண்டு பட்டரைத் தேடியோடினன். வெட்டிக் கொலை செய்து விடுவதாகக்கூறிய நமக்கு எத்தகைய துன்பமும் ஏற்படாமல் இருக்கவேண்டுமே என்னும் கலக்கம் அரசனுக்குப் பெரிதாயிற்று. அபிராமப்பட்டரைக் கண்ட உடன் அவர் அடிகளில் முடிபடப் படியில் வீழ்ந்தான. "நான் தங்களுடைய பெருமையை உணர்ந்து கொள்ளாமல் தவறு செய்துவிட்டேன். என் தவற்றினைப் பொறுத்து அருள்புரியவேண்டும்" என்று கூறி இரங்கி வேண்டினன். அபிராமப்பட்டர் அரசனுக்கு வாழ்த்துரை கூறினர். "உன்னுடைய சொல்லினல்தான் நான் இறைவியின் திருவருள் பெற்றுச் சிறப்படைந்தேன்; ஆகையால் உன்னுடைய உள்ளத்திலே சிறிதும் ஐயங்கொள்ளாதே," என்று கூறினர். பிறகு இருவரும் ஒன்று பட்ட மனத்தினராய் அளவளாவினர். நிகழ்ந்த செயலை எல்லோரும் உணர்ந்து அபிராமப்பட்டரைப் புகழ்ந்து போற்றினர்கள். இரவு முழுவதும் இறைவியின் குண்டலத் திங்கள் விளங்கி நின்று மறுநாட் காலையில் மறைந்தது. அரசன் அன்று முதல் அபிராமப்பட்டருக்கு அடியவனய் நின்று அவருடைய குறிப்பறிந்தொழுகினன். அபிராமப்பட்டர் இயற்றியதாக அபிராமியந்தாதி ஒன்றைத் தவிர வேறு நூல்கள் இருப்பதாகத் தெரியவில்லை. அபிராமியந்தாதியை மெய்யன்புடன் பாடிப் போற்றுவோர் வேண்டிய வேண்டியாங்கெய்தி இன்புறுகின்றனர்.

## கக. சத்திமுற்றப்புலவர்

சோழ வளநாட்டிலே சத்திமுற்றம் என்னும் ஊரிலே சத்திமுற்றப்புலவர் தோன்றினார். சத்திமுற்றப் புலவருக்குப் பிள்ளைமைக் காலத்தில் இடப்பெற்ற பெயர் நாளடைவில் மறைந்து போகப் புலவர் தோன்றிய ஊரின் பெயரே புலவர்க்கு இணைந்து வழங்கி நின்றது. அவருடைய குலம் காலம் முதலியனவும் விளக்கமாகத் தெரியவில்லை.

சத்திமுற்றப்புலவர் இலக்கண இலக்கியங்களையும் சங்க நூல்களையும் வழுவறப்பயின்று அவைகளில் சிறந்த தேர்ச்சிபெற்றுத் திகழ்ந்தார். புலவர்பெருமக்களை வாட்டி வருத்தும் மிடியன் என்னுங் கொடியன் சத்திமுற்றப் புலவரையுஞ் சுற்றி வளைத்தான். புலவா அக்கொடியனின் அல்லல்களைத் தாங்கக் கூடாதவராயினார்.

அந்நாளில் மதுரையில் அரியணையில் அமர்ந்திருந்த பாண்டிய மன்னன் புலவர்களின் மிடிக்கோர் கூற்றுவனாய் விளங்கினான். சத்திமுற்றப்புலவர் மதுரையை அடைந்து தமது வறுமை நோயைக் களைய எண்ணினார். புறப்பட்டுக் காடுகளையும் மலைகளையும் கடந்து கூடலைக் கூடினார். தமது வறுமை நோய் தொலைந்ததென்று உள்ளங் களித்தார்.

புலவரைப் பிரிந்த அவர் மனைவியோ உறவினர் இல்லங்களில் குற்றேவல் செய்து காலம் போக்கினார். மதுரையை அடைந்த புலவர் அரண்மனை வாயிலை அடைந்து வாயிற்காவலரைக் கண்டார். அவர்களைப் பார்த்து, "நீங்கள் பூவேந்தன்பாற் சென்று புனனாட்டில் இருந்து பாவேந்தன் ஒருவன் வந்துள்ளான் என்று தெரியப்படுத்துங்கள்," என்று புகன்றார். புலவரின் தோற்றம் மிகத் தாழ்வாகவும் ஆடைகள் கிழிந்து தைக்கப்

பெற்றவைகளாகவும் இருத்தலைக் கண்ட வாயிற்காவலர் எள்ளி நகையாடினர். "நீயும் ஒரு புலவனேயோ? போ போ அப்பாலே போ உன்னுடைய திருக்கோலம் அரசர் களைக் காண்டற்கு ஏற்றதன்று," என்று கூறிவிட்டனர்.

எத்தனையோ சிறப்புக்களைப் பெறலாம் என்று எண்ணி வந்த புலவரின் எண்ணம் மண்ணாகி உள்ளம் புண்ணாயிற்று. அவர் அந்த மாட மதுரையின் மறுகு களில் சுற்றித் திரிந்தார். கண்டவிடங்களில் உண்டார். கண்ட இடங்களில் படுத்துறங்கினர்.

புலவர் செய்தி இவ்வாறாக இருக்கும் நாளில் அரசன் ஒரு நாள் வயல் பக்கங்களுக்குச் சென்றான். அங்கு சில நாரைகளைக் கண்டான். அவைகளின் வாய்க்கு எதனை ஒப்பாகக் கூறலாம் என்று எண்ணமிட்டான். ஒன்றும் விளங்கவில்லை. அரண்மனையை அடைந்தபின் தன் அவைக்களத்துப் புலவர்களைப்பார்த்து, "நாரை வாய்க்குத் தகுந்த உவமையாக வேறொன்றை எடுத்துக் கூறுபவர் கட்குத் தகுந்த நன்கொடை வழங்குவேன்," என்று தெரி யப்படுத்தினன். அங்கிருந்த புலவர்கள் தக்க உவமை கூறமுடியாமல் கவன்றிருந்தனர்.

அரசன் ஒரு நாள் இரவில் மாறு கோலத்துடன் ஊரைச் சுற்றிப்பார்த்துக் கொண்டு வந்தான். அப் போது தேர் முட்டியின் அண்மையில் சோழ வளநாட்டுச் சத்திமுற்றப்புலவர் படுத்து உறக்கம் பிடிக்காமல் புரண்டு கொண்டிருந்தார். அப்பொழுது நாரைகள் சில வடக்கில் இருந்து தெற்கு நோக்கிப் பறந்து சென்றன. புலவர் வாயில் இருந்து செய்யுள் ஒன்று புறப்பட்டது.

"நாராய் நாராய் செங்கால் நாராய்
பழம்படு பனையின் கிழங்குபிளந் தன்ன

பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்
நீயுநின் மனைவியும் தென்திசைக் குமரி
ஆடி வடதிசைக் கேகுவீ ராயின்
எம்மூர்ச் சத்திமுற்ற வாவியுள் தங்கி
நனைசுவர்க் கூரை கனைகுரற் பல்லி
பாடுபார்த் திருக்குமெம் மனைவியைக் கண்டே
எங்கோன் மாறன் வழுதி கூடலில்
ஆடை இன்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலது தழீஇப்
பேழையுள் இருக்கும் பாம்பென உயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டனன் எனுமே.”

என்பது அச்செய்யுள். ஊர் சுற்றிக்கொண்டு வந்த மன்னன் புலவரின் செய்யுளைக் கருத்தூன்றிக் கேட்டான். புலவரின் வறுமைநிலை அரசனின் உள்ளத்தை உருக்கியது. தான் விரும்பிய உவமையும் பாட்டில் இருத்தலைக் கண்டான். அவனுக்கு இன்பமும் துன்பமும் ஒருங்கே உண்டாகியது. பேரறிவு நிரம்பப் பெற்ற புலவரும் இவ்வாறு வறுமையால் வாடுகிறாரே என்று வருந்தினான். விரைந்து அரண்மனையை அடைந்தான். ஏவலன் ஒருவனை அழைத்துத், “ தேர் முட்டியிடத்தில் ஒரு மனிதன் படுத்திருக்கிறான். நீ விடியும் வரை அந்த இடத்திலே அவனைக் காத்திருந்து விடிந்தபின் அவனை நம்மிடத்திற்கு அழைத்து வா ! அந்த மனிதனுக்குச் சிறுமை எதனையுஞ் செய்து விடாதே,” என்று சொல்லி அனுப்பினான்.

காவலன் கட்டளைப்படியே ஏவலன் விரைந்து சென்று புலவரைக் கண்டான், விடியும் வரை அவர் வேற்றிடஞ் சென்று விடாமல் காத்திருந்தான். விடிந்தபின் அழைத்துக்கொண்டு போய் அரசனிடம் நிறுத்தினான். அவ்வள

வில் புலவர் தமது வறுமையை அரசனிடம் பாடத் தொடங்கி,

"வெறும்புற் கையுமரி தாக்கிள்ளை சோருமென் வீட்டில்வரும்
எறும்புக்கு மார்ப்பத மில்லை மன்னா..................."

என்றார். அவ்வளவில் அரசன், "புலவரே நிறுத்தும் உம்முடைய பாட்டை," என்றான். புலவர் திடுக்கிட்டார். அரசன் பாடல்களில் விருப்பமில்லாதவனோ அல்லது பாட்டைக் கேட்டால் பொருள் கொடுக்கவேண்டுமென்று அஞ்சுகிறானோ தெரியவில்லையே என்று உள்ளம் ஏங்கினார். புலவரின் குறிப்பை உணர்ந்த அரசன், "இப்பாட்டின் எஞ்சிய பகுதியைப் பாடுவதற்குக் காலம் பின்னால் இருக்கிறது. அப்பொழுது பாடிக் கொள்ளலாம்" என்றான். பிறகு அரசன் சத்திமுற்றப்புலவரின் அழுக்காடைகளைக் களையச் செய்து நல்லாடைகள் புனையச் செய்தான். அணிகலன்களைப் பூட்டினான். அறுசுவைப் பொருள்களோடு இனிய விருந்து செய்தான். அவ் வின்பத்திலே திளைத்த புலவர் வீட்டிலே மனைவி எவ்வாறு அல்லற்பட்டுக் கொண்டிருக்கிறாளோ என்று உள்ளம் வருந்திக்கொண்டிருந்தார்.

அரசன் புலவரது ஊர் பெயர் முதலியவைகளை உசாவி அறிந்துகொண்டான். கண்ணபிரான் குசேலரைக் களப்படுத்தியதைப் போலச் சத்திமுற்றப் புலவரைத் தான் களப்படுத்த எண்ணினான். புலவரின் ஊருக்கு ஆட்களையும் பொருட்களையும் புலவருக்குத் தெரியாமல் அனுப்பினான். புலவரின் குடிசையை அழகிய மாடமாளிகையாகக் கட்டச் செய்தான். வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களையும் அங்கு அமைத்தான். புலவரின் மாளிகை ஒரு சிற்றரசனின் மாளிகைபோல் சிறந்து விளங்கியது.

பிறகு அரசன் புலவரைப் பார்த்து, "நீவிர் நும் மூர்க்குச் சென்று சிலநாள்கழித்துப் பிறகு வருக" என்று

கட்டளையிட்டு அனுப்பினன். அவன் புலவர்கையில் பொருள் ஒன்றுங் கொடுக்கவில்லை. அரசன் செயல் புலவருக்குத் திகைப்பையளித்தது. நாம் அணிந்துள்ள அணியில் ஒன்றைவிற்றேனும் வறுமையைப் போக்குவோம் என்னும் எண்ணத்துடன் ஊருக்குத் திரும்பினர். தமது இல்லத்திற்குப் போய்ப்பார்த்தார். அவருக்குப் பெருவியப்புண்டாகியது. சிலநாள் இல்லத்தில் தங்கியிருந்தார் பிறகு சிவிகையிற் புறப்பட்டு மதுரையை அடைந்து அரசனைக்கண்டார். முன்பு நிறுத்திய செய்யுளின் எச்சத்தையும் பாடத்தொடங்கி,

"என்னிருங் கலியாம்
குறும்பைத் தவிர்த்த குடிதாங்கியைச் சென்று கூடியபின்
தெறும்புற்கை யானை கவளங்கொள் ளாமல் தெவிட்டியதே"

என்று பாடிமுடித்தார். மேலும் அரசன்மேல் பல செய்யுட்கள் இயற்றினர். சத்திமுற்றப் புலவரும் அரசனும் ஆருயிர் நண்பர்களாயினர் புலவர் அரசனுடைய அவைக்களத்திற்குத் தலைமைப் புலவரானர். இறுதிவரை அரசனும் புலவரும் கலாவிநோதர்களாய்க் காலங்கழித்திருந்தனர்.

---

## கஎ. முத்துக்குட்டிப் புலவர்

தோற்றம்

சேது நாட்டில் உள்ள பரத்தை வயல் என்னும் ஊரிலே முத்துக்குட்டிப் புலவர் தோன்றினர். இவருடைய தந்தையார் பெயர் தாண்டவராயசாமி. தாயார் பெயர் முத்துத்தாய். இவர் இளமையில் கற்கவேண்டியவைகளை ஒழுங்காகக் கற்றார். பின்னர் ஒரு புலவரிடம் இலக்கண இலக்கியங்களையும் நன்கு கற்றார். அப்புலவர் கடவுளன்புமிக்கவர். அவர் முத்துக்குட்டிப் புலவரைப் பார்த்து,

"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்,
நற்றாள் தொழாஅர் எனின்."

என்று திருவள்ளுவர் கூறியிருக்கிறார் அன்றோ? அறிவாளிகளாக விளங்குவோர் கடவுள் வழிபாட்டை மிகுதியாகக் கொள்ளுதல் வேண்டும். தெய்வ வழிபாடுதான் எல்லா நலன்களையும் அளிக்கும்," என்று அறிவுரைகள் கூறினார்.

திருவருள்

முத்துக்குட்டிப் புலவர் நூல்களைக் கற்கும் நேரம் போக, எஞ்சிய நேரமெல்லாம் தம் வழிபடு கடவுளை நினைந்து வேண்டுவதே தொழிலாக இருந்தார். அதனால் இவருக்குத் தெய்வத்திருவருள் கைவந்தது. இவருடைய வாக்கில் பிறந்த மொழிகள் பலிக்கும் தன்மையுடையவைகளாக இருந்தன. அக்கால வழக்கப்படி இவர் பல செல்வர்களிடமும் செய்யுள்பாடிச் சென்று நன்கொடை பெற்றுக் காலங்கழித்துக் கொண்டிருந்தார்.

கடவுள் உணவளித்தல்

ஒருமுறை முத்துக்குட்டிப் புலவர் திருக்கோட்டியூருக்குச் சென்றார். இவர் அங்குப்போய்ச் சேர்ந்த பொழுது இரவு நெடுநேரம் ஆகிவிட்டது. எங்கும் உணவு அகப்படுவதற்கான அறிகுறிகள் தெரியவில்லை. மக்கள் அனைவரும் இரவுச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு படுத்துவிட்டார்கள். முத்துக்குட்டிப் புலவருக்கோ பசி மிகுதியாக இருந்தது. புலவர் தேரடியில் இருந்து, "இரவு நெடுநேரம் ஆகிவிட்டது. இனிமேல் மனிதர்களால் உணவு அகப்படுமென்று நம்புவதற்கு இடமில்லை; ஓ சௌமிய மூர்த்திக் கடவுளே! நீதான் உணவு கொடுக்கவேண்டும்," என்னும் பொருளை அமைத்து ஒரு செய்யுள் பாடினார்.

அவ்வூரிற் கோயில் கொண்டருளிய சௌமிய மூர்த்திக் கடவுள் ஓர் அந்தண வடிவங்கொண்டு சர்க்கரைப் பொங்கலைக் கொண்டுவந்து தேரின்மீது முத்துக்குட்டிப் புலவருக்குத் தெரியும்படியாக வைத்துச் சென்றார். முத்துக்குட்டிப் புலவர் அவ்வுணவினை உண்டு,

"ஊருண் டுறங்கி ஒருசாம மாயிற்றிவ் வூர்தனிலே
நீரும் பருக்கையும் ஆர்தரு வாரிந்த நேரமென்றேன்
மூரன் மலர்மங்கை மார்பா சவுந்தர மூர்த்தியுன்றன்
தேருந் தருங்கட்டிச் சோறுங் கடற்கரைச சீனியுமே."

என்னும் செய்யுளைப் பாடினார்.

கொள்ளைத்தமிழ்

அந்நாளில் நாட்டரசன் கோட்டை என்னும் ஊரிலே நல்லதம்பிப்பிள்ளை என்னும் பெயருடைய செல்வன் ஒருவன் இருந்தான். அவன் சேதுபதியின் மந்திரியாயிருந்த தாண்டவராயபிள்ளை என்பவனுக்கு இளவல். அவனுடைய பெயர்தான் நல்லதம்பியே தவிரச் செயல்களெல்லாம் பொல்லாதவைகளாக இருந்தன. செல்வனாக இருந்தபடியாலும் தமையன் அமைச்சனாக இருந்தபடியாலும் மூர்க்கத் தனமாக நடந்து, "கெட்டவன்" என்னும் பெயரைத் தேடிக்கொண்டான். அவன் கொடியவன் என்று எங்கும் பெயராகிவிட்டது. சிலர் முத்துக்குட்டிப் புலவரைப் பார்த்து, "நீங்கள் நல்லதம்பிப் பிள்ளையின்மீது பிள்ளைத் தமிழ் ஒன்று பாடிக்கொண்டு செல்வீர்களாயின் நல்ல பரிசு கொடுப்பான்" என்று கூறினார்கள். நல்லதம்பிப் பிள்ளையின் பொல்லாத செயல்களையெல்லாம் கேள்விப்பட்டு அவனை மிக வெறுத்திருந்த புலவர் உடனே, "நான் அவன்மீது பிள்ளைத்தமிழ் பாடமாட்டேன். கொள்ளைத் தமிழ்தான் பாடுவேன்," என்று கூறி,

"பட்ட விளக்க மாற்றினுக்கோர்
பட்டுக்கயிறு தரித்தாற் போல்
இட்ட பெயரே நல்லதம்பி
என்றே நினைக்கிட் டிசைத்த வரார்
எட்டிப் பழமே பழஞ்செருப்பே
எள்ளத்தனையும் நாண மிலா
மட்டிப் பயலே நல்லதம்பி
மடவோய் சாகாய் வாழ் வாயோ."

என்று ஒரு செய்யுள் பாடினார். இச்செய்யுள் இயற்றப் பட்ட மறுநாளே நல்லதம்பி இறந்தான். அவன் இறந்த செய்தி எழுதப்பெற்ற ஓலையுடன் தோட்டியொருவன் முத்துக்குட்டிப் புலவரின் ஊருக்கு வந்தான். செய்தி இன்னதென்று தெரிந்துகொண்ட முத்துக்குட்டிப் புலவர்;

"நல்லதம்பி என்றொருவன் நாட்டரசன் கோட்டையிலே
அல்லனென்று போனனென் றுள்வந்தான் அம்மானை
அல்லனென்று போனனென் றுள்வந்தான் ஆமாயின்
சொல்லவந்த தூதுவனும் தோட்டிகாண் அம்மானை
தோட்டியவன் கூடநின்று சுட்டவன்காண் அம்மானை"

என்று ஓர் அம்மானைச் செய்யுள் பாடினார். இவருடைய வாக்குப் பலித நிலைமையை உணர்ந்த மக்கள் இவரிடம் அன்பும் அச்சமுங் கொண்டவர்களாக ஒழுகினர். இவர் தம்மைப் பெற்றதாய் தந்தையரிடத்தில் பேரன்புடையவர் என்பது,

"தருமணி யாந்தாண் டவராய சாமியென் தந்தையவன்
திருவனை யாண்முத்துத் தாயுல கேத்துஞ் செயலக்குமி
இருவரும் ஈன்ற தமிழ்முத்துக் குட்டியென் பேணிவர்தம்
பெருமையை நீடூழி காலமும் வாழ்த்திப் பெருகுவனே."

என்னுஞ் செய்யுளால் பெறப்படும்.

நூல்கள்

பரிசில் கருதிப் பலர்மீதும் தனிநிலைச் செய்யுட்கள் பல இயற்றியதே யன்றி இவர் நூலாக எதுவுஞ் செய்ய வில்லை. இவருடைய தனிப்பாடல்களும் பெரும்பான்மை மறைந்துபோயின.

---

## கரு. அட்டாவதானம் சரவணக் கவிராயர்

தோற்றம்

அட்டாவதானம் பெரிய சரவணக்கவிராயர் என்பவர் சேதுநாட்டிலே முதுகுளத்தூரிலே தோன்றினார். குலம், வேளாளர் குலம். அந்நாளில் இராமநாதபுரத்தில் சோம சுந்தரம் பிள்ளை என்பவர் சிறந்த பேரறிஞராக விளங்கி யிருந்தார். அவர் சிவஞான முனிவரிடம் கல்வி கற்றுத் தேறியவர். எல்லா நூல்களிலும் வல்லவர். சரவணப் பெரு மாட் கவிராயர் அந்தச் சோமசுந்தரம் பிள்ளையிடத்தில் நன்கு கல்வி கற்றுத் தேறினார். செய்யுள்பாடுந் திறமை மிக வியக்கத்தக்கவாறு கவிராயருக்கு அமைந்தது. மிக விரைவாகவும் அருமையாகவும் ஆசிரிய விருத்தங்களைப் பாடினார். இவரது கல்வித் திறமையை அறிந்த முத்துராமலிங்க சேதுபதி இவரைத் தம் அவைக்களப் புலவராக அமர்த்தினார். கவிராயர் சேதுபதியின் அவைக்களப் புலவராக அமர்ந்திருந்ததோடு தமிழ்நாடு முழுவதுஞ் சென்று தமது கல்வித்திறத்தைக் காட்டிப் பலவகையான நன்கொடைகள் பெற்றார். எங்குச்சென்றாலும் சேதுபதியையே புகழ்ந்து பாடுவார் இவருடைய வாக்குப் பலிதமுள்ளது. ஒருவனைக் கெடவும் வாழவும் பாடவல்லவர்.

பெருமிதம்

இவருடைய கல்விப் பெருமிதம் அளவற்றது. எந்த அரசரையும் ஒருபொருட்படுத்தாமல் பாடுவார். எப் பெரிய அரசரும் எழுடி எதிர்நடந்து வந்து தன்னை வரவேற்க வேண்டும் என்பார். தெய்வத் திருவருளும் கைவரப் பெற்றிருந்தமையின் காளமேகம்போல் எவருக்கும் அஞ்சவில்லை.

பரிசு தந்த அரசர்கள்

சிவகங்கை அரசர், புதுகோட்டை யரசர், வீரபாண்டியக் கெட்டிபொம்மு, மற்றும் அவர்காலத்திருந்த திருவாங்கூர் அரசர், குறுநில மன்னர்கள், பெருநிலக்கிழார்கள் முதலிய எல்லோரிடத்திலுஞ் சென்று சேதுபதியையும் தம் ஆசிரியரையும் பாராட்டிப் புகழ்ந்து பாடிப் பலவகைப் பரிசுகள் பெற்றார். இவர் பலவிடங்களினும் தாஞ்செய்த செயற்கருஞ் செயல்களையெல்லாம சிவகங்கை அரசரிடஞ் சென்று,

“ அரியலூர் வீரன்மேல் பாடியவன் ஒருவீட்டை
ஆயிரம்வீ டாக்கி வைத்தோம்
அம்மைநா தன்பேரில் வண்ணம் படித்தவனை
அரசுநிலை யிட்டு வைத்தோம்
ஆப்பனூர்க் குறவஞ்சி பாடியே கோடையுடன்
ஆடையும் விளைய வைத்தோம்
ஆனந்த நாதனுக் குப்புதுச் சேரிதனில்
அழியாச்செல் வங்கொ டுத்தோம்,
கருதியச ரதுநபா புவைஎதிர் வரச்சொலிக்
காகிதம் அனுப்பி வைத்தோம்
கடலாடி முத்துக் கருப்பணன் வணந்தனைக்
கற்றோர்க் கமுதம் ஆக்கினோம்
காரைநகர் லட்சுமண முதலிபுகழ் பெறநங்
கடைக்கணால் பார்த்து விட்டோம்

கவித்தலந் தன்னின்முத் தயமூப் பனைக்கறப
காலமும் இருக்க வைத்தோம்,
வரிசைபெறு பஞ்சமால் பண்டாரம் உத்யோகம்
மாறா திருக்க வைத்தோம்
மற்றுமவ னுக்கிளைய பிச்சாண்டி செட்டிக்கு
வசரதே கங்கொ டுத்தோம்
வாடும்ப யிர்க்குத் திருக்கூட லூரிலே
மழைபெய்ய ஈரம்பா டினோம்
மகமது தம்பிக்கு நீடூழி சாகா
வரத்தைக் கொடுத்து விட்டோம்,
திருவையாற் றுசசுப்ர மணியபிள் ளைக்குச்
சிரஞ்சீவி தனைய ளித்தோம்
சேதுபதி வாசல்அவ தானியா நம்மகிமை
தெரியாத பேரும் உண்டோ
தெள்ளமுது போலஎம் உளமீது பாடிவரு
செந்தமிழ் நிறுத்த லாமா
சிவகங்கை அரசுபுரி கவுரிவல் லவராச
செகமண்ட லாதி பதியே.”

என்னும் செய்யுள் மூலம் தெரியப்படுத்திப் பல பரி சுகள் பெற்றார்.

**மக்கள்**

இவருடைய மகனாகத் தோன்றிய அருணாசலம் என் பவரும் கல்விகற்றுச் சிறந்து அருணாசலக் கவிராயர் என் னும் பெயருடன் விளங்கினார். இந்த அருணாசலக் கவிராய ருடைய மகன் பாட்டனார் பெயரை இடப்பெற்றுக் கல்வி கேள்விகளிற் சிறந்து சிறிய சரவணக் கவிராயர் என்னும் பெயருடன் விளங்கினார். இவரால் குன்றைச் சிலேடை வெண்பா, திருச்சுழியலந்தாதி, மதுரை யமகவந்தாதி முத லிய நூல்கள் பாடப்பெற்றன.

நூல்கள்

முத்திருளப்பப்பிள்ளை என்பவர்மீது, "காதல்" என்னும் பெயருடன் ஒரு நூல் பாடினார். மற்றும் பணவிடு தூது, தருமர் அசுவமேதயாகப் புராணம், விநாயகர் திருமுக விலாசம் என்னும் நூல்களையும் இயற்றினார். இவர் மனிதர்கள்மீதும் தெய்வங்கள்மீதும் பாடிய பாடல்கள் பல தனிச் செய்யுட் சிந்தாமணி முதலிய நூல்களிற் சேர்க்கப் பெற்றுள்ளன.

---

## கக. நல்லாப்பிள்ளை

தோற்றமும் கல்வியும்

தொண்டை மண்டலத்திலே முதலம்பேடு என்னுஞ் சிற்றூரிலே இற்றைக்கு இருநூற்று இருபத்திரண்டியாண்டுகட்கு முன்னர் நல்லாப்பிள்ளை தோன்றினார். நல்லாப்பிள்ளையின் குலம் கருணீகர் குலம். அவர் இளைஞராயிருக்கும்போதே கலைமகளை வழிபட்டு வந்தார். அதனால் கல்வியில் மிகச் சிறந்தவராக விளங்கினார். அவருக்கு வடமொழிப் பயிற்சியும் நன்கு அமைந்தது. செய்யுள் இயற்றுதலிலே மிக வல்லவராக விளங்கினார்.

நூல் இயற்றல்

முருகக் கடவுள் தோற்றமுதல் தெய்வயானையம்மை திருமணம் வரையில் பாடி, அந்நூலுக்குத் தேவசேனை புராணம் என்று பெயரிட்டு அரங்கேற்றினார். இதனால் இவருடைய புகழ் எங்கும் பரவியது. பலரும் போற்றப் பெருமையுடன் வாழ்ந்திருந்தார். இந்நூலை இயற்றியபோது இவருக்கு அகவை பதினெட்டு என்ப.

வீரராகவ ரெட்டியார்

அந்நாளில் அந்நாட்டில் செங்காடு என்னுஞ் சிற்றூரில், வீரராகவ ரெட்டியார் என்னும் பெயருடையவர் ஒருவர் இருந்தார். அவர் கல்வியறிவுடையவர். இராமயணம் பாரதம் முதலிய இதிகாசங்களைப் படித்தவர். வடமொழிப் பாரதம் மிக விரிவானதென்றும், வில்லிபுத்தூரார் பாரதத்தை மிகச் சுருக்கமாகப் பாடியிருக்கிறார் என்றும் அவர் அறிந்தார். தமிழிலும் விரிவான பாரதம் இருக்கவேண்டும் என்று எண்ணினர். வடமொழிப் பாரதம்போல் விரிவாகப் பாடக்கூடிய சதுரர் யாவர் என்று பலரிடமும் உசாவினர். சிலர் நல்லாப்பிள்ளையின் பெருமையையும் அறிவாற்றலையுந் தெரியப்படுத்தினர்கள். ரெட்டியார் நல்லாப்பிள்ளையைக் கண்டு தமது நோக்கத்தைத் தெரியப்படுத்தினர். ஏதேனும் நூல்கள் இயற்றவேண்டும் என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்த நல்லாப்பிள்ளைக்கு ரெட்டியார் வேண்டுகோள் இரட்டை மகிழ்ச்சியை அளித்தது. அவர், "அப்படியே செய்யத் தொடங்குகிறேன்," என்று கூறிப் பாரதத்தை வடமொழியில் இருந்து மொழிபெயர்த்துப் பாடத் தொடங்கினர். அப்போது அவருக்கு அகவை இருபது தான்.

பாரதம் பாடுதல்

நல்லாப்பிள்ளை, வடமொழிப் பாரதம் பெருந்தேவனர் பாரதம் வில்லி பாரதம் ஆகியவைகளை நன்கு ஆராய்ந்தார். வில்லி பாரதத்தில் விடுபட்ட கதைகளையெல்லாம் முற்றிலும் பாடினர். வில்லிபுத்தூரார் சுருக்கமாகப் பாடியவைகளைத் தாம் பெருக்கமாக்கினர். வில்லிபுத்தூரார் பாடல்களையும் சேர்த்துக்கொண்டார்.

அந்நாளில் பாண்டிநாட்டில் முருகப்ப உபாத்தியாயர் என்னும் புலவர் ஒருவர் இருந்தார். அவர் நல்லாப்பிள்ளை

யோடு உடன் படித்தவர். நல்லாப்பிள்ளை பாரதம் பாடுஞ் செய்தியை அவர் அறிந்தார். தாமும் நல்லாப்பிள்ளையோடு சேர்ந்து பாரதத்தை இயற்றவேண்டும் என்று எண்ணினார். அவர் உடனே புறப்பட்டு நல்லாப்பிள்ளையிடத்திற்கு வந்து சேர்ந்து தமது நோக்கத்தைத் தெரியப்படுத்தினார். நல்லாப்பிள்ளை மிகுந்த மகிழ்ச்சியுடன் அவரையும் பாரதம் பாடும் பணியில் பங்காளியாகச் சேர்த்துக் கொண்டார். முருகப்ப உபாத்தியாயர் தாமுஞ் சேர்ந்து பாரதத்தைப் பாடினார். பாரதம் மிகவிரைவில் முற்றுப்பெற்றது.

அரங்கேற்றம்

பாரதம் முற்றுப் பெற்ற செய்தியை ரெட்டியார் அறிந்து மிகுந்த மகிழ்ச்சி கொண்டார். காஞ்சிபுரம் வரதராசப் பெருமாள் சந்நிதியில் நல்லாப் பிள்ளையின் பாரதம் அரங்கேறுவதற்குச் சிறப்பான ஏற்பாடு செய்தார். நல்லாப்பிள்ளை தம் நண்பருடன் காஞ்சிக்குச் சென்று பாரதத்தைச் சிறப்பாக அரங்கேற்றி முடித்தார். கேட்டு மகிழ்ந்த புலவர்கள் சாற்றுக்கவி பாடிச் சிறப்புச் செய்தனர். ரெட்டியார் நல்லாப்பிள்ளைக்கும் முருகப்ப உபாத்தியாயருக்கும் பொருளும் ஆடைகளும் வழங்கிச் சிறப்புறச் செய்தனர்.

செய்யுள் தொகை

நல்லாப்பிள்ளை பாரதம் பதினோராயிரத்து எழுநூற்று இருபத்தெட்டுப் பாக்களைக் கொண்டது. இவற்றுள் வில்லிபுத்தூரார் இயற்றியது நாலாயிரத்து முந்நூற்றைம்பது. வில்லிபுத்தூரார், நல்லாப்பிள்ளை, முருகப்ப உபாத்தியாயர் என்னும் மூவரால் முடியப் பெற்றிருந்தும் நல்லாப்பிள்ளை ஒருவர் பெயரால் ‘ நல்லாப்பிள்ளை பாரதம் ’ என்று வழங்குவதற்குக் காரணம் பெரும்பான்மையான செய்யுட்களை

நல்லாப் பிள்ளை இயற்றியமையேயாகும். நல்லாப்பிள்ளையினால் முற்கூறிய தேவசேனை புராணம், பாரதம் ஆகிய இரண்டைத் தவிர வேறு நூல்கள் செய்யப் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை.

பூவெலாம் சுரும்பின் ஓசையே பொய்கைப்
புனலெலாம் ஓதிமக் குழுவே,
காவெலாம் குயிலின் கூக்குரல் ஒலியே
கடலெலாம் நிதிதரு கலமே,
தாவெலாம் கலாப மஞ்ஞையின் நடமே
தடமெலாம் தந்திகள் நெருக்கே,
நாவெலாம் மறையோர் ஆரண ஒலியே
நற்குரு நாட்டினுள் அம்மா.

என்பது நல்லாப்பிள்ளையின் பாடல்

## உ0. வீரமாமுனிவர்

*பிறப்பும் பெயரும்*

இத்தாலிய நாட்டில் வெனிஸ் மாகாணத்தில் காஸ்திகிளியோன் என்னும் சிற்றூரில் 1680-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 8-ஆம் நாள் வீரமாமுனிவர் பிறந்தார். இவருடைய தந்தையார் பெயர் கொண்டல்போ பெஸ்கி. தாயார் பெயர் எலிசபெத். வீரமா முனிவருக்கு இடப்பட்ட பிள்ளைப் பெயர் கான்ஸ்டான்ஷியுஸ் ஜோசப் பெஸ்கி. பெஸ்கி என்பது இவருடைய குடிப்பெயர். கான்ஸ்டான்ஷியுஸ் தமிழ் நாட்டிற்கு வந்தவுடன் தம் பெயரைத் தமிழ்ப் படுத்தித் தைரியநாதன் என்று மாற்றினார். தைரியம் என்னும் சொல் வடமொழி என்று கருதிப் பின் வீரமாமுனிவர் என்று அமைத்துக் கொண்டார்.

கல்வியும் தொண்டும்

இளமைக் காலத்தில் கற்க வேண்டிய கல்வியை நன்கு கற்ருர். தாம் பிறந்த கிறித்து சமய வளர்ச்சிக்கு உழைக்க வேண்டும் என்னும் அவா இவருக்கு உண்டாகியது. தம் எண்ணத்தைத் தாய் தந்தையர்கட்குத் தெரியப்படுத்திஞர். மைந்தனுடைய எண்ணத்திற்குப் பெற்ருேர்கள் ஆதரவு தந்தனர். தமது பதினெட்டாவது ஆண்டில் துறவியாகி ஏசு சபையில் சேர்ந்தார். சமய நூல்களைக் கற்றுணர்ந்து 1706-ஆம் ஆண்டில் திருமறைக் குரு என்று பட்டம் பெற்ருர். இந்தியாவை யடைந்து தொண்டு செய்ய வேண்டும் என்னும் எண்ணம் பெஸ்கிக்கு இருந்தது. தமது நோக்கத்தைத் திருச் சபைத் தலைவர்கட்குத் தெரியப்படுத்திஞர். அவர்கள் 1711-ஆம் ஆண்டில் பெஸ்கியை இந்தியாவுக்கு அனுப்பிவைத்தார்கள். கப்பலேறி மேற்குக் கடற்கரையில் உள்ள கோவா நகரத்திற்கு வந்து சேர்ந்தார். அங்குச் சிலநாள் தங்கிப் பிறகு கொச்சியை அடைந்தார். கொச்சியின் அண்மையில் உள்ள அம்பலக் காடு என்னும் இடத்திற்குச் சென்று அங்கிருந்த திருமடத்தில் சில நாள் தங்கிஞர்.

பிறகு தமிழ்நாட்டிலே சுற்றத் தொடங்கிஞர். திருநெல்வேலி, பாளையங் கோட்டை, தூத்துக்குடி, கயத்தாறு முதலிய பல விடங்களுக்குச் சென்ருர். ஆங்காங்கிருந்த அறிஞர்களிடத்தில் தமிழ்மொழியைக் கற்ருர். தமிழ் நாட்டுப் பழக்க வழக்கங்களை மக்களுடன் நெருங்கிப் பழகி அறிந்து கொண்டார்.

இந்திய நாடெங்கும் சுற்றிய வீரமாமுனிவருக்கு இந்திய நாட்டு மொழிகளாகிய பார்சி, இந்துஸ்தானி, தெலுங்கு, மலையாளம், கன்னடம் முதலிய பிற மொழிகளினும் பயிற்சியுண்டாயிற்று. தாய் மொழியாகிய இத்தா

லிய மொழியோடு கிரேக்கம், எபிரேயம், இலத்தீன், பிரஞ்சு ஆகிய மொழிகளில் புலமை மிகுதியும் உண்டு இத்தாலிய ரான வீரமாமுனிவருக்குத் தமிழ்நாட்டுப் பழக்க வழக்கங்கள் நன்றாகப் பிடித்தன. இந்த நாட்டுப் பழக்க வழக்கங்களை மேற்கொள்ளத் தொடங்கினார். சைவர்களான தமிழ்ச் சமையல்காரர்களைச் சமையலுக்கு ஏற்படுத்திக் கொண்டார். புலால் உணவை அறவே நீக்கிச் சைவரானார். நாள்தோறும் ஒருவேளை மட்டும் உண்ணுதலை மேற்கொண்டார். தமது கோலத்தையும் இந்தியப் பண்பாட்டிற்கு ஏற்றபடி மாற்றிக் கொண்டார். நெற்றியிற் சந்தனப் பொட்டு வைத்துக்கொள்வார். தலையிலே பட்டுக் குல்லா அணிவார். இடுப்பிலே காவியாடை கட்டிக் கொள்வார். திருநெல்வேலிக் கம்பிச் சோமனைப் போர்வையாகப் போர்த்திக் கொள்வார். கால்களிலே மிதியடிகளைப் போட்டுக் கொள்வார். வெளியே புறப்படும்போது முனிவரின் கோலம் இன்னும் சிறந்து விளங்கும். இவர் தமிழ்நாட்டோடு ஒன்றுபட்டுத் தம்மை முழுத் தமிழராகவே மாற்றிக் கொண்டார்.

### தமிழ்ப் பயிற்சி

பலரிடத்திலும் தமிழ்மொழியைச் சிறிது சிறிது கற்ற வீரமாமுனிவர், சுப்பிரதீபக் கவிராயரிடத்திலே சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, தொல்காப்பியம், கம்பராமாயணம் முதலிய நூல்களை வரன்முறையாகப் பாடங்கேட்டுணர்ந்தார். திருக்குறளிடத்திலே வீரமாமுனிவர் பெரும் பற்றுக்கொண்டிருந்தார்.

### சமயத்தொண்டு

முதலில் வீரமாமுனிவர் ஓரிடத்திலும் நிலையாகத் தங்கி யிருக்கவில்லை. ஊரூராகச் சுற்றிச் சமயச் சொற்

பொழிவுகள் செய்து தமிழர்களைக் கிறித்துவர்களாக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார். இந் நாளில் இவருக்குச் சில பகைவர்களும் ஏற்பட்டார்கள். 'குருக்கள் பாடி' என்னும் இடத்தில் இருக்கும்போது வீரமாமுனிவருக்குத் தொல்லை யொன்று ஏற்பட்டது. மக்களிற் சிலர் முனிவருக்குப் பகை யானார்கள். அந் நாளில் மதுரை நாயக்கர் படையினர் வரி வசூல் செய்வதற்கு அவ்வூருக்கு வந்திருந்தனர். மக்கள் பலர் படையினரிடம் போய் "வீரமாமுனிவர் கிறித்துவ மதத்தில் சேருமாறு தம்மைத் துன்புறுத்துகின்றார்." என்று கோளுரை புகன்றனர். படைத் தலைவனாக வந்திருந்த எல்லமராசன் என்பவன் முனிவரையும் அவர் துணைவர்களையும் கைதியாக்கி வருமாறு வீரர்களை அனுப்பினான். வீரர்கள் வீரமாமுனிவரை விரைவிற் பற்றிப்போய் எல்லமராசன் முன்பு நிறுத்தினர். எல்லம ராசன் கேட்ட கேள்விகட்கு வீரமாமுனிவர் விறைப் பாகப் பதிலுரைத்தார். எல்லமன் வெகுண்டான். எல் லோரையுந் துன்புறுத்தினான். ஒருவரைச் சித்திரவதை செய்தான். வீரமாமுனிவர்மீது பல குற்றங்களைச் சாட் டித் தூக்குத் தண்டனை விதித்தான். மறுநாள் காலையில் தூக்கிலிடுவதற்கு ஏற்பாடாயிற்று. கொலை செய்யுமிடத் திற்கு அழைத்துச் செல்லப்பட்டார். கழுத்தில் சங்கிலியும் மாட்டியாயிற்று. இச் சமயத்தில் எதிர்பாராத நிகழ்ச்சி யொன்று நடந்தது. இராச வம்சக் கிறித்துவர்கள் சிலர் வந்தனர். எல்லமனைக் கண்டனர். தங்கள் தலைவர் தலை போனால் தாங்களும் உயிரைவிட நேரிடுமென்றும், வீரமா முனிவர் எத்தகைய தவறுஞ் செய்தவர் அல்லர் என்றும் மன்றாடினர். படைத்தலைவன் அவர்களுடைய வேண்டு கோளைத் தட்ட முடியவில்லை. எல்லோரும் விடுதலை செய் யப்பட்டனர். மேலும் அந்நாளில் நாடெங்கும் இருந்த

கிறித்துவ போதகர்களும் சிற்றரசர்களாலும் படைத் தலைவர்களாலும் பலவகையான தொல்லைகட்கு உள்ளாயினர்.

திருக்காவலூர்

திருச்சிமாவட்டத்தில் உடையார்பாளையம் கூற்றத்தில் ஏலாக்குறிச்சி என்னும் சிற்றூர் உள்ளது அதில் கிறித்துவர்களுடைய கோயில் ஒன்று உண்டு. 1716-ஆம் ஆண்டில் வீரமாமுனிவர் ஏலாக்குறிச்சிக்குச் சென்றார். அவ்வூர்க் கோயிலின் அறச்செயல்களை மேற்கொண்டார். கோயிலை நல்ல முறையில் அமைத்தார் ஆண்டுதோறும் திருவிழாவும் செய்தார். ஏலாக்குறிச்சி திருக்காவலூர் என்னும் பெயருடன் சிறந்து விளங்கலாயிற்று. பலவிடங்களினுமிருந்த கிறித்துவர்கள் திருக்காவலூரை அடைந்து வீரமாமுனிவரிடம் அருளுரைபெற்றுச் சிறப்படைந்தனர்.

திருக்காவலூர் அரியலூர் பெருநிலக்கிழார் இரங்கப்ப மழவராயர் என்பவருக்கு உரிமையாக இருந்தது. அந்த மழவராயர் வீரமாமுனிவருடைய அறிவுத்திறனையும் நல்லொழுக்கத்தையும் கேட்டு மகிழ்ந்தார். நேரில் கண்டும் உரையாடினார். கோவிலுக்குச் சில இனாம் நிலங்களும் வழங்கினார்.

நூல்கள் இயற்றல்

வீரமாமுனிவர் தமிழ்ப்பாக்களை நன்கு பாடக்கூடிய ஆற்றல் பெற்றிருந்தார். திருக்காவலூர்க்கோவிலில் எழுந்தருளிய கன்னிமரியின்மீது கலம்பகம் ஒன்று பாடினார். மற்றும் அடைக்கல நாயகிமேல் கலி வெண்பா, அடைக்கல மாலை, உலா என்னும் நூல்களும் இயற்றினார். அவ்விடமே நிலையாகத் தங்கிய முனிவர் நூல்கள் பலவற்றை இயற்றலானார். சூசையப்பரின் வரலாற்றை விரித்துக் கூறுவதான தேம்பாவணி என்னும் நூலை 3615 விருத்தப்

பாக்களால் பாடினார். வீரமாமுனிவர் காலத்தில் தமிழ் மொழியில் அகரவரிசை நூல்கள் இல்லை வீரமாமுனிவர் இந்தக் குறையைப் போக்க எண்ணினார் சதுர அகராதி என்னும் பெயருடன் அகராதி ஒன்றைத் தொகுத்து முடித்தார். தமிழில் அகரவரிசை நூல்கள் இயற்றும் வழக்கம் இதற்குப் பிறகுதான் உண்டாயிற்று. தமிழ் இலத்தீன் அகராதி ஒன்றும், போர்த்துக்கீசியம் தமிழ் இலத்தீன் அகராதி ஒன்றும் செய்தார். இவைகள் பிற மொழி கற்பவர்கட்குப் பேருதவியாக அமைந்தன. தொன்னூல் விளக்கம் என்னும் இலக்கண நூல் ஒன்றையும் முனிவர் எழுதினார். தமிழ்மொழியில் வேறு பல சிறந்த அகராதிகள் தோன்றியபடியால் இன்று சதுர அகராதி பெயரளவில் இருக்கிறது. தொல்காப்பியம் போன்ற அரிய இலக்கண நூல்கள் இருத்தலால் முனிவருடைய தொன்னூல் விளக்கமும் பெயரளவிலேயே இருந்துகொண்டிருக்கிறது.

வீரமாமுனிவர் காலத்தில் தமிழ்மொழியில் உரைநடை நூல்கள் அதிகமாக இல்லை. இருந்த சில உரைநடை நூல்களும் நீளமான மொழித்தொடராக விளங்கின. முனிவர் இக்குறையைப் போக்குதற்குப் பரமார்த்த குரு கதை முதலிய உரைநடை நூல்களை எழுதி வழிகாட்டினார். இந்நாளில் உரைநடை நல்வளர்ச்சியடைந்து சிறந்து விளங்குகிறது.

இறுதி

வாணாள் முழுவதையும் சமயத்தொண்டிற்கும் தமிழ்த்தொண்டிற்குமே செலவிட்ட வீரமாமுனிவர் 1747-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 4-ஆம் நாள் தம் அறுபத்தாறுவது அகவையில் அம்பலக்காட்டுக் குருமடத்தில் இறைவன் திருவடி நீழலையடைந்தார்.

இயற்றிய நூல்கள்

1. தேம்பாவணி
2. தொன்னூல் விளக்கம்
3. திருக்காவலூர்க் கலம்பகம்
4. பரமார்த்த குருகதை
5. அடைக்கலநாயகி கலி வெண்பா
6. அடைக்கலநாயகி மாலை
7. அடைக்கலநாயகி உலா
8. அன்னை அழுங்கல் அந்தாதி
9. கருணாம்பரப்பதிகம்
10. கித்தேரியம்மாள் அம்மானை
11. சதுர அகராதி
12. வேத விளக்கம்
13. வேதியர் ஒழுக்கம்

என்னும் இவைகளும் இவைபோன்ற வேறு சில நூல்களும் வீரமாமுனிவரால் இயற்றப் பெற்றுள்ளன.

## உக அழகிய சொக்கநாதபிள்ளை

தோற்றமுங் கல்வியும்

தென்பாண்டி நாட்டிலே திருநெல்வேலிக்கு வடக்கேயுள்ள தச்சநல்லூரிலே ஏறக்குறைய நூறுயாண்டுகட்கு முன்னர் அழகிய சொக்கநாதபிள்ளை தோன்றினார். இவருடைய குலம் சைவவேளாளர் குலம். தந்தையாருடைய பெயர் வன்னியப்பிள்ளை. வன்னியப்பிள்ளை ஆனைமுகக் கடவுளிடத்தில் பேரன்புடையவர். இலக்கிய இலக்கணங்களை வழுவறக் கற்றுக் கல்வியறிவிற் சிறந்து விளங்கினார். தந்தை மகற்காற்ற வேண்டிய கடமையை நன்குணர்ந்த வன்னியப்பிள்ளை தம் பிள்ளையையும் தம்போல் அறிவாளி

யாக்கினர். ஆகவே, அழகிய சொக்கநாதபிள்ளை இளம் பருவத்திலேயே முதுபெரும்புலவர்போற் சிறந்து விளங்கினர். அழகிய சொக்கநாதபிள்ளை தம் தந்தையாரிடத்தே கல்வி கற்றுத் தேர்ந்தவரென்பது,

கனிதரு பெருங்கருணை மருவுபதி னொருகரக்
　　கணபதியை அநவ ரதமும்
கருதலிற் பெறுபயன் அநந்தத்துள் ஒன்றெனக்
　　கடையனேன் தனையு மகவென்று
இனிதுபெற் றருமையின் வளர்த்துப் படிப்பித்
　　திகத்தொடு பரத்தும் இன்பம்
எய்தவருள் உபதேசம் உதவுசற் குருவான
　　எந்தைதாள் சிந்தை செய்வாம்.

என்னும இவருடைய பாடலால் விளங்குகின்றது.

அலுவலும் ஊதியமும்

அறிஞர்களை வாட்டும் வறுமை அழகிய சொக்கநாதரையும் இளமையிலேயே பற்றியது. அதன் அல்லலைப் போக்க அலுவல் ஒன்று தேடினர். திருநெல்வேலி முனிசிபுக்கோர்ட்டில் பார்த்தெழுதும் வேலை அகப்பட்டது. அவ் வேலைக்கு அந்நாளில் திங்கள் ஒன்றுக்கு ரூபா பத்து. அக் கால நிலைமைக்கும் வாழ்க்கைச் செலவிற்கும் அப் பத்து ரூபா மிகப்பெரிய ஊதியமாக விளங்கியது. ஆகவே, சொக்கநாதர் மிக மனநிறைவுடன் வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தார்.

மாசம்பத்து

அழகிய சொக்கநாதரைப் பார்த்து யாரேனும், "தங்கட்கு ஊதியம் எவ்வளவு" என்று கேட்பின் சொக்கநாதர் உடனே, "மாசம்பத்து" என்று மறுமொழி கூறுவார். இம்மறுமொழி மாசம் பத்து ரூபா என்று

பொருளாவதோடு மா சம்பத்து, பெருஞ்செல்வம் என்றும் பொருள்படுதலைப் பார்த்து மற்றவர்கள் மிகுந்த மகிழ்ச்சியடைந்து அறிஞரின் சொல்லாற்றலை வியந்து புகழ்வர்.

சுருக்கினான்

அழகிய சொக்கநாதபிள்ளை வேலைபார்த்துக்கொண்டிருந்த கோர்ட்டிலே ஒரு வேலை காலியாயிற்று. அதனைப் பெறுதற்குப் பலர் விரும்பி விண்ணப்பம் போட்டனர். முனிசிப் ஒருவனை அழைத்தார் அவனிடம் மனு ஒன்றைக் கொடுத்து, "இதனைச் சுருக்கி எழுதிக்கொண்டு வா. உன் அறிவுத்திறமையைப் பார்ப்போம்", என்று கூறினார். அந்த மனிதன் செய்தியைச் சுருக்காமல் இடத்தைச் சுருக்கி எழுதிவந்து முனிசிப்பிடம் கொடுத்தான். அதனைப் பார்த்த முனிசிப் நகைத்து, "நான் சுருக்கி எழுதச் சொன்னேன். நீ அப்படிச் செய்யக்காணோமே" என்று கேட்டார். அப்பொழுது அண்மையில் இருந்த அழகிய சொக்கநாதர், "கோர்ட்டார் சொன்னபடிதான் இவர் செய்திருக்கிறார். கோர்ட்டார் சொன்னது செய்திச் சுருக்கம். இவர் செய்திருப்பது இடச் சுருக்கம்", என்றார். இதனைக்கேட்டு முனிசிபும் அங்கிருந்தவர்களும் நகைத்தார்கள். முன்சிப் சொக்கநாதரின் அறிவுத் திறமையைப் பாராட்டினார்.

பொடிவைத்து நகை செய்தல்

அழகிய சொக்கநாதரோடு ஒரு சமயம் பல நண்பர்கள் சேர்ந்து உரையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுள் பொடிப்போடும் பழக்கம் உடையவர் ஒருவரும் இருந்தார். அவர் ஒருமுறை பொடிடப்பியைக் கீழேவைத்த பொழுது வேறொரு நண்பர் அந்த டப்பியை எடுத்து

மறைத்துக்கொண்டார். பொடி டப்பி அன்பரோ பொடிப் போடுவதற்கு டப்பியைத் தேடினார். துணிமணிகளை யெல்லாம் உதறினார். காணமற்போகவே பதறினார். அவரது நிலைமையைக்கண்டு அங்கிருந்தவர்கள் இரங்கினார்கள். பொடி டப்பியை மறைத்துக்கொண்ட அன்பர் பத்தர்மரபினர். பொடிடப்பிக்காரரின் திண்டாட்டத்தைக் கண்டு அவர் நகைத்தார். பொடிடப்பி அவரிடம் இருக்கிறதென்பதை ஊகித்துக்கொண்ட சொக்கநாதர் அந்த நண்பர் முகத்தைப்பார்த்து, "தாங்கள் பொடி வைத்துத்தான் நகை செய்கிறீர்களா ?" என்று கேட்டார். இம்மொழி இரு பொருள் பயந்ததைக் கண்டு அங்கிருந்தவர்கள் நகைத்தனர். பத்தரோ, "இந்தாருங்கள்" என்று கூறிப் பொடிடப்பியைக் கொடுத்து விட்டார்.

முத்துசாமிப் பிள்ளை நட்பு

அந்நாளில் முத்துசாமி பிள்ளை என்னும் பெருஞ் செல்வர் சிறந்த வள்ளலாக விளங்கினார். அழகிய சொக்கநாதர் அறிவாற்றலும் உரையாடல் வன்மையும அவருடைய உள்ளத்தைக் கவர்ந்தன. இருவருக்கும தொடர்ந்த நட்பு உண்டாகியது; இருவரும இணைபிரியா நண்பர்களாயினர். இவர்களின் கூட்டுறவு மற்றவர்கட்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. அறிஞரும் செல்வரும் இவ்வாறு நட்புக் கொள்ளும் புதுமையும் உண்டோ என்று அவர்களின் பண்பைக்கண்ட புலவர்கள் புகழ்ந்து பலவாறு பாடலாயினர். ஒரு புலவர்,

"பூமகளும் நாமகளும் மாதரெனப்
புகல்குறைவு போதல் அன்றி,
மாமிமரு மகளாத லாற்பகைஞர்
எனும்வசையும் மாற வேண்டித்,

தாமுயரா டவராநன் னேயரா
உலகின்முத்துச் சாமி யென்றும்,
தோமில்அழ கியசொக்க நாதனென்னும்
பெயர்பெற்றுத் தோன்றி னூரால்."

என்று பாடிக் களிகூர்ந்தார். அழகிய சொக்கநாதர் தமது நகைச்சுவை மிக்க உரையாடல்களால் முத்துசாமிப் பிள்ளையைக் களிப்பென்னுங் கடலில் அமிழ்த்திக் கொண்டிருந்தார்.

மிருதங்கக்காரன்

கைதேருத மத்தளக்காரன் ஒருவன் ஒருநாள் மத்தளத்தைத் தொப்புத்தொப்பென்று அடித்துக்கொண்டு முத்துசாமிப் பிள்ளையிடம் நன்கொடை பெறுவதற்கு வந்தான். அவன் மத்தளத்தை அடித்த மாதிரி எல்லோருக்கும் மிகுந்த நகைப்பை உண்டாக்கியது. கூடையோடு தெருவிற் சென்றுகொண்டிருந்த சில பெண் களும் சிறுவர்களும் வந்து அவன் மத்தளம் அடிப்பதை வேடிக்கை பார்த்தனர். அப்போது முத்துசாமிப் பிள்ளை யோடிருந்த அழகிய சொக்கநாதர்,

"எங்கண்முத்து சாமீமன்னு இங்கே ஒருவன்மிரு
தங்கமதை ஓயாமல் தட்டினுன்—அங்கங்கே
கூடிநின்ற பெண்களெருக் கொள்வதற்குக் கூடையெடுத்
தோடிவந்தார் நீ பார்த்தா யோ."

என்று சொல்லிப்பாடினுர். இதனைக்கேட்டு முத்துசாமிப் பிள்ளையும் அவையில் இருந்த பிறரும் விழுந்து விழுந்து நகைத்தனர்.

பாதிரி

ஒருநாள் சொக்கநாதப் பிள்ளை முத்துசாமிப் பிள்ளை யைப் பார்த்து, முதலெழுத்து இல்லாவிட்டால் விளக்கிற் போடுவதாகும். இடையெழுத்து இல்லாவிட்டால் மனைவி

யின் பேராகும், கடையெழுத்தில்லாவிட்டால் அரையின் பேராகும்; மூன்றெழுத்தால் ஆகிய இம்மொழி கிறித்து மத குருவின் பெயராக இருப்பதுடன் ஒரு மரத்தின் பெயராகவும் இருக்கிறது. அம்மொழி எது என்பதைக் கூறுங்கள் பார்ப்போம் என்னும் கருத்தை அமைத்து,

"முருகனேகர் முத்துசாமி முதலெழுத் தில்லா விட்டால்
இரவிடு விளக்கிற் சேரும் இடையெழுத் தில்லா விட்டால்
கருணைசேர் மனைவி பேராம் கடையெழுத் தில்லா விட்டால்
அரையின்பே ரதுகி றித்து மதக்குரு மரத்தொன் றாமே."

என்று பாடினார்.

இதிற் குறிக்கப்பெறுகிற மொழி பாதிரி; விளக்கிற் சேர்வது திரி, மனைவிபேர் பாரி, அரையின் பேர் பாதி. மற்றும் விடுகவிகளாக;

புதையல்

"முற்பாதி போய்விட்டால் இருட்டே யாகும்
முன்னெழுத்தில் லாவிட்டால் பெண்ணே யாகும்,
பிற்பாதி போய்விட்டால் ஏவற் சொல்லாம்
பிற்பாதி யுடன்முன்னெழுத் திருந்தால் மேகம்
சொற்பாகக் கடைதலையின் மிருகத் தீனி
தொடர்இரண்டாம் எழுத்துமா தத்தில் ஒன்றாம்
பொற்பார்திண் புயமுத்துச் சாமி மன்னா
புகலுவாய் இக்கதையின் புதையல் கண்டே."

முற்பாதி போய்விட்டால், அல் - இருள்,
முன்னெழுத் தில்லாவிட்டால், தையல் - பெண்
பிற்பாதிபோய்விட்டால், புதை - புதையென் னேவல்,
பிற்பாதியுடன் முன்னெழுத்து, புயல் - மேகம்,
சொற்பாகக்கடையும் தலையும், புல் - விலங்குணவு,
இரண்டாம் எழுத்து மாதத்தில் ஒன்று, தை - தைமாதம்.

ஈ

"வெள்ளனத்து மீதேறும் பிரமன் அல்ல
மேனிகறுப் பாயிருக்கும் மாலும் அல்ல,
தள்ளரிய வறுகாற்பூ சிக்க நாடும்
சங்கரனும் அல்லவிடம் தலையிற் கொண்டும்
தெள்ளுமதன் உயிர்போகா தெந்த நாளும்
சிறையிருக்கும் விடுதலையாய்ச் செகத்து லாவும்
பள்ளிகொள்ளு முகுந்தனிகர் முத்துச் சாமிப்
பாண்டியனே இக்கதையின் பயன்நீ சொல்லே."

இச்செய்யுளிலும் இறுதியில் விடை அமைந்துள்ளது. ஈ உணவின்மீது ஏறும்; உடல் கருநிறம் உடையது. தேனின் பொருட்டு மலரைத்தேடும். ஈக்கு விடம் தலையில். அதற்குச் சிறகும் உண்டு. அஃது எங்கும் பறந்து திரியும். இத்தகைய விடுகதைப் பாடல்களேயல்லாமல் இருபொருள் தருமாறு சிலேடையாகப் பாடுவதிலும் இவர் வல்லவர். முத்துசாமிப்பிள்ளையை முன்னிலைப் படுத்திச் சிவனுக்கும் திருமாலுக்கும், சிவனுக்கும் தேங்காய்க்கும், சிவனுக்கும் வாழைப்பழத்திற்கும், திருமாலுக்கும் கைக்கடிகாரத்திற்கும், மன்மதனுக்கும் நெருப்புக்கும், வேசைக்கும் சவுளிக்கடைக்கும், வேசைக்கும் நாய்க்கும், வேசைக்கும் பேய்க்கும், கள்ளனுக்குஞ் செருப்புக்கும், மயிலுக்கும் கரும்புக்கும், ஒட்டுத்திண்ணைக்கும் கழுத்தணிக்கும், மரத்திற்கும் பீற்றற் குடைக்கும், இவர் பாடியுள்ள சிலேடைப் பாடல்கள் படிப்பவர்கட்கு மிகுந்த களிப்பையூட்டுவனவாம்,

பறவைகளின் பெயர்

பறவைகளின் பெயரை அடைமொழிகள் இல்லாமல்,

"சக்கரவா கங்கிளியாந் தைநாரை அன்னங்க
ரிக்குருவி கௌதாரி காடையன்றில்—கொக்கு
குயில்கருடன் காக்கைபுறு கோழியிரா சாளி
மயில்கழுகு கோட்டான்வௌ வால்."

என்று பாடியுள்ளார்.

பூச்செண்டு

அழகிய சொக்கநாதர் ஒருநாள் காந்திமதியம்மை கோயிலுக்குச் சென்றார். அம்மையைத் தொழுது வாழ்த்தினார். பிறகு ஓரிடத்தில் நின்று வரம் வேண்டும் பாவனையில் கண்களை மூடிக் கைகளை நீட்டி ஏந்திக் கொண்டிருந்தார். அப்போது ஒரு செல்வர் உள்ளே போய் அம்மையைத் தொழுதார். அருச்சகர் அச்செல்வரின் கையிலே ஒரு பெரிய பூச்செண்டைக் கொடுத்தார். அப் பூச்செண்டுடன் செல்வர் வெளியே வந்தார். கைகளை ஏந்தியவாறு புலவர் கண்மூடி நின்றிருந்ததலைக் கண்டார். அவர் கைகளிலே பூசசெண்டை வைத்து விட்டார். அழகிய சொக்கநாதர் கண்களைத் திறந்து பூச்செண்டைக் கண்டார். அம்மை வழங்கியதாக உள்ளங்களித்து மகிழ்ந்தார். பின்பு ஒருநாள் இதனை எண்ணி,

"இணங்கொடுக்க நெறிசிறிதும் இல்லா நாயேன்
இசைத்தபிள்ளைக் கவிமாலை எத்திக் கும்போய்
மணங் கொடுக்க நயந்தினிது வனைந்து கொண்ட
வண்கருணை நினைந்துருகி வழுத்து மோர்நாள்
பணங்கொடுக்க துளசேனும் பாம்பும் பாலப்
பாழ்த்தவறு மையுங்கடனும் படுத்து நின்ற
கணங்கொடுக்க மொழியும்வண்ணம் கைச்செண் டீந்த
காந்திமதித் தாயென்னைக் கைவி டாளே."

என்று பாடினார்.

சமகாலப் புலவர்கள்

கவிராச நெல்லையப்ப பிள்ளை, வேம்பத்தூர்ப் பிச்சுவையர், கல்போது புன்னைவனக் கவிராயர், முகவூர்க் கந்தசாமிக் கவிராயர், ககவூர் இராமசாமிக் கவிராயர், சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார், முத்துவீருப் புலவர், கந்தசாமிப் புலவர், திருநெல்வேலி முத்துப் புலவர் முதலியவர்கள்

அழகிய சொக்கநாத பிள்ளை காலத்திருந்த சிறந்த புலவர்களாவர்.

இவரியற்றிய நூல்கள்

1. காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ்
2. பதசாகித்தியங்கள்
3. சிங்காரப்பதம்
4. அநவரததானநாதர் பதிகம்
5. காந்திமதியம்மை பதிகம்
6. காந்திமதியம்மை கலித்துறையந்தாதி
7. நெல்லைநாயக மாலை
8. முத்துச்சாமி பிள்ளை காதற்பிரபந்தம்
9. சங்கரநயினார் கோயில் அந்தாதி
10. ஸ்ரீவில்லிபுத்தூர்க் கோதையந்தாதி

முதலிய நூல்களும் தனிப்பாடல்கள் பலவும் அழகிய சொக்கநாத பிள்ளையவர்களால் செய்யப் பெற்றுள்ளன.

பாநயம்

இவருடைய பாடல்கள் எவ்வகையிலும் புதுமையுடையனவாகவே இருக்கும்.

"வெள்ளரிக் காயா விரும்புமவ ரைக்காயா
உள்ளமிள காயா ஒருபேச் சுரைக்காயா ?"

இவ்வடிகளில், வெள்ளரிக்காய், அவரைக்காய், மிளகாய், பேச்சுரைக்காய் முதலியவைகளைப் பார்க்கிறோம். ஆனால், இவ்வடிகளின் பொருள்,

வெள் அரிக்கு ஆயா—வெண்ணிறமுடைய திருமாலுக்கு (அவர் நரசிங்கமாகத் தோன்றிய தூணை) தாயா? (தூணைப்போல் பேசாமல் இருக்கிறயே நீ தூணு) விரும்பும் அவரைக்காயா உள்ளம் இளகாயா—உன்னை விரும்புவோரை இயல்பாகச் சினவாத மனம் என்பால் இளக

மாட்டாயா? ஒருபேச்சு உரைக்காயா—ஒருமொழி சொல்ல மாட்டாயா என்பதாம்.

இறுதி

புலவர் திலகராய் விளங்கிய இவர் நல்லறிஞர்கள் உள்ளம் வருந்துமாறு 1885-ஆம் ஆண்டில் காலமானார்.

---

## உஉ. நமசிவாயப் புலவர்

தென்பாண்டி நாட்டிலே செங்கோட்டை என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே நமசிவாயப் புலவர் தோன்றினார். நமசிவாயப்புலவர் குழவியாயிருக்கையில் தானே அவருடைய பெற்றோர் காலமாயினர். உறவினர் சார்பிலே நமசிவாயப் புலவர் வளர்ந்து பள்ளிக் கல்வியையும் பயின்றார். அகவை இருபது நிரம்பியபோது திருமணமும் முடிந்தது. நமசிவாயப் புலவர் பாபவிநாசச் சிவப்பதியை அடைந்து அப் பதியிலே வாழ்க்கை நடத்தத் தொடங்கினார். நூல்களைப் படித்தல் இறைவழிபாடு புரிதல் முதலியவைகளைச் செய்துகொண்டிருந்தார். அப் பதியில் எழுந்தருளிய இறைவியின் பெயர் உலகாம்பிகை என்பது நமசிவாயப்புலவர் அந்த அம்பிகைமீது பேரன்பு கொண்டு வழிபாடு செய்திருந்தார்.

விக்கிரமசிங்கபுரம் என்னும் ஊர் பாபவிநாசப்பகுதிக்கு அணித்தாக உள்ளது. அப்பதியில் அந்நாளில் அருள்நலம் கைவரப்பெற்ற பெரியார் ஒருவர் எழுந்தருளியிருந்தார். நமசிவாயர் அப்பெரியவரைப் போற்றி வழிபட்டார். அப்பெரியவர் இறைவியின் மூலமறையை நமசிவாயருக்கு நவின்று அதனை உருவேற்றப் பணித்தார். நமசிவாயரும் அவ்வாறே உருவேற்றினார். அம்மையின்

அருளால் நன்மைகள் பல இம்மையே நமசிவாயருக்கு உண்டாகத்தொடங்கின அம்மையின் காட்சி புலவருக்குக் கனவின்கண் உண்டாகியது. கலைமகள் அருளும் புலவருக்கு மிகுதிப்பட்டது. சிங்கைவெண்பா முதலிய நூல்கள் பாடிச் சிறப்புடன் விளங்கியிருந்தார். புலவரின் கீர்த்தி பலவிடங்களினும் பரவியது. பாபவிநாசக்கோயில் சிங்கைக்கோயில் ஆகியவைகளில் பூசைக்குப்பிறகு அந்தணாளர்கட்கும் துறவிகட்கும் திருநீறு வழங்கியபின் நமசிவாயப்புலவருக்கு வழங்குதல்வேண்டும் என்னும் வழக்கமும் ஏற்பட்டது.

ஒரு காலத்தில் அரசன் ஒருவன் சிங்கைச் சிவன் கோயிலுக்கு வந்தான். அந்தணாளர்கட்கும் துறவிகட்கும் திருநீறு வழங்கிய பின் நமசிவாயப் புலவருக்கு வழங்குதலைக் கண்டான். அவருக்கு இச் சிறப்பு வழங்கக் காரணம் யாது என்று உசாவினான். நமசிவாயப் புலவர் தெய்வத்திருவருள் கைவரப்பெற்றவர் என்று பலரும் பகர்ந்தனர். ஆனால், அரசனுக்கு அச் செய்தியில் ஐயம் உண்டாயிற்று. அவன் நமசிவாயப் புலவரின் ஆற்றலை ஆராய்ந்துபார்க்க விரும்பினான். நமசிவாயப் புலவரைப் பார்த்து, "நீவிர் உம்முடைய பெருமையை எமக்குப் புலப்படுத்தவேண்டும். அவ்வாறு செய்யத் தவறுவீராயின், திருநீறு முதற்கண் பெறுஞ்சிறப்பு உமக்கு இல்லாமற் செய்வேன்," என்று கூறி வீம்புரையாடினான். கொற்றவன் கூற்றைக் கண்டு கற்றறி புலவர் சினங்கொண்டிலர் "ஓ அரசே! நீவிர் யாது செய்யவேண்டும் என்று கூறுகிறீர்? அதனைக் கூறுவீராயின் அவ்வாறே செய்வோம்," என்றார்.

அரசன் அறிஞரைப்பார்த்து, "உலகாம்பிகையின் திருக்கையில் உள்ள பூச்செண்டு எல்லோரும் பார்க்கும்

படி உம்முடைய கைக்கு வந்து சேருமாறு ஒரு செய்யுள் இயற்றும்," என்று கூறினன். அவ்வளவில் புலவர்,

"விண்டல நின்ற சரக்கால சோம சுவேதமுக
மண்டல முங்கை மலரோடுந் தோளில் வடிந்தரத்னக்
குண்டல மும்புனை வாலப் பிராயக் குமாரத்தியாய்ச்
செண்டலர் செங்கை உலகாளென் நாவிற் சிறந்தனளே"

என்று ஒரு செய்யுளைப்பாடினர். உலகாம்பிகையின் திருக்கையில் இருந்த பூச்செண்டு நமசிவாயப் புலவரின் கைக்கு எல்லோரும் பார்க்கும்படியாகச் சென்றது. இந் நிகழ்ச்சியைக் கண்ட அரசன் அஞ்சிக் கலங்கினன். கீழே விழுந்து புலவரை வணங்கினன். அங்குக் கூடியிருந் தவர்கள் யாவரும் புலவரை வணங்கிப் போற்றினர்.

பிறகு அரசன் நமசிவாயப் புலவரைப் பார்த்து, "ஆணவத்தினலே அடியேன் செய்த தவற்றினைப் பொறுத்தருளல் வேண்டும்," என்று வேண்டிக்கொண்டு பல நன்கொடைகள் வழங்கிச் சென்றான். இதன்பின் நமசிவாயப்புலவர் பெருமை மேலும் சிறந்து விளங்கியது.

ஒருநாள் வசைகவியாண்டான் கவிராயர் நமசிவாயப் புலவரைக்கண்டார். இருவரும் ஒருவர்மீது ஒருவர் வசை பாடி அழியவில்லை. சிறிதுபோது அளவளாவியிருந்து பிரிந்தனர்.

நமசிவாயப் புலவர் மனைவியோடு இல்வாழ்க்கையைச் சிறப்புற நடத்திக்கொண்டிருந்தார். தமது குலத்தொழி லாகிய பயிர்த்தொழிலையே நாளும் விரும்பிச்செய்தார். அவருக்கு அத்தொழிலில் பலவகையான அல்லல்கள் உண் டாயின. உழவுமாடுகள் சண்டிகளாயிருந்ததுடன் பண்ணை யாளும் பெருஞ்சண்டியாக இருந்தான். வயலோ மேட்டு நிலமாக அமைந்திருந்தது. புலவர் இவைகளைக் குறித்து,

"கயல்வாய்த்த கண்ணி உலகே உனது கருணையினால்
இயல்வாய்த்த தந்தைக்கு யான்வந்து வாய்த்ததும் என்றனக்கோர்
வயல்வாய்த்த துங்கள்ள மாடொன்று வாய்த்ததும் வம்புவள்ளப்
பயல்வாய்த்த துந்தமி யேன்முன்னை நாள்செய்த பாக்கியமே."

என்று ஒரு செய்யுள் பாடினார்.

தண்ணீரை நிலத்திற்குப் பாய்ச்சிக்கொள்ளும் செயலிலே இவருடைய பக்கத்து நிலத்துக்காரர்கள் இவருக்கு அடிக்கடி தொல்லையளித்தனர். தண்ணீர் பாயாதபடியால் ஒருமுறை இவருடைய நிலம் பலநாள் காய்ந்து பயிர்கள் வெய்யிலால் வாடின. நமசிவாயப்புலவர் உலகாம்பிகைமீது சில செய்யுட்கள் பாடித் தமது நிலத்திற்கும், தமக்கு வேண்டியவர்கள் சிலர் நிலத்திற்கும் மட்டும் மழை பெய்யச்செய்து கொண்டனர். இந் நிகழ்ச்சி பக்கத்து வயல் காரர்களுக்கும் பிறருக்கும் அச்சத்தை உண்டாக்கியது.

ஒருநாள் புலவர் இல்லத்திற்கு விருந்தினர் சிலர் வந்தனர். ஈயாப்பேயன் ஒருவனிடஞ் சென்று நமசிவாயப் புலவர் வாழையிலை கேட்டார். அத் தீயன் வாழையிலை கொடாமல், "உமது வீட்டுவாசலில் இருந்த ஒரு வாழை மரம் ஏன் பட்டுப்போயிற்று. நீவீர்தாம் கெட்டிக்காரராயிற்றே அது தழைத்து வளருமாறு ஒருபாட்டுப்பாடிக் கொள்ளக்கூடாதா?" என்று கூறிப் பலவாறு பேசினான். புலவர் தம் வீட்டு வாசலில் வாழைமரம் ஒன்று தழைத்து வளருமாறு இறைவியைப்பாடி அவ்வாறே ஆகப்

நமசிவாயப் புலவர் தலைமயிரை வளர்க்காமல் மொட்டையடித்த தலையினராக விளங்கியிருந்தார். ஒருநாள் சிலர் நமசிவாயப்புலவர் தலை மொட்டையடித்து விளங்குவதைக்குறித்துப் பலவாறு பேசி எள்ளி நகையாடினர். அப்பொழுது நமசிவாயப் புலவர்,

"தட்டுப் படாதுள் ளழுக்கடை யாது கனத்தசண்டைக்கு
எட்டுக் கொடாது நல் எண்ணெய்செல் லாதிள மாதர்கையால்
குட்டுப்பட் டாலும் கணீரென்று கேட்கும் குவலயத்தில்
மொட்டைத் தலைக்கு நிகரோ முடித்தலை மூடர்களே."

என்னும் செய்யுள் ஒன்றைப் பாடித் தம்மை இகழ்ந்தவர்களைப் பார்த்துக் கேலி செய்தார்.

நமசிவாயப்புலவர் ஒருமுறை திருவநந்தபுரஞ் சென்று அந்நகரத்து அரசன்மீது சில செய்யுட்கள் இயற்றினார். அதனைக்கேட்டு மகிழ்ந்த அரசன் நமசிவாயப்புலவருக்குத் தக்கவாறு நன்கொடை வழங்கினான். வழுதலங்காயைக் குறித்து நமசிவாயர்,

"தேங்காயைத் தின்னிற் சிரங்காய் வெடிக்குந் தினமுமுன்னி
மாங்காயைத் தின்றிடில் வங்காய்ச் சொரியும் வளம்பெருகு
பாங்காரும் வாழை பலாக்காயும் வாய்வுப் பதார்த்த நமக்கு
ஆங்காய் வழுதலங் காயொன்று மேமலை யாளத்திலே"

என்று ஒருசெய்யுள் இயற்றினார். நமசிவாயப்புலவர் நூல்களிலே சிங்கைவெண்பா முதலிய சில நூல்கள் அச்சாகியுள்ளன.

---

## உந. சின்னத்தம்பிப் புலவர்

அரிய சிற்றிலக்கியங்களாக விளங்கும் மறைசையந்தாதி, கல்வளையந்தாதி ஆகிய நூல்களை இயற்றிய சின்னத்தம்பிப்புலவர் என்பவர், யாழ்ப்பாணத்திலே நல்லூரிலே வில்லவராய முதலியார் என்பவருக்கு அருமைத் திருமகனாகத் தோன்றினார்.

வில்லவராயமுதலியார் 1886-இல் யாழ்ப்பாண நியாய சபைக் கனவான்களுள் ஒருவராக விளங்கியிருந்தார். இவர் கல்வியறிவிற் சிறந்த புலமைபெற்றுச் செய்யுள் நூல்கள் பாடுந்திறமுடையவராக அமைந்திருந்தார்.

பேரறிவாளராகிய முதலியாருக்கு மகனாகத் தோன்றிய சின்னத்தம்பிப் புலவரோ, கல்வி கற்றலில் கருத்துச் சிறிதும் அற்றவராய் மாடுமேய்க்குஞ் சிறுவர்களோடு விளையாடுதலே மேற்கொண்டொழுகினார். முற்பிறப்பின் நல்வினைப்பயனால் சின்னத்தம்பியார் சின்னத்தம்பியாக இருக்கும் போதே கலைமகள் திருவருளைப் பெற்றார்

ஒருநாள் சின்னத்தம்பியார் சில சிறுவர்களோடு தெருவிலே விளையாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது வேற்றூர்ப் புலவர் ஒருவர் வில்லவராய முதலியார்மீது நூல் ஒன்று பாடிக்கொண்டு பரிசில் பெறும்பொருட்டு வந்தார். அவருக்கு வில்லவராய முதலியாரின் வீடு தெரியாது. ஆகவே, அவர் தெருவில் நின்ற சிறுவர்களைப் பார்த்து, "வில்லவராயமுதலியார் வீடு யாது?" என்று உசாவினார். அப்பொழுது அங்கிருந்த சின்னத்தம்பியார் முன் வந்து,

"பொன்பூச் சொரியும் பொலிந்தசெழுந் தாதிறைக்கும்
நன்பூ தலத்தோர்க்கும் நன்னிழலாம்—மின்பிரபை
வீசுபுகழ் நல்லூரன் வில்லவரா யன்கனக
வாசலிடைக் கொன்றை மரம்"

என்னும் ஒரு வெண்பாவினால் தம் வீட்டின் அடையாளத்தைக் கூறினார். இதனைக்கேட்ட அப் புலவர் திகைத்துப் போனார்.

சின்னத்தம்பி பள்ளிக்கூடத்திற்கு ஒழுங்காகச் சென்று கல்வி பயிலாமையைக்கண்ட வில் வராயர் தம் மகனைக் கண்டித்தார். பள்ளிக்கூடம் போகாவிட்டால் வீட்டிலே சாப்பாடு கிடையாது என்று அச்சுறுத்தினார். வீட்டிலே உணவிடக்கூடாது என்று தம் மனைவியையுங் கண்டித்தார். ஆனால், சின்னத்தம்பியோ வீட்டிற்குப் போய்க் கள்ளத்தனமாகச் சாப்பிட்டுவிட்டுத் துள்ளித்

திரிந்துகொண்டிருந்தார். அந் நாளில் வில்லவராயர் ஓர் அந்தாதி பாடத் தொடங்கியிருந்தார். ஒருநாள் ஒரு பாட்டில் ஓர் அடியை எழுதிவிட்டு அலுவலின் பொருட்டு வெளியே போய்விட்டார். போகும்பொழுது பாட்டின் அடி எழுதப்பெற்ற ஓலைச்சுவடியையும் எழுத்தாணியையும் வெளியே ஓரிடத்தில் வைத்துவிட்டுச் சென்றார்.

நண்பகலில் சாப்பிடவந்த சின்னத்தம்பி ஓலையை எடுத்துப்பார்த்தார். பாட்டின் 2, 3, 4, அடிகளைத் தாம் எழுதிவைத்துவிட்டுப் போய்விட்டார். பிறகு வீட்டிற்கு வந்த வில்லவராயர் உணவு முதலியவைகளை முடித்துக் கொண்டபின் பாட்டை முடிக்க எண்ணினார். ஓலைச்சுவடியை எடுத்துப்பார்த்தார். பாட்டு நிறைவேறியிருந்தது. அந் நிறைவேற்றம் அவருக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. அவர் தம் மனைவியைக் கூப்பிட்டு, "இங்கே வந்தவர் யாவர்?" என்று உசாவினார். முதலில் அச்சங் கொண்ட அவ்வம்மை ஒருவரும் வரவில்லை என்று கூறி மறுத்தாள். கணவன் வற்புறுத்திக் கேட்கவே, "அந்த பேய்ப்பையல்தான் இங்கே வந்து ஓலையை எடுத்துக் கிறுக்கிக் கொண்டிருந்தான்," என்று கூறினாள். முதலியார் சின்னத்தம்பியைத் தேடியழைத்தார். அவர் மீது அன்பு பாராட்டிப் போற்றினார். பிறகு அந் நூலைச் சின்னத்தம்பியாரே செய்து முடித்தார்.

ஒருநாள் யாழ்ப்பாணம் வண்ணார் பண்ணையில் கணேசையர் என்பவருடைய வீட்டிலே பல புலவர்கள் ஓர் அவையாகக்கூடி இராமாயணத்திற்குப் பொருள் செய்து கொண்டிருந்தனர். அப்பொழுது ஒரு பாட்டிற்குப் பொருள் விளங்காதபடியால் எல்லோரும் விழித்தார்கள். ஒவ்வொருவரும் தத்தமக்குத் தோன்றியவாறு கூறினார்கள். அவர்கள் கூறிய பொருள் சிறிதும் பொருந்தவில்லை.

அப்பொழுது மிக இளைஞராக இருந்த சின்னத்தம்பிப்புலவர் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டிருந்தார். அவர் அந்தப் பாட்டிற்கு ஓர் உரை கூறினர். சின்னத்தம்பியார் கூறிய உரை எல்லோருக்கும் மகிழ்ச்சியை உண்டாக்கியது. யாவரும் சின்னத்தம்பிப்புலவரைப் போற்றினர்கள். கணேசையர் பெருமகிழ்ச்சியடைந்தவராய்ப், பண்டாரக்குளம் என்னும் பெயருடைய வயல் ஒன்றைச் சின்னத்தம்பியார்க்கு நன்கொடையாக வழங்கினர்.

சின்னத்தம்பிப்புலவரால் பாடப் பெற்றனவாக இரண்டு அந்தாதிகள் வழங்கிக்கொண்டிருக்கின்றன. ஒன்று மறைசையந்தாதி. இது சோழவளநாட்டிலே திருமறைக் காட்டிலே திருக்கோயில் கொண்டு எழுந்தருளிய சிவபெருமான்மேல் பாடப்பெற்றது. இது சொன்னுக்கும் பொருளுக்கும் மிக்கதாய்க் கற்பார் உள்ளத்தைக் கழி பெருங்களிப்பில் ஆழ்த்துவதாய்ச் சிறந்து விளங்குகின்றது. இந்த மறைசையந்தாதிக்கு ஆசிரியர் சின்னத்தம்பிப்புலவர் என்பது,

"செந்தா தியன்மணிப் பூண்புலி யூரற்குச் சேர்ந்தளித்த
சிந்தாத் தியானஞ்செய் வில்லவ ராசன் திருப்புதல்வன்
நந்தா வளந்திகழ் நல்லைச்சின் னத்தம்பி நாவலன்சீர்
அந்தாதி மாலையை வேதாட வீசற் கணிந்தனனே"

என்னுஞ் செய்யுளால் பெறப்படும். மற்றது கல்வளையந்தாதி. இது சண்டியிருப்பாயில் உள்ள கல்வளைப் பிள்ளையார்மேல் பாடப்பெற்றது. இதுவுஞ் சொற்செறிவு பொருட் செறிவுடையதாய்ச் சிறந்து விளங்குகின்றது.

"கல்வளை யாத விரும்புநெஞ் சேகைய ரோடுறவா
கல்வளை யார்சுனை வாயரக்காம் பல்செங் காவியின்பக்
கல்வளை யார நிலாவீச விள்ளுங் கழனிசுற்றுங்
கல்வளை யானங் குசபாச மேந்துங் கரன் புகழே."

என்பது கல்வளையந்தாதியில் ஒரு பாட்டு.

## உசு. சங்கர நமச்சிவாயப் புலவர்

சங்கரநமச்சிவாயப் புலவர் திருநெல்வேலியிலே வேளாளர் குலத்திலே தோன்றினர். இலக்கணக்கொத்துச் செய்த சாமிநாத தேசிகர் இவருடைய ஆசிரியராதலின் சங்கர நமச்சிவாயப்புலவருடைய காலம் சாமிநாத தேசிகருடைய காலமேயாகும்.

சாமிநாததேசிகரிடம் சங்கர நமச்சிவாயர் தொல்காப்பியம் முதலிய இலக்கணநூல்களையும் இலக்கியங்களையும் ஐயமறக் கற்றுச் சிறந்து விளங்கினர். அந்நாளில் ஊற்றுமலை என்னும் ஊரில் இருதயாலய மருதப்ப தேவர் என்னும் பெருஞ் செல்வர் நுண்ணறிவாளராகவும், அருங் கொடையாளராகவும் சிறந்து விளங்கினர். சங்கரநமச்சிவாயப் புலவருக்கும் இருதயாலய மருதப்ப தேவருக்கும் பழக்கம் ஏற்பட்டது. நாளடைவில் சங்கர நமச்சிவாயர் இருதயாலய மருதப்பதேவருடைய அவைக்களப் புலவராக அமர்ந்தார்.

சங்கர நமச்சிவாயருடைய பேரறிவை நன்கறிந்த இருதயாலய மருதப்பதேவர், நன்னூலுக்கு விருத்தியுரை ஒன்று எழுதுமாறு சங்கர நமச்சிவாயரைக் கேட்டுக் கொண்டார். சங்கரநமச்சிவாயர் நன்னூல் உரையை அவருடைய விருப்பப்படியே எழுதி முடித்தார். சங்கர நமச்சிவாயர் நன்னூல் உரையை எழுதிய காலத்தில் இவருக்குத் திங்கள் ஒன்றுக்கு நான்கு கோட்டை நெல்லும் நாள் ஒன்றுக்கு ஒருபடி பாலும் கொடுக்கப்பட்டதாகவும் உரை அரங்கேற்றஞ் செய்யப்பட்ட பின்னர் தகுந்த நன் கொடை அளிக்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது. இருதயாலய மருதப்ப தேவருடைய வேண்டுகோளின்படி நன்னூல் விருத்தியுரை செய்யப்பட்டதென்னுஞ் செய்தி,

"நன்னூலுட் கருத்துலகோர் அறியவுரை
செய்கவென நரேந்த்ர சிங்கம்
தென்னூற்று மலைமருதப் பன்புகலப்
பொருள்விளங்கச் செய்தான் பாரில்
எந்நூற்கும் எழுத்தொடுசொற் பொருளறிசங்
கரநமச்சி வாயன் என்னும்
பன்னூற்செந் தமிழ்ப்புலவன் சைவசிகா
மணிநெல்லைப் பதியினனே (க)

"அகத்தியந்தொல் காப்பியமே முதலிய முன்
னூல்கள்பல ஆய்ந்து முப்பால்
பகுத்ததிரு வள்ளுவரே முதன்ஞான
நூல்களெல்லாம் பகல்செய் வான்போல்
இகத்திலுரை செயவலசங் கரநமச்சி
வாயன்எனும் இயற்பேர் பெற்ற
தகைப்புலவன் நன்னூலுக்கு உரைவகுத்தது
ஒருவியப்போ தமிழ்வல் லோரே. (உ)

"முன்னூற்கும் மலயமுனி தன்னூற்கும்
புவியிடத்து முதியோ ராற்சொல்
எந்நூற்கும் தமிழ்க்கடலுள் இனிஇயற்றும்
நூற்கும்வகை இதனால்காட்டி
நன்னூற்கு விரித்துரைசெய் தான்திகந்
தத்தளவும் நடத்தும் கீர்த்தித்
தென்னூற்று மலைமருதப் பன்சொலச்சங்
கரநமச்சி வாயன் தானே." (ங)

என்னும் நன்னூல் உரைச் சிறப்புப்பாயிரத்தால் பெறப் படுகிறது.

சங்கர நமச்சிவாயப்புலவர் தமது நன்னூல் விருத்தி யுரையிலே, அகநானூறு, அரிச்சந்திரபுராணம், ஆசாரக் கோவை, இலக்கணக்கொத்து, இலக்கண விளக்கம், இறை யனார் அகப்பொருள், ஐங்குறுநூறு, ஐந்திணையைம்பது, ஒருதுறைக் கோவை, கந்தபுராணம், கம்பராமாயணம்,

கலித்தொகை, களவழி நாற்பது கார்நாற்பது, குறுந்தொகை, கோடீசுரக்கோவை, சிலப்பதிகாரம், சிவஞான சித்தியார், சீவகசிந்தாமணி, சூளாமணி, தக்கயாகப் பரணி, தண்டியலங்காரம், திணைமாலை நூற்றைம்பது, திரிகடுகம், திருக்குறள், திருக்கோவையார், திருநூற்றந்தாதி, திருவாசகம், திருவாய்மொழி, திருவிளையாடற்புராணம், தேவாரம், தொல்காப்பியம், நம்பியகப்பொருள், நளவெண்பா, நற்றிணை, நாலடியார், நான்மணிக்கடிகை, நீதிநெறிவிளக்கம், நேமிநாதம், நைடதம், பட்டினத்தார் பாடல், பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு, பரிபாடல், பன்னிருபடலம், பிரபுலிங்கலீலை, பிரயோகவிவேகம், புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலை, பெரியபுராணம், பெருங்கதை, மணிமேகலை, யாப்பருங்கலக்காரிகை, யாப்பருங்கலம், வச்சணந்திமாலை, முதலிய பலநூல்களில் இருந்து மேற்கோள் எடுத்துக்காட்டியுள்ளார்.

இலக்கண விளக்கம் வைத்தியநாத நாவலர், சுப்பிரமணிய தீட்சிதர், சாமிநாத தேசிகர், மயிலேறும் பெருமாள் பிள்ளை முதலியோர் சங்கர நமச்சிவாயப் புலவர் காலத்திய புலவர் பெருமக்களாவர்.

இவருடைய நன்னூல் விருத்தியுரை மிகச்செவ்விய முறையில் அமைந்துள்ளது. சிவஞான முனிவர் தாம் வடமொழி தென்மொழியுட் கண்ட அரிய இலக்கண முடிபுகளை இவ்வுரையின் இடையிடையே செருகி மிகச் சிறப்பாக்கி யிருக்கிறார். இவரால் புதுக்கப்பட்ட வுரையும் சங்கர நமச்சிவாயர் தனி உரையும் இரண்டும் அச்சிற் பதிப்பிக்கப்பட்டு வெளிவந்துலவுகின்றன.

## உரு. இராமாநுசக் கவிராயர்

### தோற்றம்

இராமநாதபுரம் என வழங்கும் முகவையில் இராமாநுசக் கவிராயர் தோன்றினர். இவருடைய காலம் இற்றைக்கு நூற்றிருபது யாண்டுகட்குச் சற்று முன்பின்னாக இருக்கலாம். இவருடைய சமயம் வைணவம்.

### வாழ்க்கை வரலாறு

இவருடைய தாய் தந்தையர் பெயர் விளக்கமாகத் தெரியவில்லை. சிவஞான முனிவருடைய மாணவர்களுள் ஒருவராகிய சோமசுந்தர கவிராயரிடம் இவர் இலக்கண இலக்கியங்களை ஐயமறக் கற்றறிந்தார் இவர் கல்வி கற்றதைப் பற்றிப் பலவாறு வரலாறுகள் வழங்குகின்றன.

இராமாநுசக் கவிராயர் இளைஞராயிருந்த காலத்தில் கல்வியில் அதிக ஆர்வங் காட்டினராம். ஆயினும் நினைவாற்றல் போதிய அளவு இன்மையின் கற்றவை கேட்டவைகளெல்லாம் உடனுக்குடன் மறந்து போயினவாம். மறப்பெனுங் கள்வனால் வஞ்சிக்கப்பெற்ற இவர், மிகுந்த மனவாட்டமடைந்து கலைமகளை நினைந்து நெஞ்சுருகிப் போற்றினராம். பிறகு தம்முடைய கழுத்தைக் கத்தியால் அறுத்துக்கொண்டாராம். கலைமகள் தோன்றித் திருவருள் செய்து மறைந்தனளாம். அதன் பிறகு இவருக்குப் பொருள்விளக்கம், நினைவாற்றல முதலிய பண்புகள் உண்டாயினவாம்.

மற்றொரு வரலாறு, இவர் நாற்பதாண்டு அளவு கல்வி கற்காது கல்வியறிவு அற்றவராக இருந்தார் எனவும், ஓர் அவையில் ஒருசமயம் இவர் ஏதோ கூற அவ்விடத்தில் இருந்த ஒரு புலவர், "கற்றோர் அவையில் நீ பேசுதல் தகாது. உன்போலும் அறிவிலிகள் மாட்டுச்சென்று

நீ பேசுதல்தான் தக்கதாகும்," என்று கூறினர் எனவும், அவ்வுரையைக்கேட்ட இராமாநுசர் மிகவும் வருந்தி, அந் நாளிற் பேரறிஞராக விளங்கிய சோமசுந்தரக் கவிராயர் இடஞ்சென்று தமக்குக் கல்வி கற்பிக்கும்படி வேண்டிக் கொண்டனர் எனவும், அதற்குச் சோமசுந்தரக் கவிராயர், "அகவை முதிர்ந்து நெடும்பனை போல வளர்ந்துள்ள நினக்கு இனிமேல் கல்வி கற்பித்தல் பயனற்றதாக முடி யும்; ஆதலின் உனக்குக் கல்வி கற்பிக்கத் தொடங்குதல் வீண் முயற்சியாம்," என்றுகூறி மறுத்துவிட்டார் எனவும், அதனால் மனம் வருந்திய இராமாநுசர் அமயம் நோக்கிக் கொண்டே இருந்து, ஒருநாள் சோமசுந்தரக் கவிராயர் பல் லக்கிவர்ந்து தெருவிற் சென்று கொண்டிருக்கும்போது அவருக்கு முன்னே ஓடி ஒரு கத்தியால் தமது கழுத்தை அறுத்துக்கொள்ளத் தொடங்கித், "தாங்கள் எனக்குக் கல்வி கற்பிக்க முடியாதெனக்கூறி விட்டமையின், நான் கழுத்தை அறுத்துக்கொண்டு சாகிறேன். அறிவற்ற யான் இவ்வுலகில் இருப்பது பயனில்லை," என்று கூறின ரெனவும், உடனே கவிராயர் விரைந்து பல்லக்கை விட்டுக் கீழே இறங்கி ஓடிவந்து இராமாநுசருடைய கையைப் பிடித்துக் கொண்டதன்றி, "நான் உனக்குக் கல்வி கற்பிக் கிறேன்; கழுத்தை அறுத்துக்கொண்டு சாகவேண்டாம்," என்று கூறித் தம்முடன் அழைத்துக்கொண்டு சென்று நிகண்டு, நன்னூல் முதலிய நூல்களை மனப் பாடஞ்செய்து வரக் கட்டளை யிட்டனர் எனவும், இராமாநுசரும் அவ் விதமே செய்தபடியால் மனமகிழ்ச்சியடைந்த சோம சுந்தரக் கவிராயர் எல்லா நூல்களையும் வரன் முறையாகப் பாடஞ் சொன்னார், எனவும் வழங்குகின்றது.

கற்கவேண்டிய நூல்களை யெல்லாம் நன்கு கற்றுத் தேர்ந்தபின் இவர் சென்னைமாநகரை அடைந்து வண்ணா

ரப்பேட்டையில் தங்கினர். அங்கிருந்த பிள்ளையார் கோயிலில் அநுமாரையும் அமைத்து, அக்கோயிலுக்குச் சஞ்சீவிராயன் கோயில் என்று பெயரிட்டார். அக்கால முதல் அக்கோயில் சஞ்சீவிராயன் கோயில் என்று வழங்கப்பட்டதுடன், அக்கோயில் உள்ள தெரு சஞ்சீவிராயன் கோயில் தெரு எனவும், அதனைச் சூழ்ந்த இடம் சஞ்சீவிராயன் பேட்டை எனவும், வழங்கத் தொடங்கியது.

இராமாநுசக் கவிராயர் சஞ்சீவிராயன் பேட்டையில் தங்கியிருந்து கொண்டு, திருத்தணிகை விசாகப்பெருமாள் ஐயர், சரவணப் பெருமாள் ஐயர், அறிஞர் தாண்டவராய முதலியார், அட்டாவதானம் வீராசாமி செட்டியார், ரெவரெண்டு ஜி. யூ. போப்பையர், மழவை மகாலிங்கையர் முதலியோருக்குக் கல்வி கற்பித்துக்கொண்டிருந்தார்.

பாடல்பெற்ற குளம்

இராமாநுசக் கவிராயர் ஒரு நாள் மாணவர் சிலரோடும் மற்றும் பலரோடும் பெத்துநாய்க்கன் பேட்டையில் உள்ள கிருட்டிணப்ப நாய்க்கன் குளத்துத் தெருவழியே சென்றுகொண்டிருந்தார். அக் குளத்திலே அப்பொழுது வீட்டுக்குத் தூரமான (மாதவிடாயான) சில பெண்கள் நீராடிக்கொண்டிருந்தார்கள். கவிராயர் உள்ளத்தில் அருமையான கற்பனை ஒன்று தோன்றியது. உடனே அவர்,

"கிருட்டிணப்ப நாய்க்கன் குளத்திலே வீட்டுக்குத் தூரமானவர்களும் மூழ்கி வீட்டை அடையுந் தன்மையை அறிந்தபடியினால், கங்கையானது வீட்டிலே உள்ளவர்கள் தன்னில் மூழ்கி வீட்டையடைவதால் சிறப்புப் பொருந்திய புகழ் உண்டாகமாட்டாது என்று காமனை வருத்திய சிவபெருமானுடைய சென்னியை அடைந்துவிட்ட தென்றால் கிருட்டிணப்ப நாய்க்கன் குளத்துப் பெருமை நம்மால்

உரைக்கக் கூடிய அளவுடையதாகுமோ?" என்னும் பொருளை அமைத்து,

" சாரவீ டிருந்தோர் படிந்துசார்ந் திடில் சீர்
 தருபுகழ் இலை என்றே வீடு
தூரமா யினரும் படிந்துவீ டடையும்
 தோற்றமற் றறிந்தத னாலே,
வீரவேள் அலைத்த நுதற்கணன் சென்னி
 மேயதச் சுரநதி என்றால்,
மாரகண் ணப்ப நாயகன் குளத்து
 மகிமையாம் உரைசெயும் தகைத்தோ?"

என்னும் செய்யுள் ஒன்றைப் பாடினார்.

எனக்குத் தெரியாது

சென்னைப் பல்கலைக் கழகத்தின் தலைவர் அக் கலைக் கழகத்திற்கு ஒரு தமிழ்ப்புலவரை அமர்த்த எண்ணினார். சிலர் இராமாநுசக் கவிராயரைப்பற்றிக் கூறினர். இவருடைய மாணவர்களைப் பற்றியும் பேச்சு நிகழ்ந்தது. பல்கலைக் கழகத் தலைவர் கவிராயரையும், மகாலிங்கையர் முதலிய மாணவர்களையும் தம்மிடம் அழைத்தார். எல்லோரையும் வரிசைக்கு இணங்க அமரச் செய்தார். பிறகு அவர்களுடைய அறிவின் மதுகையை ஆராயத் தொடங்கினார். கவிராயரைப்பார்த்து, "குற்றியலுகரத்திற்கு ஓர் உதாரணம் கூறுங்கள்," என்று கேட்டார். உடனே கவிராயர், "எனக்குத் தெரியாது" என்று விடையளித்தார். இவர் கூறியதன் பொருள் பல்கலைக் கழகத் தலைவருக்கோ இவருடைய மாணவர்கட்கோ விளங்கவில்லை. இவர் தமக்குத் தெரியாது என்று கூறிவிட்டார் என்றே எல்லோரும்

பல்கலைக்கழகத் தலைவர் பிறகு மாணவர்களைக் கேட்டார். மாணவர்களோ நம்முடைய ஆசிரியரே தெரியாது

என்று கூறிவிட்டபோது நாம் எப்படிப் பதில் அளிப்பது என்று எண்ணிப் பேசாமல் இருந்தனர். பல்கலைக் கழகத் தலைவர் கவிராயரைப் பார்த்துப், "பெரும்புலவராகிய தாங்களே தெரியாது என்று கூறிவிடின் மற்று யாவர்தாம் கூறுவர்?" என்று கேட்டார். உடனே கவிராயர், "நான் எனக்கு உதாரணம் கூறத் தெரியவில்லை என்று சொல்லவில்லை. உதாரணம்தான் கூறியிருக்கிறேன். நான் கூறியதில் குற்றியல் உகரத்திற்கு மட்டும் அன்று; முற்றியலுகரத்திற்குக் கூட உதாரணம் இருக்கின்றது. தெரியாது என்பது குற்றியலுகரத்திற்கு உதாரணம், 'எனக்கு என்று மொழியிடையில் வந்திருப்பது முற்றியலுகரத்திற்கு உதாரணம்," என்றனர். கவிராயரின் மறுமொழி பல்கலைக் கழகத் தலைவரையும் அவருடைய மாணவர்களையும் திகைப்படையச் செய்தது. அவர்கள் தம் மடமையை எண்ணி நாணியதுடன் கவிராயருடைய வியத்தகு பதிலை எண்ணி மகிழ்ச்சியும் அடைந்தனர்.

பல்கலைக் கழகத் தலைவர் கவிராயரைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆசிரியராக அமர்ந்து பணியாற்றுமாறு வேண்டிக் கொண்டார். கவிராயர் தமக்கு அத் தொழில் வேண்டியதில்லை என்று மறுத்து விட்டார். "அப்படியானல் தங்கள் மாணவர்களுள் தக்கார் யாவர் என்பதைத் தாங்களே கூறுங்கள் அவரை அமர்த்தலாம்," என்றார் பல்கலைக் கழகத் தலைவர். மகாலிங்க ஐயரே தக்கவர் என்பதை இராமாநுசர் தெரியப்படுத்தினர். அப்படியே மகாலிங்க ஐயருக்குப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் பதவி வழங்கப்பட்டது.

**நன்னூல் உரை முதலியன**

பவணந்தி முனிவரால் இயற்றப்பட்ட நன்னூலுக்கு அந்நாளிலே தக்க உரை இல்லை. அக் குறையைப் போக்கு

மாறு இராமாநுசக் கவிராயர் நன்னூலுக்கு ஓர் அரிய உரை இயற்றினார். அவ்வுரை விருத்தியுரை. விரித்து விளக்கப் படவேண்டிய இடங்களில் தக்காங்கு விரித்துரைத்து விளக்கியுள்ளார். அவ்வுரையில், திருக்குறள், தண்டி யலங்காரம், இலக்கண விளக்கம், அகநானூறு, ஆசாரக் கோவை, இலக்கணக் கொத்து, பத்துப்பாட்டு, தொல்காப் பியம், முத்தொள்ளாயிரம், புறநானூறு, நற்றிணை, நாலடி யார், புறப்பொருள், பதிற்றுப்பத்து, திரிகடுகம், நான் மணிக் கடிகை, யாப்பருங்கலக்காரிகை, திருக்கோவையார், கலித்தொகை, குறுந்தொகை, சிந்தாமணி, மணிமேகலை, திருவாசகம், சிலப்பதிகாரம் முதலிய பல நூல்களில் இருந்து மேற்கோள்கள் எடுத்துக்காட்டியுள்ளார். நன் னூல் உரையை அன்றி, ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை, திருக்குறள் முதலிய நூல்களுக்கும் இவர் உரை செய்துள்ளார்.

திருவேங்கட அநுபூதி, இலக்கணச் சுருக்கம், சூடா ரம், ஆத்தும போதப் பிரகாசிகை முதலிய நூல்களையும் இவர் இயற்றியுள்ளார். தமிழறிவு பெற்ற ஆங்கிலேயர் சிலர் ஆங்கில-தமிழ் அகராதி ஒன்றைத் தொகுத்தபோது இராமாநுசக் கவிராயர் உடனிருந்து பேருதவி செய்துள் ளார். தமிழ்க்குத் தொண்டுசெய்தவர்களில் இவரும் ஒருவர். இவருடைய நன்னூல் உரை 'இராமாநுச காண் டிகை' என்னும் பெயருடன் வெளிவந்து உலவுகின்றது.

## உகூ. பொன்னம்பல அடிகள்

பாண்டி நாட்டில் இராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த அனுமந்தக்குடி என்னும் சிற்றூர் பொன்னம்பல அடிகளது முன்னோர் வாழ்ந்திருந்த ஊராகும். அடிகளாரின் குலம், "முதுகுலத்தார், முதுகுடிகள்" என்று சங்க நூல்களால் விதந்தோதப் பெற்ற அகம்படியர் குலமாகும். அடிகளாரின் தந்தையார் விசயநகர மன்னரின் போர்ப்படையில் போர்வீரராகத் திகழ்ந்த ஞான்று கலி சகூஙூச கர ஆண்டில் பொன்னம்பல அடிகள் விசய நகரத்தில் பிறந்தார்.

அடிகளாரின் தந்தையார் அடிகளாரின் குழவிப் பருவத்தில்தானே விண்ணுலகடைந்தார். அவரின் பெயர் இன்னதென்று விளக்கமாக வில்லை. அடிகளாரின் தாயார் பெயர் அங்கம்மாள். தாயாரால் அருமையாக வளர்க்கப் பட்ட பொன்னம்பல அடிகள் இளமை முதலே அடியார் வழிபாடு, இறைவழிபாடு முதலியவைகளில் பற்றுமிக்கவராக விளங்கினார்.

பொன்னம்பல அடிகள் தமக்குத் தேய்த்து முழுகுதற்குத் தாயார் அளிக்கும் நல்லெண்ணெயை ஆனைமுகக் கடவுளுக்கு முழுக்காட்டி அக்கடவுளைப் போற்றி வழிபடும் வழக்கத்தை இளமையில் மேற்கொண்டிருந்தார். அடிகளாரின் இச்செயல் அவரது வீடுபேற்றிற்கே காரணமாக அமைந்தது. பொன்னம்பலம் என்று பெயரிடப்பெற்ற காரணத்தினாலோ என்னவோ பொன்னம்பல அடிகள் தமது பதினாறும் ஆண்டில் திருத்தில்லையை அடைந்தார்.

கூத்தப்பிரானுக்குத் தொண்டு செய்வதில் அடிகளாரின் எண்ணஞ் சென்றது. மலர்பறித்து மாலை கட்டிக் கொடுத்தல், திருவலகிடுதல், விளக்கு விளக்குதல் முதலிய

திருத்தொண்டுகளைச் செய்துகொண்டு அம்பலவாணனை ஆறுகாலமும் போற்றி வழிபட்டார். அந்நாளில் பெத்தாச்சி யடிகள் என்னுந் தனவணிகத் துறவியொருவர் தில்லையில் இருந்தார். அவரிடம் துறவு பெற்று அடிகளார் கூத்தப் பிரானைப் போற்றி வழிபட்டார்.

கோயிலூர் முத்துராமலிங்க அடிகளின் மாணவர் சிதம்பர அடிகள் என்னும் பெரியார் கூத்தப்பிரானை வழி பட்டுய்யத் தில்லையை அடைந்தார். பொன்னம்பல அடி கள் சிதம்பர அடிகளைக் கண்டு போற்றித் தமக்கு அறிவு நூல்களைப் போதித்தருளவேண்டும் என்று வேண்டிக் கொண்டார். சிதம்பர அடிகள் அதற்கு இணங்கினார். பொன்னம்பல அடிகளைக் கோயிலூருக்கு அழைத் துச் சென்று வேதாந்த நூல்களைப் போதித்தார். பொன் னம்பல அடிகள் வேதாந்த நூல்களைத் தாம் ஐயமறக் கற்றுத் தேர்ந்ததுடன் அவைகளைப் பிறருக்குப் போதிக் கும் ஆற்றலும் பெற்று விளங்கினார்.

பிறகு தம் ஆசிரியராகிய சிதம்பர அடிகளின் உடன் பாடு பெற்றுக் காசியை அடைந்து வடமொழியையும் இந்தியையும் நன்கு கற்று அம் மொழிகளிலும் வல்லவ ரானார். பிறகு கோயிலூரையடைந்து தம் ஆசிரியருடன் தங்கியிருந்தார். ஆசிரியர் காலமான பிறகு சிக்கல், திரு வாரூர், திருப்புனவாசல் ஆகிய இடங்களில் தங்கியிருந்தார். இறுதியில் இறைவன் திருக்குறிப்பின்படி தில்லையை அடைந்து அங்குத் தங்கினார். அன்பர்கள் பலருடைய உதவியைக் கொண்டு திருமடம் ஒன்றை ஏற்படுத்தி அம் மடத்திற்குக் கோ. சித. மடம் என்று பெயரிட்டார்.

கூத்தப்பெருமானுடைய திருக்கோயிலை அழகுறப் புதுக்கிப் பொன்தகடு வேய்ந்தார். பொன்னம்பலனார்

கூத்தப்பிரான் திருக்கோயிலைப் பொன்னம்பலமாகச் செய்தது அன்பர் பலருக்கும் பெருமகிழ்ச்சியை அளித்தது. எறும்பூர் என்னும் பதியில் எழுந்தருளிய தத்துவராயர் என்னும் பெரியாருடைய திருக்கோயிலை அழகுற அமைத்துக் குடமுழுக்கும் இயற்றினார்.

கைவல்ய நவநீதம், பகவத்கீதை என்னும் இரண்டு சிறிய வேதாந்த நூல்கட்கு அடிகள் அழகிய பதவுரை எழுதி அச்சிட்டு வெளிப்படுத்தினார். பொன்னம்பல அடிகளாரின் உரை வெளியாகிய பின் மற்றைய போலி உரைகள் மறைந்தொழிந்தன. விசாரசாகரம் என்னும் நூலை இந்தியில் இருந்து தமிழில் எளிய உரை நடையாக மொழி பெயர்த்தார். வேதாந்த சூடாமணி என்னும் நூலுக்கும் அடிகள் அரிய பதவுரை இயற்றினார். பஞ்ச தசி, பாடுதுறை முதலிய பல நூல்களைப் பிழையற ஆராய்ந்து அச்சியற்றி வெளியிட்டார்.

பொன்னம்பல அடிகளாரின் சிறிய முயற்சியால் வேதாந்தக்கலை நல்ல வளம்பெற்றது. அடிகள் காசிக்குச் சென்றிருந்தபோது ஒருநாள் அன்னபூரணியைப் போற்றி வழிபடச் சென்றார். அன்பர்கள் கூட்டம் மிகுதியாக இருந்தது. அடிகளார் அன்னபூரணிக்கு அணியச் சந்தனஞ் சிறிது கொண்டுசென்றிருந்தனர் அதனை அன்னபூரணியின் திருநுதலைக் குறி பார்த்து வீசினார் அது தேவியின் திருநுதலில் தக்க இடத்தில் பொட்டாக அமைந்தது. இவ்வியத்தகு காட்சியைக் கண்ட அன்பர்கள் உள்ளங்களித்தனர்.

அடிகளார் தம் அருமைத் திருக்கைகளால் பலருக்குத் திருநீறணிந்து அவர்கள் நோயைப் போக்கினார். அடிகளாரைக் கொண்டு அம்பலவாணன் தனக்குப் பல திருப்

பணிகளை நிறைவேற்றிக் கொண்டான். அடிகளார் கலி ௫௦௦௬ குரோதியாண்டு ஐப்பசித் திங்கள் இருபத்திரண்டாம் நாள் சித்திரை விண்மீனிலே தீபாவளிப் புதுமை நாளில் வீடுபேற்றை யடைந்தார்.

---

## உஎ. தியாகராசச் செட்டியார்

### தோற்றம்

திரிசிரபுரத்திற் கடுத்த பூவாளூரிலே, சிதம்பரம் செட்டியார் என்பவருடைய மைந்தராகத் தியாகராசச் செட்டியார் 1826-ஆம் ஆண்டிற் பிறந்தார். சிதம்பரஞ் செட்டியார் உயிர்த்தொழிலெல்லாம் பயிர்த்தொழில் தன்னுல் தான் என்று திடமாயுணர்ந்து அத்தொழிலிலே ஈடுபட்டிருந்தார். தம் புதல்வரையும் அத்தொழிலிற் பழக்கமுயன்றார். அகவை ஐந்து நிரம்பியவுடன் பள்ளியை அடைந்த தியாகராசர் பள்ளிக் கல்வியை நன்கு பயின்றார். கல்வியிலே அவருக்கு மிகுந்த ஊக்கம் உண்டாயிற்று. தந்தையார் நோக்கப்படி பயிர்த்தொழிலில் இறங்க அவர் விரும்பவில்லை. குடும்பத்தொழில்கள் பலவற்றையும் தியாகராசர் நன்கு உணர்ந்துகொண்டனராயினும் அவைகளில் தியாகராசர் உள்ளம் பதியவில்லை. அவர் மனநிலை கலை நிலையையே நாடி நின்றது.

### மகாவித்துவான் தொடர்பு

அந்நாளில் திரிசிரபுரத்தில் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சிறந்த அறிஞராகத்திகழ்ந்திருந்தார். பூவாளூர்ச் செல்வர்கள் சிலர் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களைக் கொண்டு பூவாளூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி என்னும் நூலை இயற்றச் செய்தார்கள். அந்நூலின் அரங்கேற்றம்

பூவாளூரிலே சிறப்பாக நடைபெற்றது. அப்போது தியாக ராசர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையைப் பார்த்தார். அவரிடங்கல்வி கற்கவேண்டும் என்னும் அவா தியாகராசரைப் பிடர் பிடித்துந்தியது. தம் கருத்தைத் தந்தையாரிடம் வெளியிட்டார். தந்தையாரோ, "தமிழ்க் கல்விவேண்டாம். அது பிழைப்புக்குப் பயன்படமாட்டாது. தமிழ் படித்தவர்கள் வறுமையால் வாடிக்கலங்குவார்கள்," என்று கூறித் தடுத்தார். ஆனால், தியாகராசரோ உறுதி யுடன் நின்றார் இறுதியில் இவருடைய உறுதி வெற்றி பெற்றது. திரிசிரபுரத்தில் உள்ள உறவினர் வீட்டில் தங்கியிருந்துகொண்டு மகாவித்துவானிடம் (பெரும் புலவர்) பாடங்கேட்பது என்று முடிவாகியது. தமது பதினெட்டாவது ஆண்டில் திரிசிரபுரத்திற்குச் சென்று பெரும் புலவரிடம் மாணவராகச் சேர்ந்தார். இலக்கியங் களையும் இலக்கணங்களையும் வரன்முறையாகப் பாடங் கேட்டார். ஆசிரியரோடு ஒன்றுபட்டு உறைந்தார். ஆசிரி யருடைய குற்றேவல்களையெல்லாம் குறிப்பறிந்து செய் தார். ஆசிரியருடைய நல்லியல்புகளையெல்லாம் தியாகரா சரும் பழகிக்கொண்டார். நாளடைவில் தியாகராசர் கல்வி யில் நல்ல வளர்ச்சியடைந்தார். தம் ஆசிரியரைப்போலவே செய்யுள் இயற்றவும், பிறருக்குப் பாடஞ்சொல்லவும் கைவரப்பெற்றார். தியாகராசரின் ஆசிரிய அன்பு பிறர் வியக்கத்தக்கவாறாக அமைந்திருந்தது. தம் ஆசிரியர் மீது நாளுக்கு ஒரு பாட்டுவீதம் நூறுபாட்டுகள் இயற்றினார். தனிப்பாடல்கள் பல சமயத்திற்கேற்றவாறு பாடினார். பெரும் புலவரிடம் பாடங்கேட்பதற்குப் புதிதாக வருபவர் கட்குப் பெரும் புலவர் அவர்கள் தியாகராசரைக்கொண்டே பாடஞ்சொல்லச் செய்தார்கள்.

வேலை

தியாகராசர் கல்வியிற் சிறந்தவராக விளங்கியிருந்த போது திரிசிரபுரத்தில் இருந்த பள்ளி ஒன்றுக்குத் தமிழாசிரியர் ஒருவர் தேவைப்பட்டார். அந்த வேலை தியாகராசருக்குக் கிடைத்தது. அவ்வேலைக்கு ஊதியம் பத்து வெண்பொற்காசுகளே. ஆயினும் அதற்கு அந்தக் காலத்தில் எவ்வளவோ மதிப்பிருந்தது. இந்த நிலைமையில் தியாகராசருக்குத் திருமணமும் நடந்தேறியது. தியாகராசருக்கு வாழ்க்கைத் துணையாக அமைந்த பெண்மணி தியாகராசரின் வருவாயில் பாதி மிஞ்சுமாறு இல்லறம் நடத்தினார் எனின், அம்மாதரசி திருவள்ளுவர் கூறியாங்கு வளத்தக்காராக அமைந்திருந்தார் என்று கூறவும் வேண்டுமோ? தியாகராசர் திரிசிரபுரத்தில் இருந்து திருவரங்கத்திற்கு மாற்றப்பட்டார். ஊதிய உயர்வும் கிடைத்தது. மாணவர்கள் இலக்கிய நூல்களையும் இலக்கண நூல்களையும் கதையைப்போல் விரும்புமாறு பாடஞ்சொல்வதில் தியாகராசர் கைதேர்ந்து விளங்கினார். தியாகராசர் தமது சொல்லாற்றலாலும் குணநலத்தாலும் மாணவர்களைத் தம் வழிப்படுத்தி நடத்தினார்.

காண்டல்

தியாகராசர் திருவரங்கத்தில் ஆசிரியத்தொழில் நடத்திக்கொண்டிருந்தபோது யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் திரிசிரபுரத்திற்கு வந்தார். செட்டியார் திருச்சிக்குச் சென்று நாவலரைப் பார்த்தார். நாவலரைப் பற்றித் தியாகராசரும் தியாகராசரைப் பற்றி நாவலரும் முன்னரே கேள்விப்பட்டிருந்தார்கள். கேள்வியளவில் அறிந்திருந்த அவ்விரு அறிஞர்களும் ஒன்றாகக்கூடிய போது பெருமகிழ்ச்சியடைந்து அளவளாவினர். அழகாபுரி பதியில் எழுந்தருளிய உமையாம்பிகை என்னும்

இறைவிமீது பிள்ளைத்தமிழ் ஒன்றைப்பாடி முடிக்க வேண்டும் என்றும், தமக்கு நேரமில்லையென்றும் நாவலர் செட்டியாரைக் கேட்டுக்கொண்டார். ஆனால், அப் பிள்ளைத் தமிழைச் செட்டியார் பாடி முடித்தாரா என்று தெரிய வில்லை.

குடம்பகோணத்தில் வேலை

செட்டியார் திருவரங்கத்தில் இருந்தபோது, கும்ப கோணம் கல்லூரியில் தமிழாசிரியர் வேலை ஒன்றுக்குத் தக்காரைக் கல்லூரிப் பொறுப்பாளர்கள் தேடினர். தியாகராசச் செட்டியார் அவ் வேலைக்குத் தக்கவர் என்பதை உணர்ந்து அவருக்கு அவ்வேலையைத் தந்தனர். செட்டியார் திருவரங்கத்தைவிட்டுத் திருக்குடந்தையை அடைந்து அவ் வேலையை மேற்கொண்டார். அந்நாளில் பெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் திருவாவடு துறையில் இருந்தமையால், அவரோடு அடிக்கடி நெருங்கிப் பழகுதற்கும் ஐயங்களைக் கேட்டுத்தெளிதற்கும் தியாக ராசச் செட்டியாருக்கு மிகவும் எளிதாக இருந்தது. அடிக் கடி திருவாவடுதுறை மடத்திற்குச் சென்று அப்போது தலைவராக எழுந்தருளியிருந்த பெரியார்களிடத்திலும் நெருங்கிய தொடர்புகொண்டவராக விளங்கினார்.

வசைகவி

செட்டியாரிடம் சிறப்புப்பாயிரம் பெற்றுக்கொண் டால் மதிப்பாக இருக்கும் என்று எண்ணிய சில அரை குறைப்புலவர்கள் தாம் பாடிய நூல்களை எடுத்துக்கொண்டு போய் அவரிடம் காட்டிச் சிறப்புப்பாயிரம் பெற முயற்சித் தனர். அவர்களுடைய தொல்லை பொறுக்கமுடியாத செட்டியார் இரட்டைப்பொருள் பயக்குமாறு வசைகவி யாகச் சிறப்புப்பாயிரப் பாடல்களைப் பாடிக்கொடுத்து

அவர்களின் தருக்கை அடக்கினார். தவறுகண்ட இடத்தில் எவராக இருந்தாலும் கண்டிப்பதற்குச் செட்டியார் பின் வாங்கமாட்டார். அப்படியே குணங்களை எடுத்துப்பாராட்டு வதற்கும் தயங்கமாட்டார்.

உடுக்கையும் பம்பையும்

மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் ஒரு சமயம் கும்ப கோணஞ்சென்றார். அங்குச் சில நாட்கள் தங்கியிருந்தார். ஒரு நாள் மாலைப்போதில் அரசாங்க வேலையில் இருந்த பெரிய அலுவலாளர் ஒருவர் பெரும் புலவரையும் அவரு டைய மாணவர்கள் பலரையும் தம் இல்லத்திற்கு அழைத் தார். அந்தக் கூட்டத்தோடு தியாகராசச் செட்டியாரும் சென்றிருந்தார். முதலில் பெரும் புலவரிடம் பல அரிய செய்திகளைக்கேட்ட அந்த உத்தியோகத்தர், பிறகு தம் ஊர்க்கதைகளையெல்லாம் சொல்லிக்கொண்டிருந்தார் அத னைப் பிள்ளையவர்களும் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

இரவில் வெகுநேரம் ஆகிவிட்டது. எல்லோருக்கும் இவர் சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்போலும் என்று எண்ணிக்கொண்டு எல்லோரும் பசியைப் பொறுத் துக்கொண்டு அந்த உத்தியோகத்தரின் வாயைப் பார்த்துக் கொண்டிருந்தனர். இரவில் அகாலமாகிவிட்டது. அதன் பின் அந்த உத்தியோகத்தர் "போய்வாருங்கள்" என்று எல்லோருக்கும் விடைகொடுத்தார். இந்த அகாலத்தில் உணவுக்கு எங்கே போவது என்று எல்லோரும் கலங்கினர். தியாகராசச் செட்டியாருக்குத் தம் ஆசிரியர் மீதே மிகுந்த எரிச்சல் உண்டாகியது. அவர் பிள்ளையவர்களைப் பார்த்து, "உங்கள் கையில் உடுக்கையும் பம்பையும் இல் லாதது ஒன்றுதான் குறை," என்று கூறினார். இதனைக் கேட்டு எல்லோரும் நகைத்தனர். பிள்ளையவர்கள் தம்

மாணவரான செட்டியாரைப் பார்த்து, "நான் என்ன செய்வது தியாகராசு! அவர்விட்டால்தானே புறப்படலாம்," என்று கூறி அவரும் நகைத்தார்.

வழக்கறிஞரின் நன்னூல்

சென்னையில் அந்நாளில் இருந்த வழக்கறிஞர் ஒருவர் நன்னூற் சூத்திரங்களில் தமக்கு விருப்பமில்லாத பாதிச் சூத்திரங்களைத் தள்ளிவிட்டு மற்றைப் பாதிச் சூத்திரங்களை மட்டும் சிறு புத்தகமாக அச்சிட்டுப் பள்ளிகளில் பாடப் புத்தகமாக வைக்குமாறு பள்ளிகளுக்கு அனுப்பினார். அந்நூற் பிரதி தியாகராசச் செட்டியாருடைய பார்வைக்கும் வந்தது. அந்நூலைப் பார்த்த செட்டியார், "இந்நூல் நன்னூலும் அல்ல நந்நூலுமல்ல," என்று கூறி அதனை ஒதுக்கிவிட்டார். செட்டியார் ஒதுக்கிவிட்ட செய்தியை உணர்ந்து மற்றைப்பள்ளி ஆசிரியர்களும் அந்நூலை ஒதுக்கி விட்டனர். இச்செய்தியை வழக்கறிஞர் உணர்ந்தார். அவருக்குச் செட்டியார்மீது சீற்றம் உண்டாயிற்று. அவர் செட்டியாரை நேரிற் பார்த்துக் கண்டிக்க வேண்டும் என்று எண்ணினார். புறப்பட்டுக் கும்பகோணத்தையடைந்தார். செட்டியாரைப் பார்த்து, "நான் வெளியிட்டுள்ள நன்னூலை ஏன் பாடமாக வைக்கவில்லை? அதில் என்ன குறை?" என்று உசாவினார் உடனே செட்டியாருக்கு மிகுந்த சீற்றம் உண்டாகிவிட்டது. "தமிழ் நூல்களைக் கூட்டவும் குறைக்கவும் உமக்கு யார் அதிகாரம் கொடுத்தது? நீர் தள்ளிவிட்ட சூத்திரங்கள் மாணவர்கட்கு வேண்டாதன என்று நீர் எவ்வாறு உணர்ந்தீர்? நீதி மன்றங்களில் வாய்ப்போரிடுவதற்குத்தான் நீர் தகுந்தவரே அன்றி வேறெதற்குத் தகுந்தவர்? இனிமேல் தமிழ் நூல்களில் கை வைக்காதீர். அவ்வாறு வைப்பீரானால் தமிழ்உலகம் உமது ஆணவத்தைப் போக்குவதற்குச் சிறி

தும் பின்வாங்காது," என்று சண்டப் பிரசண்டமாருத சொற்பொழிவில் இறங்கிவிட்டார். மறுக்கப் புகுந்தவரால் ஒரு வகைய பதிலும் உரைக்க முடியவில்லை. செட்டியாரைக் கண்டிக்க வந்தவர் செட்டியாரால் கண்டிக்கப்பட்டு மூலையைப் பிடித்தார்.

சுப்பையா பண்டாரம்

தியாகராசச் செட்டியார் கும்பகோணத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்தபோது மீனாட்சிசுந்தரம்பிள்ளை சிறிது காலம் பட்டீச்சுரத்தில் ஆறுமுகத்தாபிள்ளை யென்பவரின் வீட்டில் தங்கியிருந்தார். அந்த ஆறுமுகத்தா பிள்ளைக்குச் சுப்பைய பண்டாரம் என்னும் பெயருடைய மைத்துனர் ஒருவர் இருந்தார். ஆறுமுகத்தா பிள்ளைக்கும் சுப்பைய பண்டாரத்திற்கும் எப்போதும் பூசல் ஏற்பட்டுக் கொண்டே யிருக்கும். ஒருநாள் ஆறுமுகத்தா பிள்ளை சுப்பைய பண்டாரத்தைப் பார்த்து, "நீ பிரமாதமாக வாயாடி அடிக்கிறாயே; ஒரு பாட்டு இயற்றிக்கொண்டு கும்ப கோணம் போய்த் தியாகராசச் செட்டியாரைப் பார்த்து உன் பாட்டை அவருக்குச் சொல்லி அவரிடம் ஏதாவது பணம் பெற்று மாம்பழங்கள் வாங்கிக்கொண்டு வா பார்ப்போம்," என்றார். பிள்ளையவர்கள் முடியுமென்று கூறுமாறு குறிப்பாகச் சைகை செய்யவே சுப்பைய பண்டாரம், "ஏன் முடியாது நன்றாக முடியும், செய்யுள் இயற்றிக் கொண்டு போய் வாங்கி வருகிறேன் பார்," என்று பந்தயம் போட்டார்.

பிள்ளையவர்கள் தாமே ஒரு பாட்டை இயற்றிச் சாமிநாதையரைக் கொண்டு சுப்பைய பண்டாரத்திற்குக் கற்பித்துக் கும்பகோணத்திற்கு அனுப்பினார். சுப்பைய பண்டாரம் கும்பகோணத்தை அடைந்து தியாகராசச் செட்டி

யாரைக் கண்டார். தியாகராயச் செட்டியார், "ஐயா அவர்கள் வந்திருக்கிறார்களா?" என்று உசாவினார். பண்டாரம், "இல்லை நான் மட்டுந்தான் வந்துள்ளேன். தங்கள்மீது செய்யுள் ஒன்று பாடியிருக்கிறேன்; அதனைக் கேட்டு நன்கொடை வழங்கவேண்டும்," என்று சொன்னார். இதனைக் கேட்ட செட்டியார், "உமக்குப் பாட்டியற்றத் தெரியுமா? நீர் ஐயாவோடு சுற்றித் திரிவதைத்தான் நான் பார்த்திருக்கிறேனே யல்லாமல் பாடங் கேட்டலையோ செய்யுள் இயற்றுதலையோ நான் பார்த்ததில்லையே?" என்றார். அதற்குப் பண்டாரம், "பாட்டியற்றிப் பலரிடமும் நன்கொடை பெறுவதுதான் என்னுடைய வேலையே. நான் இயற்றியுள்ள பாடலைக் கேளுங்கள்," என்று கூறி, பிள்ளை அவர்கள் இயற்றிக் கொடுத்த,

" புண்ணியமெல் லாந்திரண்ட வடிவென்கோ
குறுமுனிவன் பொதிய நீத்திங்கு
அண்ணியதோர் வடிவென்கோ தமிழிலுள்ள
பலகலைகள் அனைத்துங் கூடி
நண்ணியதோர் வடிவென்கோ பின்னுமெந்த
வடிவமென நாட்டு கோயான்
மண்ணியமா மணியனைய தியாகரா
சப்புலவன் வடிவந் தானே "

என்னுஞ் செய்யுளைப் பாடினார்.

தியாகராசச் செட்டியார் இந்தச் செய்யுளைக் கேட்டார். அவருக்கு மிகுந்த வியப்பு உண்டாயிற்று. பண்டாரத்தைப் பார்த்து, "இந்தச் செய்யுள் நீர் இயற்றியதா?" என்றார். "ஆமாம்," என்றார் பண்டாரம். பண்டாரம் கூறியதைச் செட்டியார் நம்பவில்லை. "இத்தகைய பாடல்களை இயற்றுவதாயின் எவ்வளவு நூல்களைப் படித்திருக்க வேண்டும் தெரியுமா? நமது ஐயா அவர்கள் ஒருவரால்

தான் இத்தகைய பாடல்கள் இயற்ற முடியும். இந்தப் பாடல் ஐயா அவர்கள் செய்ததுதான். அவர்கள் எதற்காக இதனை உம்மிடம் பாடிக் கொடுத்தார்கள் அதனைக் கூறும்," என்றார். சுப்பைய பண்டாரமோ இப்பாடல் தம்முடையது தான் என்று சாதிக்கத் தொடங்கினார். செட்டியார் எளி தில் விடுவதாக இல்லை. பாட்டில் உள்ள இலக்கணங்களைப் பற்றியெல்லாம் கேள்வி கேட்கத் தொடங்கினார். சுப்பைய பண்டாரமோ வல்லடி வழக்காகவும் வாய்வீச்சாகவும் புகல்வாராகார்.

இறுதியில் தியாகராசச் செட்டியார் பண்டாரத்தைப் பார்த்து, "இந்தப் பாட்டு நீர் செய்ததுதான் என்று சத்தியஞ் செய்வீரா?" என்று கேட்டார். சுப்பைய பண்டாரம் அதற்கும் இசைந்தவராய்த் துணியைப் போட்டுத் தாண்டிச் சத்தியஞ் செய்யவுந் தொடங்கினார். செட்டியார் பண்டாரத்தைப் பார்த்து, "நீர் சத்தியஞ் செய்தாலும் இந்தப் பாட்டு நீர் இயற்றியதுதான் என்று நான் ஒருநாளும் ஒப்புக் கொள்ளப் போவதில்லை ஐயா அவர்கள் எதற்காக இந்தப் பாட்டைப் பாடி உம்மிடம் கொடுத்தார்கள் என்பதை மட்டும் கூறும்," என்றார். பிறகு சுப்பைய பண்டாரம் பட்டீச்சுரத்தில் நிகழ்ந்த செய்திகளையெல்லாம் கூறிவிட்டார். பிறகு செட்டியார் நல்ல மாம்பழங்களாக வாங்கிக் கொடுத்துப் பண்டாரத்தை அனுப்பி வைத்தார். மறுநாள் பட்டீச்சுரத்தை அடைந்து பிள்ளை அவர்களைக் கண்டு முதல் நாள் நடந்தவைகளை யெல்லாம் நவின்றார்.

பள்ளியில் பாடஞ் சொல்லுதல் எளிது

ஒருமுறை செட்டியார் திருவாவடுதுறை மடத்திற்குச் சென்றார். அப்பொழுது மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் மடத்தில் சிலருக்குப் பாடஞ் சொல்லிக் கொண்டிருந்

தார்கள். செட்டியார் அதனைக் கேட்டுக் கொண்டிருந்தார். பிறகு பிள்ளையவர்கள் செட்டியாரைப்பார்த்து, "இவ்வாறு அகவை முற்றியவர்கட்குப் பாடஞ் சொல்வது மிகத் தொல்லையாக இருக்கிறது. பள்ளியில் சிறிய பிள்ளைகளுக்குப் பாடஞ் சொல்வது எவ்வளவோ எளிது," என்று கூறினார். இதனைக் கேட்ட செட்டியார், "பள்ளியில் பாடஞ் சொல்வது எளிது என்று எண்ணுதீர்கள். இவ்வாறு வளர்ந்துள்ள பெரியவர்கள்தாம் அமைதியாகக் கேட்பார்கள். சிறுவர்கள் அடிக்கடி தொல்லை கொடுத்து உயிரை வாங்கி விடுவார்கள்," என்று கூறினார். அப்பொழுது பிள்ளையவர்கள் மேற்கொண்டு யாதும் பதில் உரைக்கவில்லை.

பின்னொரு நாள் செட்டியார் மடத்திற்குச் சென்றார். அப்போது பாடஞ் சொல்லிக்கொண்டிருந்த பிள்ளையவர்கள் செட்டியாரைப் பார்த்துச், "சிறிது நேரம் பாடஞ் சொல்லிக் கொண்டிரு; வெளியே போய்வருகிறேன்," என்றுகூறி மெதுவாக நழுவிவிட்டார்கள். செட்டியார் பாடஞ் சொல்லத் தொடங்கினார். கேட்டவர்கள் பலவகையான கேள்விகளைக் கேட்கத் தொடங்கி விட்டார்கள். செட்டியாரின்பாடு பெரும் பாடாகிவிட்டது. அவர் திக்கு முக்காடிக்கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் பிள்ளையவர்கள் திரும்பிவந்து மாணவர்களை அடக்கிவிட்டுத் தாம் பாடத்தைச் சொல்லத் தொடங்கினார்கள். அன்றுமுதல் செட்டியார் தமது கருத்தை மாற்றிக் கொண்டார்.

### திருக்குறளில் திருத்தம்

செட்டியார் ஓய்வு பெற்ற பிறகு தமது ஊருக்குச் சென்று கவலையற்றுக் காலங்கழித்துக்கொண்டிருந்தார். ஒரு நாள்வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டிருக்கும் போது ஒருவெள்ளைக்காரரும் வேறுசிலரும் செட்டியாரின்

வீட்டிற்கு வந்தார்கள். செட்டியார் அவர்களை வரவேற்றுப் பேசிக்கொண்டிருந்தார். வெள்ளைக்காரர் செட்டியாரைப் பார்த்து, "நான் மதுரையில் இருந்து வருகிறேன். தமிழ் நூல்கள் பலவற்றைப் படித்திருக்கிறேன். தமிழ்ச் செய்யுள் இலக்கணம் அறிவேன். திருக்குறள் என்னும் நூலைப் படித்துப் பார்த்தேன். அந்நூலில் சில இடங்களில் எதுகை மோனைகள் நன்ருக அமையவில்லை. நான் அந்த இடங்களெல்லாம் பொருத்தமாக அமைத்திருக்கிறேன். "தக்கார் தகவிலரென்பது அவரவர், எச்சத்தாற் காணப்படும்" இந்தக் குறளில் எச்சத்தால் என்றிருப்பதில் எதுகை சரியாக இல்லை. இதனை நான் மக்களாற் காணப்படும் என்று மாற்றியிருக்கிறேன். இவ்வாறு நான் மாற்றியிருப்பது எவ்வளவு அழகாக இருக்கிறது பார்த்தீர்களா?" என்றி கூறி மேலும் என்னென்னவோ கூறத் தொடங்கிஞர்.

வெள்ளைக்காரரின் மொழிகளைக் கேட்ட செட்டியார் துள்ளியெழுந்தார். தம்முடைய தலையிலே கைகளால் அடித்துக்கொண்டார். "சிவசிவா" என்று சொல்லிக் காதுகளையும் மூடிக்கொண்டு திண்ணையை விட்டெழுந்தார். தெரு வாசல் கதவை மூடித் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டு உள்ளே போய்விட்டார். வெள்ளையருடன் வந்தவர்கள் செட்டியாரைக் கூப்பிட்டு எவ்வளவோ நயமாகவும் பயமாகவுஞ் சொல்லிப் பார்த்தார்கள். எதையுஞ் செட்டியார் காதுகளில் வாங்கவில்லை. வந்தவர்கள் வந்தவழியே நடையைக் கட்டிஞர்கள்.

செட்டியாரின் குண நலன்கள்

செட்டியார் தவறுகண்ட இடத்தில் எத்தகையோரையும் கண்டிப்பதற்குச் சிறிதும் பின்வாங்கமாட்டார்.

செட்டியாரை ஏய்த்து விடுதலென்பதும் யாராலும் முடியாது. உண்மையாக நடந்து பணிவாகப் போனவர்கட்குச் செட்டியார் எத்தகைய உதவியையுஞ் செய்யப் பின் வாங்கார். செட்டியார் பெயரால் தனிநூல்கள் வெளிப்படவில்லையாயினும் நூல்கள் பல வெளிவருவதற்குச் செட்டியார் பேருதவியாக இருந்தார்.

செட்டியார் வேலையைவிட்டு ஓய்வு பெற்றபின் அவர் கண்பார்வை மிகவும் மங்கியது. பார்வையை ஒழுங்குபடுத்துவதற்குச் சென்னையை அடைந்து செய்த மருத்துவங்கள் பலன் அளிக்கவில்லை. செட்டியார் செட்டாகவே வாழ்க்கையை நடத்தியமையின் இறுதிக்காலத்தில் பொருட் கவலையற்றவராகக் காலங்கழித்தார். பிள்ளையவர்கள் தமது நூல் அரங்கேற்றஞ் செய்யுமிடங்களில் செட்டியாரை அழைத்து வைத்துக்கொண்டே அரங்கேற்றத்தைத் தொடங்குவார்கள். செட்டியாரோ தம் ஆசிரியரிடத்தில் பேரன்புடையவர். எவரேனும் தம் ஆசிரியரின் நூலின் இடத்திலே வீணை குற்றங்களைக் கூறின் செட்டியார் அவர்கட்குத் தக்க பாடங்கற்பித்து விடுவார். 1888-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 19-ஆம் நாள் செட்டியார் இவ்வுலக வாழ்வை நீத்து இறைவன் திருவடி நீழலை எய்தினார்.

## உ அ. கால்டுவெல்

### தோற்றமுங் கல்வியும்

1814-ஆம் ஆண்டில் ராபர்ட் கால்டுவெல் அயர்லாந்து நாட்டிலே ஒரு சிற்றூரில் பிறந்தார். பத்தாண்டுகள்வரை அவ்வூரிலேயே வளர்ந்தார். தொடக்கப்பள்ளிப்படிப்பு அவ்வூரில் தொடங்கப்பெற்றது. பிறகு தாய் தந்தையர் ஸ்காட்லாந்திற்குச் செல்லவே அங்குஞ் சென்று ஆறு ஆண்டுகள் கல்வி கற்றார். பதினாறும் ஆண்டிற்குள் இலக்கண இலக்கியங்களை இனிது கற்றுத் தேர்ந்தார். தந்தையாரின் விருப்பப்படி ஓவியக் கலையையும் நன்கு கற்று அதிலும் சிறந்து விளங்கினார். பிறகு கிளாஸ்கோ பல்கலைக் கழகத்திற்குப் போய் அதிற்சேர்ந்தார். அங்குச் சமய நூல்கள் நீதிநூல்கள் முதலியவைகளை நன்கு கற்றுத் தெளிந்தார். சர், டேனியல் சென்ட் போர்டு என்னும் பேராசிரியர் இலத்தீன், கிரீக்கு, செர்மன் முதலிய பன்மொழிப்புலவராக இருந்தமையின் ஒருமொழிக்கும் மற்றொரு மொழிக்கும் உள்ள ஒற்றுமையை நன்கு விளக்கிக்காட்டிக் கால்டுவெல்லுக்குக் கற்பித்தார். அதனால் கால்டுவெல் மொழியொற்றுமையை ஆராய்ந்துணர்வதில் வல்லவரானார்.

### சமயத்தொண்டும் தமிழ்த்தொண்டும்

கால்டுவெல் மற்றவர்களைப் போல் இன்பவாழ்க்கையை இனிது நடத்துதற்கு விரும்பவில்லை. சமயப் பணியில் இறங்கிக் கிறித்துவ மதத்தை இந்திய நாட்டிலும் பரப்புதற்குத் தொண்டு செய்யவேண்டும் என்று எண்ணினார். தமது நோக்கத்தைச் சமயத் தலைவர்கட்குத் தெரியப்படுத்தினார். சமயத் தலைவர்கள் இவரைத் தமிழ் நாட்டிற்கு அனுப்பினார்கள். 1838-ஆம் ஆண்டில் தம்

நாட்டைவிட்டுப் புறப்பட்ட கால்டுவெல் நான்கு திங்கள் கப்பல் பயணத்திற் கழித்துச் சென்னையை அடைந்தார். அந்நாளில் இந்தியாவிற்குக் குறுக்குவழி கண்டுபிடிக்கப் படாமையால்தான் கால்டுவல் நான்கு மாதம் கப்பற் பயணம் செய்ய நேரிட்டது. கப்பலில் சி. பி பிரௌன் என்னும் பெயருடையார் கால்டுவெல்லுக்குப் பழக்கமானர். பிரௌன் வடமொழிப் பயிற்சியும் தெலுங்கு மொழிப் பயிற்சியும் பெற்றிருந்தமையால், கால்டுவெல் இந்த இரண்டு மொழிகளையும் பிரௌனிடம் கற்றுத் தெளிந்தார்.

சென்னையில் துருவர் என்னும் ஐரோப்பியர் ஒருவர் தமிழ்ப்புலமையுடையவராய் அந்நாளில் விளங்கியிருந்தார். அவர் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர், திருந்திய அறிவும் பெருந்திய பண்பும் அமைந்தவர். கால்டுவெல் துருவர் வீட்டில் விருந்தினராகத் தங்கினர். அக்காலத்தில் போப், ஆண்டர்சன் என்பவர்களும் சென்னையில் இருந்தார்கள். அவர்களும் கால்டுவெல்லைப்போல் சமயத் தொண்டிற்காகத் தமிழ் நாட்டிற்கு வந்தவர்கள். அவர்கள் மலையாளம், தமிழ், தெலுங்கு முதலிய மொழிகளைக் கற்றுத் தேர்ந்திருந்தார்கள். கால்டுவெல் அவர்களை அடுத்துத் தமிழ், மலையாளம் முதலிய மொழிகளை நன்கு கற்றுத் தெளிவடைந்தார். சென்னையில் மூன்றுண்டுகள்வரை தங்கியிருந்தார். அப்போது கிறித்துவக் குருப்பட்டமும் கால்டுவெல்லுக்குச் சூட்டப்பெற்றது. அதுமுதல் அவர் தம் பெயரைக் கால்டுவெல் ஐயர் என்று வைத்துக்கொண்டார். சென்னையில் இருந்த சமயத் தலைவர்கள் கால்டுவெல்லைத் தென்பாண்டி நாட்டிற்கு அனுப்பிவைத்தார்கள்.

அந்நாளில் ஓர் ஊரில் இருந்து மற்றோர் ஊருக்குச் செல்வதற்குப் புகைவண்டி தென்னாட்டில் ஏற்படவில்லை. மாட்டுவண்டி, குதிரைவண்டி முதலியவைகளில் ஏறி நெடுந் தொலை செல்வதும் அருமையான செயல். ஆகவே, கால்டுவெல் தமிழ்நாட்டுப் புதுமைகளைப் பார்வையிட்டுக் கொண்டு கால்நடையாகவே புறப்பட்டார். மகாபலிபுரம், செஞ்சி, மயூரம், தரங்கம்பாடி, தஞ்சை, திரிசிரகிரி, திருவ ரங்கம் முதலிய ஊர்களின் வழியாகச் சென்று அவ்வூர் களின் சிறப்புக்களை யெல்லாம் பார்த்துக்கொண்டு நீல கிரியை அடைந்தார். பிறகு கோயம்புத்தூர் வழியாக மதுரையை அடைந்தார். இவர் வழிப்பயணம் சென்ற விடங்களில் பல ஊர்களில் பல வகையான தொல்லைகள் ஏற்பட்டன. தமிழ் நாட்டார் விருந்தினரைப் பேணும் திருந்திய மாண்பு பொருந்தியவர்களாக இருந்தும் கால்டு வெல் கிறித்தவ மதத்தைப் பரப்ப வந்தவர் என்பதை எண்ணி மக்கள் அவரைப் பல விடங்களில் விரட்டியடித்த னர். கால்டுவெல் ஓரிடத்தில் விரட்டப்பெற்றாரேனும் ஓரி டத்தில் போற்றப் பெற்றார். போற்றுதலுந் தூற்றுதலும் ஒவ்வொருவருக்கும் வாழ்க்கையில் நிகழ்தல் இயற்கை

மதுரையை அடைந்த கால்டுவெல் அந்நகரின் புதுமைகளையும், மாண்பையும் கண்டு இன்புற்றார். அங்குச் சிலகாலந் தங்கியிருந்தார். பிறகு புறப்பட்டுப் பாளையங் கோட்டையை அடைந்தார். அங்கிருந்த கிறித்துவர்கள் கால்டுவெல்லைப் பெரிதும் மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். அங்குச் சிலநாள் தங்கியிருந்தார். பிறகு தாம் நிலைபெற் றிருந்து தொண்டு செய்தற்குத் தக்க இடத்தை முடிவு செய்துகொள்ள எண்ணினார். நாசரேத் என்னும் ஊருக் குச் சென்றார். அங்கு முதன்முதலாக ஒரு சொற்

பொழிவு செய்தார். கால்டுவெல்லின் சொற்பொழிவைக் கேட்டவர்கள் அவரைப் பெரிதும் பாராட்டினார்கள். பிறகு பலவிடங்களினுஞ் சுற்றிக்கொண்டு இடையன்குடி என்னும் சிற்றூருக்குச் சென்றார். அவ்வூரிடத்தே கால்டுவெல்லுக்கு மிகுந்த பற்றுண்டாகியது. தமது தொண்டுக்கு அவ்வூரே தக்கது என்று முடிவு செய்தார்.

இடையன்குடி

இடையன்குடி என்னும் சிறிய ஊர், தண்ணீர், உடல் நலத் தகுதி முதலிய நலன்கள் அற்ற ஊராக இருந்தது. மேலும் அவ்வூரின் மக்கள் யாதும் அறியாத ஏழை மக்களாகக் காணப்பட்டனர். அம் மக்கட்குத் தொண்டு செய்து அவர்களைத் தம் மதத்தினராக்க எண்ணினார். ஊரின் பல இடங்களினும் கிணறுகள் தோண்டினார். தெருக்களை ஒழுங்குபெற அமைத்தார். காற்றோட்டம் வெளிச்சம் முதலிய சிறப்புகள் அமைந்த வீடுகளைக் கட்டுமாறு மக்களுக்கு அறிவு புகட்டினார். பள்ளிக்கூடத்தை உண்டாக்கினார், ஆண்களோடு பெண்களும் கல்வி கற்கச் செய்தார். முதலில் மக்கள் எதிர்ப்புக்காட்டிப் பெண் கல்வியைத் தடுக்க முற்பட்டனர். ஆயினும் நாளடைவில் அவர்கள் கால்டுவெல் காட்டும்வழி சிறந்த தென்று அவரெண்ணப்படியே நடக்கலாயினர். கோயில் ஒன்றையும் ஊரின் நடுவில் அமைத்து அவ்வூரைச் சிறந்த ஊராக மாற்றினார். அந்நாளில் சென்னைக் கவர்னராக இருந்த லார்டு நேப்பியர் என்பார். கால்டுவெல்லின் தொண்டினைப் பற்றிக் கேள்விப்பட்டார். தமது உறுதிச் சுற்றத்துடன் இடையன்குடிக்கு வந்து கால்டுவெல்லுடன் சின்னாள் தங்கி அவருடைய பணியைப் போற்றிப் புகழ்ந்து சென்றார்.

திருமணம்

கால்டுவெல்லுக்கு அவருடைய இருபத்தொன்பதாம் அகவையில் திருமணம் நடைபெற்றது. வாழ்க்கைத்துணைவியாக அமைந்தவர் நாகர்கோவிலில் இருந்த ஆங்கிலப் பாதிரியார் சார்லஸ்மால்ட் என்பவருடைய மகளான எலிசா என்னும் பெண்மணி. அப் பெண்மணி தமிழ் நாட்டுப் பழக்க வழக்கங்களை நன்கு உணர்ந்தவர். நன்றாகத் தமிழ் பேசும் ஆற்றலுடையவர். ஆகவே, கால்டுவெல்லின் தமிழ்ப் பயிற்சியும் ஆராய்ச்சியும் மேலுஞ் சிறந்தோங்க வழியாயிற்று. கால்டுவெல்லுக்கு இரண்டு பெண் மக்களும் ஓர் ஆண்மகனும் தோன்றினர். மகன் கல்வி கற்றபின் அலுவலின் பொருட்டு ஆத்திரேலியா சென்றான். பெண்மக்கள் இருவருக்கும் தமிழ் நாட்டிலேயே திருமணம் நடைபெற்றது.

நூலாராய்ச்சி

கால்டுவெல் சமயத் தொண்டுடன் தமிழ்த்தொண்டிலும் முழுக்கருத்தையுஞ் செலுத்தினர். தம்மை ஒரு தமிழன் என்று எண்ணியவராய்த் தமிழாராய்ச்சியில் ஈடுபட்டார். இடையன்குடியின் தட்பவெப்பநிலை கால்டுவெல்லுக்கு ஒத்துக்கொள்ளவில்லை. அதனால் அடிக்கடி உடல் நலமற்று வருந்தினர். ஆயினும் தம் தொண்டுகளில் சிறிதுந் தளர்ச்சியடையவில்லை. சங்க நூல்களைக் கற்றறிதல் கால்டுவெல்லுக்கு மிகுந்த இன்பத்தை அளித்தது. தமிழ் இலக்கண இலக்கிய ஆராய்ச்சியிலும் சமய போதனையிலும் தமது காலத்தைப் போக்கினர். ஆண்டுதோறுங் குற்றால நீர்வீழ்ச்சிக்குச் சென்று நீராடி உடல்நலம் பெற்றார். குற்றால நீர் பலவகையான மலை மூலிகைகளால் மருந்துத் தன்மை பெற்று விளங்குகிறதென்பது கால்டு

வெல்லின் கொள்கை. கிறித்துவ சமயத் தெய்வ வணக்க நூலுக்கும், பைபிள் தமிழ் மொழிபெயர்ப்புக்கும் கால்டு வெல் பெரிதும் உழைத்தார். தமிழ்நாட்டு ஆராய்ச்சியில் கால்டுவெல் பெரும்பங்கு கொண்டார். மறைவுபட்டுக் கிடந்த பல செய்திகளை வெளிப்படுத்தினர். அதனால் தமிழ்நாட்டின் சிறப்பு நன்கு புலப்படுவதாயிற்று.

நாட்டின் உயர்வுக்கே அல்லாமல் மொழியின் உயர்வுக் கும் கால்டுவெல் காரணராக அமைந்து நின்றார். மொழியா ராய்ச்சிகள் பலவற்றைப் படித்தார். மொழிகளின் வேர்ச் சொற்களை ஆராய்ந்தார். ஏறக்குறைய இருபதாண்டு கள், தென்னிந்திய மொழிகளான தமிழ், தெலுங்கு, மலையாளம், துளுவம், குடகு, துதம், கோதம், கோண்டு, கந்தம், இராஜ்மகால் ஒராவோன் ஆகிய மொழிகளை ஆராய்ச்சி செய்து தாம் கண்ட முடிவுகளையெல்லாம் ஒன்றுபடுத்தி, "தென்னிந்திய மொழிகளின் ஒப்பிலக்கணம்" என்னும் அரிய நூலை வெளிப்படுத்தினர். இத்தகைய நூல் இதற்கு முன் வெளிவராத படியால் இந்நூல் தலை சிறந்த முதல்நூலாக விளங்கியது. இதனால், இவருடைய புகழ் மேலும் வளர்ந்து சிறந்தது.

மொழியாராய்ச்சியில் கால்டுவெல் தம் கருத்துக் களை, "மலையாளம் தமிழொடு நெருங்கிய தொடர்புடையது. அது பிற்காலத்தில் வடமொழியோடு கலந்து தன் பழைய வடிவத்தை இழந்துவிட்டது. அவ்வகையே கன்னடமும் தெலுங்கும் வடமொழிகளை மிகுதியாக ஏற்றுத் தனித்தி யங்கும் ஆற்றல் இழந்தன. தமிழ்மொழி வடசொற்கள் பலவற்றை ஏற்றுக்கொண்டுள்ளதாயினும் அவைகளை நீக்கி விட்டுத் தனியாக இயங்கும் ஆற்றல் உடையது," என்று வெளிப்படுத்தினர். மற்றுந் தமிழ்மொழியின் இலக்

கணச் சிறப்பு முதலியவைகளையும் உலகிற்குப் புலப்படுத்தினர். இவருடைய தமிழ்த்தொண்டு எல்லோராலும் நன்கு போற்றப் பெற்றது. கிளாஸ்கோ பல்கலைக் கழகத்தார் கால்டுவெல்லின் தொண்டுகளைப் பாராட்டி, 'டாக்டர்' என்னுஞ் சிறப்புப்பெயர் கொடுத்து மேன்மைப்படுத்தினர்.

இறுதி

ஐம்பது யாண்டுகளுக்குமேல் பொதுநலத்தொண்டு புரிந்து முதுமையை அடைந்த கால்டுவெல் ஓய்வு பெற்று அமைதியாகக் காலங்கழிக்க எண்ணினர். கோடைக்கானலுக்குச் சென்றார். அங்குக் கோயில் இல்லாமையைக் கண்டு கோயில் ஒன்றைக் கட்டினர். மகன், மருகன், மனைவி, மகள் முதலியோர் சூழ்ந்திருக்கத் தமது எழுபத்தாறும் அகவையில் 1891-ஆம் ஆண்டில் இறைவன் திருவடியை அடைந்தார். அவருடைய உடல் பெட்டியொன்றனுள் வைக்கப்பட்டு இடையன்குடிக்கு எடுத்துச்செல்லப்பட்டது. அவர் முன்பே தெரிவித்திருந்தபடி அங்கு அவர் அமைத்திருந்த கோயிலுக்குள் அடக்கஞ் செய்யப்பட்டது.

இயற்றிய நூல்கள்

1. தென்னிந்திய மொழிகளின் ஒப்பிலக்கணம்
2. தாமரைத் தடாகம்
3. ஞானஸ்நாநம்
4. திருநெல்வேலிச் சரிதம்
5. நற்கருணை

முதலியன கால்டுவெல்லால் எழுதப்பெற்ற நூல்களாம்.

---

## உ௬. கனகசபைப் பிள்ளை

தோற்றமுந் தொழிலும்

1855-ஆம் ஆண்டு மேத்திங்கள் இருபத்தைந்தாம் நாள் சென்னை கோமளேசுரன் பேட்டையில் கனகசபைப் பிள்ளை பிறந்தார். அவருடைய தந்தையார் பெயர் விசுவநாத பிள்ளை. அவர் யாழ்ப்பாணத்திலுள்ள மல்லாகம் என்னும் ஊரினர். ஆங்கிலத்திலும் தமிழிலும் சிறந்த அறிவு பெற்றிருந்தார் அந் நாளில் வின்ஸ்லோ என்னும் வெள்ளைப் பாதிரியார் சென்னைமா நகரிலே ஆங்கிலத் தமிழ்ப் பேரகராதி ஒன்றைத் தொகுத்துக் கொண்டிருந்தார். அப்போது சென்னைக்கு வந்து கல்வித் துறைத் தலைவரின் அலுவலகத்தில் பணியாற்றிக் கொண்டிருந்த விசுவநாதர் வின்ஸ்லோவின் அகராதிக்குப் பெருந்துணையாக அமைந்து நின்றார்.

கனகசபைப் பிள்ளை இளைஞராக இருந்தபோதே அறிவுநலஞ் சிறந்தவராக விளங்கினார். மிக இளைஞராக இருந்தபோதே இவர் பட்டம் பெற்றமையின் இவரைப் பலரும் பட்டதாரிப் பையன் என்று அழைத்தனர். பி. ஏ. பட்டம் பெற்றபின் வழக்கறிஞர் தொழிலுக்குப் படித்துத் தேர்ச்சி பெற்றார். தம் மாமன் மகளாகிய செல்லம்மாள் என்னும் நல்லாளை மணம்புரிந்து இல்வாழ்க்கையைத் தொடங்கினார். சிறிது காலம் மதுரையிலே வழக்கறிஞர் தொழிலை மேற்கொண்டிருந்தார். பின்னர்ச் சென்னைமா நகரை அடைந்து அஞ்சற் பிரிவில் பணியாற்றத் தொடங்கினார். படிப்படியாக உயர்ந்து அஞ்சல் நிலையங்களின் மேற்பார்வையாளரானார்.

தமிழாராய்ச்சி

அலுவலை முன்னிட்டுக் கனகசபைப் பிள்ளை அவர்கள் தமிழ்நாட்டில் உள்ள ஊர்கள்தோறுஞ் செல்ல

வேண்டியதாக இருந்தது. பிள்ளையவர்கட்குத் தமிழ்ப் பற்று மிகுதியாக உண்டு. பல நூல்களையும் ஆராய்ச்சி செய்திருந்தார். அந் நாளில் உ. வே சாமிநாதையர் நூலாராய்ச்சியிலும் ஏடு தேடும் வேலையிலும் ஈடுபட்டிருந் தார். கனகசபைப் பிள்ளை தாம் செல்லும் இடங்களிலும் பழைய ஏட்டுச்சுவடிகள் எவரிடமேனும் உள்ளனவா என்று ஆராய்ந்து பெற்றார். அவ்வாறு பெற்றவைகளிற் பலவற்றை மேற்படி ஐயரவர்கட்கும் வழங்கினார்.

கனகசபைப் பிள்ளையின் தாய் தந்தையர் கனகசபைப் பிள்ளையின் முப்பதாவது அகவையிலே காலமாயினர். அதற்குமேல் அடுத்தடுத்துத் தம் இரண்டு குழந்தைகளை இழந்தார். இவைகளால் அவருடைய உள்ளம் உலக வாழ்வை வெறுத்தது. உள்ளம் பொய்வாழ்வில் சென்று நையாவாறு ஆழ்ந்த கருத்துடன் நூல்களை ஆராய்ச்சி செய்தார். எட்டுத்தொகை பத்துப் பாட்டு முதலிய நூல் களை நன்கு ஆராய்ந்ததில் ஆயிரக் கணக்கான ஆண்டுகட்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்திருந்த மக்களின் வரலாறுகள் ஒருவாறு விளங்கலாயின. அம் முடிபுகளை உடனுக்குடன் கட்டுரைகளாகப் பத்திரிகைகளில் வெளிப்படுத்தினார். அக் கட்டுரைகளைப் படித்த அறிஞர்கள் அவைகளைப் பெரிதும் பாராட்டினர். அந்நாளில் சென்னை உயர்தர நீதிமன்றத்தில் தலைமை நீதித் தலைவராக இருந்த சுப்பிரமணிய ஐயர் என் பவர் கனகசபைப் பிள்ளையின் கட்டுரைகளைப் பாராட்டினார். மேலும் அத்தகைய கட்டுரைகளை எழுதி வெளியிடுமாறு ஊக்கினார். கனகசபைப் பிள்ளை ஐந்தாறு ஆண்டுகள்வரை தொடர்ந்து பல கட்டுரைகள் எழுதினார். அக் கட்டுரைகளை ஒன்றுபடுத்தி நூல் வடிவாக வெளியிட வேண்டுமென்று பலரும் ஊக்கினர்.

*1800 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழர்*

கட்டுரைகள் தனித் தனியாக இருப்பின் நாளடைவில் அழிந்தொழிந்து மறைந்து போகும் என்று எண்ணிய கனகசபைப் பிள்ளை தம் கட்டுரைகளை யெல்லாம் ஒன்று படுத்தி ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழர் என்று பெயர் கொடுத்து 1904-ஆம் ஆண்டில் வெளிப்படுத்

அந்நூல் பதினாறு பிரிவுகளாக அமைந்து அக் கால மக்களின் வாழ்க்கை வரலாறுகளைத் தெளிவாக விளக்கு கின்றது. நிலப் பிரிவுகள், தமிழகத்தைச் சுற்றியுள்ள நாடு கள், வாணிபம், அரசர்கள் முதலிய எல்லாச் செய்திகளையும் அந் நூலில் காணலாம்.

இவருடைய, நூல் பிற நாட்டறிஞர்களாலும் பெரிதும் பாராட்டப் பெற்றது. இந் நூலைப் படித்த ஸ்மித் என்னும் ஆங்கிலப் பேராசிரியர், "இந்திய சரித்திரம் தென்னிந்தி யாவில் இருந்து தொடங்கி எழுதப் பெறாத வரையில் அது நிறைவு பெற்றதாகாது," என்று கூறினார். இவர் நிறை வேற்றியது இவ்வொரு நூலேயாயினும் இதனால் இவருக் குப் பெரும் புகழ் உண்டாயிற்று.

கனகசபைப் பிள்ளை தமிழில் மட்டும் அன்றி ஆங்கி லத்திலும் சிறந்த அறிஞராக விளங்கினார். ஆங்கிலத்திலும் பல கட்டுரைகள் எழுதிச் சீர்த்தி பெற்றார். நூல்களை மொழி மாற்றி மொழி பெயர்ப்பதிலும் இவருக்கு மிகுந்த திறமையுண்டு.

*பிற தொண்டுகள்*

கனகசபைப் பிள்ளை தமிழாசிரியராக

ஆயினும், இவரது தமிழாராய்ச்சித் திறனை நன்குணர்ந்தவர்

கள் பல சொற்பொழிவுகட்கும் விழாத் தலைமைக்கும் அழைத்துச் சென்றனர். மதுரைத் தமிழ்ச் சங்கத்தினர் 1905-ஆம் ஆண்டில் அச் சங்க விழாவிற்குத் தலைமை தாங்கச் செய்தனர். கல்வித் துறையினர் இவரை அத் துறைக்கு இழுத்து பி. ஏ., எம். ஏ. முதலிய தேர்வுகளில் தேர்வாளராகச் செய்தனர். சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் இவரிடத்தில் பெரு மதிப்பும், பேரன்பும் உடையவர்.

இறுதி

கனகசபைப் பிள்ளை தமிழாராய்ச்சியில் மிகுதியாக ஈடுபட்டிருந்தபோதினும் தம் அலுவலில் சிறிதுந் தவறினாரல்லர். அத் துறை அதிகாரிகள் இவருடைய வேலைத் திறமையைப் பெரிதும் போற்றினார்கள். 1906-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் இவர் தம் அலுவலை முன்னிட்டுக் காஞ்சி நகருக்குச் சென்றார். சிவராத்திரி நன்னாளில் அவ்விடத்திலேயே இறைவன் திருவடி நீழலை அடைந்தார்.

---

## ௩0. கிருட்டிண பிள்ளை

தோற்றம்

தென்பாண்டி நாட்டிலே திருநெல்வேலிப் பாளையங்கோட்டைக்கு அண்மையில் உள்ள இரட்டியாபட்டி என்னுஞ் சிற்றூரிலே, 1827-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் இருபத்துமூன்றும் நாள் கிருட்டிணபிள்ளை பிறந்தார். கிருட்டிண பிள்ளையின் தந்தையார் பெயர் சங்கர நாராயண பிள்ளை தாயார் பெயர் தெய்வநாயகி யம்மாள். குலம் வேளாளர் குலம் சங்கர நாராயண பிள்ளை திருமாலிடத்திலே பெருமால் கொண்ட வைணவ சமயத்தினர். நல்ல தமிழறிஞர். அவருடைய மனைவியாராகிய தெய்வநாயகி

யமமையாரும் கல்வியறிவுடையவர். இராமாயணப் பாடல்களுக்குப் பொருள் உரைக்கக் கூடியவர். கிருட்டிண பிள்ளைக்கு இளவலாய் முத்தையா என்றொரு மைந்தருந் தோன்றினர்.

கல்வி

பெற்றோர்கள் மக்கள் இருவரையும் வைணவ சமயக் கொள்கைக் கேற்ப வளர்த்து வந்தனர். உரிய காலத்திலே கல்விப் பயிற்சி தொடங்கப் பெற்றது. முதலில் தந்தையாரே மைந்தர்கட்கு ஆசிரியராக அமைந்து நின்று கல்வி போதித்தார். வைணவ சமய நூல்களாகிய திருவரங்கத் தந்தாதி, திருவரங்கக் கலம்பகம், திருவேங்கடமாலை, திருவேங்கடத் தந்தாதி முதலிய நூல்கள் போதிக்கப்பட்டன. கிருட்டிண பிள்ளை அகவை பதினொன்கை யடைந்தபோதே கம்பராமாயணத்தைப் படிக்கவும் பொருள் கூறவும் வல்லவரானர். பின்னர்த் தந்தையார் மாணிக்கவாசகத் தேவர் என்னும் புலவரை அமர்த்தி இலக்கணங் கற்றுக்கொடுத்தார்.

திருமணம்

1842-ஆம் ஆண்டிலே, கிருட்டிண பிள்ளைக்குத் திருமணம் நடைபெற்றது.

மேலுங் கல்விப் பயிற்சி

கிருட்டிண பிள்ளைக்குத் திருமணமான பின் தந்தையார் சங்கர நாராயண பிள்ளை காலமானர். அதன் பின் கிருட்டிண பிள்ளையும் அவருடன் பிறந்தார் முத்தையா பிள்ளையும், அந் நாளில் மிகுபுகழ் பெற்று விளங்கிய பெரும் புலவர் திருப்பாற்கடல்நாத கவிராயர் என்பவரிடத்தே ஐந்திலக்கணங்களையும் வழுவறக் கற்றுத் தேறினர்.

சமயப்பற்று

கிருட்டிணபிள்ளை முதலில் வைணவசமயத்தில் பெரும்பற்றுக் கொண்டவராய், வீர வைணவராய் விளங்கினார். அக் காலத்தில் திருநெல்வேலி நாட்டில் கிறித்து சமய வளர்ச்சிப்பணி மிகக் கடுமையாக நடந்துகொண்டிருந்தது. கிறித்து சமயம் நாட்டில் விரைவாக வளர்ச்சியடைவதைக் கண்டு தளர்ச்சி கொண்ட கிருட்டிண பிள்ளை, அவ் வளர்ச்சிக்கு எதிராகக் கிளர்ச்சி செய்வாரோடு கூடிக் கொண்டு, கிறித்துவர்களை அடித்துத் தொல்லைப்படுத்தினார். கிருட்டிண பிள்ளையின் கூட்டத்தார் கிறித்தவர் வீடுகளிற் புகுந்து கொள்ளையடித்தனர். இச் செய்தி மாவட்டத் தலைவருக்கு எட்டியவுடன் அவர் கொள்ளைக் காரர்களைப் பிடித்து வரும்படி கட்டளை அனுப்பினார். கிருட்டிண பிள்ளையின் கூட்டத்தார் பலர் பிடிபட்டு அடிபட்டுத் தண்டனைக்குள்ளாயினர். ஆனால், கிருட்டிண பிள்ளை மட்டும் பிடிபடவுந் தண்டனையடையவும் இல்லை. கிறித்துவர்களிடம் கொள்ளையடித்த உப்பு மூட்டைகள் பலவற்றைச் சிலர் அதிகாரிகட்கு அஞ்சிக் கிருட்டிண பிள்ளை வீட்டுக் கிணற்றில் கொட்டிவிட்டனர். அக் கிணற்று நீர் இன்றைக்கும் உப்புக்கரித்துக்கொண்டே இருக்கிறது.

ஆசிரியத் தொழில்

அந் நாளில் சாயர்புரம் என்னும் இடத்தில் இருந்த கிறித்துவர்களுடைய கல்லூரிக்குத் தமிழாசிரியர் ஒருவர் தேவைப்பட்டனர். அவ் வேலையைப் பெறுதற்கு மூவர் போட்டியிட்டனர். மூவரும் ஆராயப் [illegible] டிண பிள்ளைக்கே தமிழாசிரியர் வேலை 1852-ஆம் ஆண்டு மேத் திங்கள் 27-ஆம் நாள் கிடைத்தது. கிருட்டிண

பிள்ளை அவ் வேலையைப் பேருக்கத்துடனும் கல்லூரித் தலைவர் போற்றுமாறும் ஆற்றினார்.

கிறித்துசமயப் பற்று

கிறித்தவர்களுடைய ஆதரவிலே தொழில்புரியத் தொடங்கிய கிருட்டிண பிள்ளை, கிறித்துவர்கள் மனமகிழுமாறு கிறித்துவ சமய நூல்களைப் படித்து அச் சமயச் செய்திகள் பலவற்றைத் தெரிந்து கொண்டார். பாதிரிமார்கள் இதுதான் தக்க சமயம் என்று கிருட்டிணபிள்ளைக்குச் சிறிது சிறிதாக மதமாற்ற மருந்தேற்றத் தொடங்கினார்கள். முதலில் கிருட்டிணபிள்ளை அந் நிலைக்கு இடங்கொடாமல் உறுதியான கொள்கையில் இருந்தார். அந் நாளில் திருநெல்வேலியில் இருந்த உயர் வகுப்பினர் பலர் கிறித்துசமயத்தில் புகுந்தனர். பாளையங்கோட்டைக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்த சண்முகநாதக் கவிராயர், தனக்கோடிராசு, மனக்காவலப் பெருமாள் பிள்ளை என்னுஞ் சிலர் கிறித்து சமயம் புகுந்தனர். கிருட்டிண பிள்ளையையுங் கிறித்தவ சமயத்தில் சேருமாறு பாதிரிகள் வற்புறுத்தினர். இச் சமயத்தில் கிருட்டிண பிள்ளையின் உடன்பிறந்தாராகிய முத்தையாபிள்ளையும் 1857-ஆம் ஆண்டில் கிறித்து சமயத்தில் புகுந்தார். இதனை யறிந்து கிருட்டிணபிள்ளை வியப்பும் மனவருத்தமுங் கொண்டார்.

கிருட்டிணபிள்ளை கிறித்தவராதல்

முத்தைய பிள்ளை கிறித்துவரான பின் கிருட்டிண பிள்ளையையுங் கிறித்துவராக்கப் பாதிரிகள் பெரிதும் முயன்றனர். கரைப்பார் கரைத்தால் கல்லுங்கரையும் அன்றோ? நாளடைவில் கிருட்டிண பிள்ளையின உளள

மும் மாறத்தொடங்கியது. அவர் கிறித்துவராதலைப்பற்றிப் பல நாள் எண்ணமிட்டார். கிறித்துவராகும் எண்ணம் கிருட்டிண பிள்ளையின் உள்ளத்தில் ஏற்பட்டிருக்கிறதென் பதை யறிந்து அவருடைய குடும்பத்தினர் பெருங்கவலை கொண்டனர். கிருட்டிணபிள்ளையின் உடன் பிறந்தாராகிய முத்தையபிள்ளை முதலியோர் கிறித்துவசமயத்தில் சேரும்படி அடிக்கடி கிருட்டிணபிள்ளையை வற்புறுத்திக் கொண்டிருந்தனர். சென்னையை அடைந்து கிறித்து சமயத்தில் சேருவதென்று முடிவு செய்தார். வேலையை வேறொருவரிடம் ஒப்படைத்துவிட்டுச் சென்னைக்குச் சென்றார். இராயப்பேட்டையில் இருந்த சலிவன் தோட்டத்துக் கிறித்துவர்களுடன் சேர்ந்துகொண்டார். 1858-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 18-ஆம் நாள், சென்னை மயிலாப்பூரில் உள்ள கிறித்துவக்கோயிலில் ஞான தீட்சை பெற்று, "ஹென்ரி ஆல்பிரெட்" என்று அழைக்கப்பெற்றார். இவருக்கு ஞான தீட்சை கொடுத்தவர் ஜான் ஹெஸ்டு ஐயர். கிருட்டிணபிள்ளை கிறித்துவசமயம் புகுந்து ஹென்ரி ஆல்பிரெட்டாக மாறியபோது அவருக்கு அகவை முப்பது. முப்பது ஆண்டுகள் வரை கொடிய வீரவைணவராக விளங்கிய இவர் பிறசமயம் புகுந்ததைக் கண்டு பலரும் பெருவியப்படைந்தனர்.

பிறசமயம் புகுந்தவுடன் கிருட்டிண பிள்ளை,

"பிறவியில் பிடிவாத கொடியவை ணவனாய்ப்
பிறந்து முப்பது வற்சரம்
பிரபஞ்ச மயல்கொண்டு மூடந்த காரப்
பிழம்பில் அடைபட் டுழன்று,
மறவினைக் காளாகி நெறியிலாத் தூர்த்தமன
வாஞ்சைக் கிடங்கொ டுத்து
மருளுற்று வறிதுநாள் செலவிட்ட நீசனெனை
மலரடிக் காட்ப டுத்தி,

குறைவிலாப் பேரருள் அளித்தின் றுகாறும்
குறிக்கொண்டு காத்தி யெனினும்
கொசசைமதி யேற்கின்னும் நன்றியறி யாக்கெட்ட
குணதோடம் ஒழிய விலையே,
இறைவலப் புறமிருந் தடியருக் காப்பரிந்து
என்றுமன் றாடு முகிலே
ஏசுநா யகசருவ லோகநா யககிறித்
தியேசுநா யகசு வாமியே.”

என்னும் பாடலைப் பாடினார்.

குடும்பத்தாரும் கிறித்துவராதல்

கிருட்டிண பிள்ளை கிறித்துவராக மாறியபின் பாளையங்கோட்டையை அடைந்து தம் உடன்பிறந்தாராகிய முத்தைய பிள்ளையின் வீட்டில் தங்கினார். கிருட்டிண பிள்ளை கிறித்துவராக மாறிவிட்டார் என்னுஞ் செய்தியை அறிந்ததும் அவருடைய குடும்பத்தினர் பெருங்கவலை கொண்டனர். மனைவியார் தம் பிள்ளைகளைப் பாளையங்கோட்டையில் விட்டுவிட்டுத்தம் பெற்றோர் வீடு போய்ச் சேர்ந்தார். ஒன்றரையாண்டுகள் கழித்து மக்களைப் பிரிந்திருக்கமுடியாமல் பாளையங்கோட்டையை அடைந்து தனியாக ஒரு வீட்டில் தங்கினார். மக்கள் தாய் தந்தை என்னும் இருவரிடத்திலும் போக்குவரத்துடன் இருந்தனர். நாளடைவில் அவர்களுடைய மனங்களும் மாறின. 1860-ஆம் ஆண்டில் அவர்களுங் கிறித்துவ சமயத்தில் புகுந்தனர்.

மீண்டும் ஆசிரியத்தொழில்

மனைவிமக்களும் கிறித்துவர்களான பின் கிருட்டிண பிள்ளை மனமகிழ்ச்சியடைந்தார். திருநெல்வேலி சி. எம். எஸ். கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராக அமர்ந்தார்.

நூல் இயற்றல்

நூல் இயற்றுதலினும், செய்யுள் இயற்றுதலினும் வல்லவராக இருந்த கிருட்டிண பிள்ளை 'இரட்சணிய யாத்திரிகம்' என்னும் நூலை இனிய பாக்களால் பாடினார். இது முதலில் நற்போதகம் என்னும் பத்திரிகையில் வெளியாயிற்று. பிறகு 1894-ஆம் ஆண்டில் புத்தகவடிவமாகவும் வெளியாயிற்று. இந்நூல் கிறித்துவசமயத்தினருக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது.

இறுதி

ஹென்ரி ஆல்பிரெட் கிருட்டிண பிள்ளை அவர்கட்கு அடிக்கடி பலவகையான நோய்கள் உண்டாகித் தொல்லை கொடுத்தன. மனைவியாரும் நோய் கண்டு வீடு பேறுற்றார். கிருட்டிண பிள்ளை 1900-ஆண்டில் பிப்ரவரித் திங்கள் 3-ஆம் நாள் தமது எழுபத்துமூன்றும் அகவையிலே, "ஏசு பெருமானே என்னை இரட்சியும்," என்று கூறி இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.

---

## ௩௧. போப்பையர்

தோற்றமுங் கல்வியும்

புலவர் போப்பையர் என்று புகழ்பெற்ற போப், 1820-ஆம் ஆண்டில் நோவா ஸ்கோஷியோவில் உள்ள பிரின்ஸ் எட்வர்ட் தீவில் பிறந்தார். இவருக்கு இடப்பெற்ற பிள்ளைப் பெயர் ஜியார்ச் யுக்ளோ என்பது. ஜியார்ச் யுக்ளோ போப்பின் தந்தையாரது பெயர் ஜான் போப் என்பதாகும். அவர் பிளிமத்துக்கு அண்மையில் டர்ன் சேப்பல் என்னுமிடத்தில் குடியிருந்தார். அவர்

சபைப் போதகராகவும் சமயத்தைப் பரப்புந்தொண்டரா கவும பணிசெய்ய விரும்பினர். ஆயினும் அவருடைய எண்ணம் நிறைவேறவில்லை.

போப்பையரோடு உடன் பிறந்தவர்கள் பத்துப் பெயர். எல்லோரும் சமயத்தொண்டர்களாகிப் பணி புரிந்தனர். போப் சிறுவராயிருக்கும்போதே சமயத் தொண்டில் ஈடுபடவேண்டும என்று எண்ணங்கொண்டார். இந்தியாவிலும் மற்றைய இடங்களிலும் நடைபெற்றுக் கொண்டிருந்த சமயத்தொண்டைப்பற்றி அவர் கேள்விப் பட்டார். தென்னிந்தியாவுக்குக் கிறித்து சமயத்தொண்ட ராகச் செல்லவேண்டும் என்னும் விருப்பும் அவருக்கு ஏற்பட்டது. அதுமுதல் அவர் தம்மைச் சமயத்தொண்டு செய்வதற்குத் தோது செய்து கொண்டார். கிறித்துவ மறையைப் பன்முறை படித்தார். கிறித்துவ மறையை நன்கு ஆராயும் பொருட்டு எபிரேய மொழியையும் கிரேக்கு மொழியையும் பயின்றார். தகுந்த பயிற்சியில்லா மல் எவருஞ் சமயத்தொண்டில் இறங்கக்கூடாது என்பது போப்பின் கொள்கை.

### இந்தியாவுக்கு வருதல்

1838-ஆம் ஆண்டு முதல் போப் தமிழ்மொழியும் வடமொழியும் பயிலத்தொடங்கினர். 1839-ஆம் ஆண்டில் வெஸ்லியன் சங்கத்தார் போப்பை இந்தியாவுக்கு அனுப்பத் தெரிந்தெடுத்தார்கள். போப் மனமகிழ்ச்சியடைந்தார். சென்னைக்குப் புறப்பட்ட மரக்கலம் ஒன்றில் பயணமானர். அக்கால மரக்கலப்பயணம் மிகவுந் தொல்லையானது. அந் நாளில் குறுக்குவழி கண்டு பிடிக்கப்படவில்லை. சுற்றுவழி களில்தான் மரக்கலங்கள் வரவேண்டும். போப்பையர் புறப்பட்ட மரக்கலம் சென்னை வந்து சேர்வதற்கு எட்டுத்

திங்கள்களாயின. எட்டுத் திங்கள்களும் அவர் கப்பலில் இருக்கும்படியாகநேர்ந்தது. அக்காலத்தை அவர் அவமாக்க வில்லை. கப்பலில் நாள்தோறும் எட்டுமணி நேரம் அவர் தமிழும் வடமொழியும் படித்தார். கப்பலில் வரும் போதே அவர் தமிழ்மொழியில் சொற்பொழிவு ஒன்றை எழுதி முடித்துக்கொண்டு வந்தார் அக் கப்பலில் தமிழ் அறிந்த வேறுசில வெள்ளையரும் சென்னைக்கு வந்தனர். போப் சென்னையை அடைந்ததும் மிகுந்த மகிழ்ச்சியடைந் தார்.

## தமிழ்நாட்டு வாழ்க்கை

சென்னையை அடைந்த போப்பையர் தமது திருப் பணிகளைத் தொடங்கினார். தாம் கப்பலில் வரும்போது எழுதி வைத்திருந்த சொற்பொழிவைச், "செந்தோம்" என்னும் இடத்தில் எடுத்துப் படித்துத் தமது சொற் பொழிவைச் சென்னையில் முதன் முதலாகத் தொடங்கி னார். அச்சொற்பொழிவின் எழுத்துப்படி போப்பையரின் குடும்பத்தாரிடம் இன்னும் இருக்கிறதாம். அச் சொற் பொழிவைக் குறித்துப் போப்பையர் பின்னளில் தம் மக னிடம் "நான் இந்தியாவில் முதன்முதலாகச் செய்த சொற் பொழிவு இது. இந்தச் சொற்பொழிவுக்கு வந்தவர்கள் என்னையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஆயினும், அவர் களுக்கு ஒன்றும் விளங்கியிராது என்பது உண்மை. இன்று நான் இதனைப் படித்துப் பார்த்தால் எனக்கே இதன் பொருள் விளங்கவில்லை," என்று சொன்னாராம். தமிழ்நாட்டில் தமிழில் பேசினல்தான் எல்லோரும் அறிந்து கொள்வார்கள் என்பது போப்பையரின் கொள்கை. ஆகையால்தான் இந்தியா வந்ததும் தமிழி லேயே பேசத் தொடங்கி விட்டார். தமிழ்நாட்டில் பிறந்

தும் தமிழிற் பேசத் தெரியாத சிலர் இருப்பது மிகுந்த வியப்பன்றோ?

போப்பையர் சென்னையில் செந்தோம் என்னும் இடத்தில் சமயப்பணி செய்தார். திருச்சபை வரலாற்றை யும் திருச்சபை பற்றிய பல நூல்களையும் நன்கு ஆராய்ந் தார். தமிழ்மொழியையுங் கருத்துடன் கற்றார். மலையாளம், கன்னடம், தெலுங்கு முதலிய தமிழின் கிளைமொழிகளை யும் கற்றார். போப்பையர் ஒரு கணப்பொழுதையும் வீணாக்கவில்லை.

ஜியார்ஜ்போப் ஆராய்தற்குரிய நூல்கள் பலவற்றை ஆராய்ந்து, இங்கிலாந்து திருச்சபையைச் சேர்வதென்று முடிவு செய்தார். அக் காலத்தில் சென்னை அத்யட்சராயி ருந்தவர் அவரை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு குருப் பட்டம் கொடுத்தார். திருநெல்வேலி மாவட்டத்தில் சம யப்பணி செய்யுமாறு அங்கு அனுப்பினார்.

சாயர்புரம்

சாயர்புரம் என்னும் ஊர் திருநெல்வேலி மாவட்டத் தில் தூத்துக்குடிக்குப் பத்து மைலுக்குத் தென் மேற்கே இருக்கிறது. அவ்வூரையடுத்துள்ள இடங்களெல் லாம் மணற்குன்றுகளாக இருக்கும். சாயர்புரத்திற்கும் கடற்கரைக்கும் ஐந்து மைல் இருக்கும். கொற்கை சாயர் புரத்திற்கு ஏழுமைல் தொலைவில் இருக்கிறது. போப்பை யர் சாயர்புரத்திற்குச் சென்று அவ்வூரில் அமர்ந்து திருப் பணி செய்யத் தொடங்கினார். சாயர் என்ற போர்த்துக் கீசிய வணிகரால் நிறுவப் பெற்றமையின் இவ்வூர் சாயர் புரம் எனப் பெயர்பெற்றது.

கிறித்துவக் கலாசாலை

இந்து மதத்தினரைக் கிறித்துவர்களாக மாற்றவேண்டுமாயின் இந்தியரைக் கொண்டே அச் செயலை முடிக்க வேண்டுமென்று எண்ணினார். கிறித்துவக் கலாசாலை ஒன்றை ஏற்படுத்தி இடையன்குடி முதலிய இடங்களில் இருந்து இந்தியக் கிறித்துவப் பிள்ளைகளை அக் கலாசாலைக்குக் கொண்டுபோய்ப் படிக்கவைத்தார். பிள்ளைகளுக்கு நல்ல சாப்பாடு போட்டு நல்ல அடிகொடுத்து நல்ல படிப்புச் சொல்லிக் கொடுத்தார். அப் பள்ளியில் கல்வி பயில்வோர் பிற்காலத்தில் குருமார்களாதற்குத் தக்கவாறு பயிற்றுவிக்கப்பட்டனர். நல்ல சாப்பாடு, நல்ல படிப்பு, நல்ல அடி என்பது சாயர்புரக் கலாசாலையின் சட்டம்.

போப்பையர் இரவும் பகலும் வகுப்புகள் நடத்துவார். இரவு பன்னிரண்டு மணி வரையில்கூட வகுப்புகள் நடக்கும். அவர் மாணவர்களை மிகக் கண்டிப்பாக நடத்தினார். நன்கு படியாத மாணவரை நன்றாக அடிப்பது போப்பையர் வழக்கம். போப்பையருடைய கண்டிப்பைக் குறித்து அவருடைய வரலாற்று நூல்காரர் ஒருவர் கீழ்வருமாறு வரைந்துள்ளார் :

"பள்ளிக்கூடத்துக் கோட்டைக்குள் எண்ணிறந்த புளியமரங்கள் இருந்தன. புளியம்பழங்கள் கொடுக்குமென்று அம்மரங்கள் வைக்கப்பட்டனபோல் தோன்றவில்லை. அம்மரங்கள் செழிப்பாக வளர்ந்திருந்தமையால் நாள்தோறும் மாணவர்களை அடிக்கப் பயன்படுவதற்கு வளார்களை வழங்கிக் கொண்டிருந்தன. புளியமரங்களின் இளங் கொம்புகள் மாணவருக்கு யமன்களாகத் தோன்றின. மாணவர்களின் முதுகுகள் அவ் வளார்களைக் கண்டு நடுங்கின. இளங்கொம்புகளை வழங்குவதற்கே அப் புளிய

மரங்கள் வளர்க்கப்பட்டன என்றும் சொல்லப்பட்டது. சில வகுப்பறைக்குள் நுழைந்தால், உபாத்தியாயர் மேசையில் புத்தகங்கள் மட்டுமன்று; புளிய வளார்களும் வைக்கப்பட்டிருக்கும். சில வகுப்பறைகளில் புளிய மரத்தின் இளம் கொம்புகள் கட்டாகக் கட்டப்பட்டு ஒரு மூலையில் சார்த்தப்பட்டிருக்கும். அவற்றைக் கையிற்பற்றி மாணவர் முதுகில் சுழற்ற வேண்டுமென்று ஆசிரியர் நினைத்தவுடன் அவை அவரது கையைச் சேரும். அவ்விளங் கொம்புகளைக் கொண்டு முதுகில் அடித்தால் அவை வளைந்து வயிற்றையுஞ் சுற்றி இரண்டு அடிகளாக ஏழை மாணவன் உடலில் விழும். அடிபட்ட இடமெல்லாம் செந்நிறமாகி விடும். சில சமயங்களில் உடலினின்றும் செங்குருதி பீறிற்ற ஆசிரியன்மார் அடித்தலும் உண்டு. வகுப்பறைகளில் உபாத்திமார் படித்துக் கொடுக்கும் சத்தம் மட்டுமன்று, புளிய வளார்கள் முதுகுகளில் தாண்டவமாடும் ஓசையும் இடையறாது கேட்கும். மாணவர் கண்ணீர் உகுத்து அழுது நிற்குங் காட்சியையும் காணலாம். அவர்கள் விம்மி விம்மி அழும் ஓசையும் கேட்கும்..................."

சாயர்புரம் கலாசாலையைச் சுற்றிலும் போப்பையர் மதிலை எழுப்பியிருந்தார். பள்ளிக்கூடம் இருக்கும் இடம் இன்று கோட்டை எனப்படுகிறது. போப்பையர் சாயர்புரத்தில் பல கட்டிடங்கள் கட்டினார். போப்பையர் சாயர்புரத்தில் எட்டாண்டுகள் பணி செய்தார். பிறகு அவ்வூரை விட்டு வேறிடஞ் செல்லும்படியாக நேரிட்டது. போப்பையர் சாயர்புரத்தில் கல்வித்தொண்டு மட்டுமன்றிச் சமயத் தொண்டும் செய்தார். சாயர்புரத்தைச் சுற்றியுள்ள ஊர்கட்குஞ் சென்று சமயச் சொற்பொழிவுகள் செய்தார். சுப்பிரமணியபுரம் என்னும் ஊரில் போப்பையர் தெருவில் நின்று சொற்பொழிவு செய்து கொண்டிருந்த

போது ஒரு பெண் மாட்டுச் சாணியைத் தண்ணீரில் கரைத்து ஐயர்மேல் ஊற்றிவிட்டாள். கிறித்துவ சமயத் தொண்டில் அளவு கடந்த ஊக்கங் கொண்ட போப்பையர் அம் மாதின் செய்கையை ஒரு பொருளாக மதிக்கவில்லை. தமது சொற்பொழிவை நிறுத்தாமலே மேலுந் தொடர்ந்து செய்தார். நாளடைவிற் பலரின் மனதை மாற்றிக் கிறித்து வர்களாகச் சேர்த்துவிட்டார்.

தஞ்சையில் தொண்டு

தொடர்ந்து எட்டாண்டுகள் சாயர்புரத்தில் தொண்டு செய்தமையால் போப்பையர் உடல்நலத்தின் பொருட்டுப் புறப்பட்டுத் தாய்நாட்டிற்குச் சென்றார். சிலகாலம் அங்கு தங்கியபின் மேலுந் தொண்டுசெய்வதற்காக இந்தியாவுக்குப் புறப்பட்டு வந்தார். சென்னையில் இருந்த சமயத் தலைவர் போப்பையரைத் தஞ்சைக்கு அனுப்பினர். போப்பையர் தஞ்சையை அடைந்து தொண்டு செய்தார். போப்பையர் தஞ்சையில் இருந்த காலத்தில் தமிழ் நூல்களை மிகுதியாகக் கற்றார். ஆரியங்காவுப் பிள்ளை என்னும் அறிஞரும், இராமநுச கவிராயரும் போப்பையருக்குப் பல நூல்களைப் பாடஞ் சொல்லினர். போப்பையர் தஞ்சையிற் கற்ற கல்வியினால் நல்ல தமிழ்ப்புலவராக மாறினார். தமிழினிடத்திலே போப்பையருக்கு மிகுந்த பற்றுண்டாயது. போப்பையர் சமயப் பணிகளோடு தமிழ் கற்றலையும் மேற்கொண்டு வெற்றி பெற்றபின் நூல் எழுதுஞ் செயலில் ஈடுபட்டார்.

நூல்கள் எழுதுதல்

அக்காலத்தில் மாணவர்கள் பயிலுதற்கு உரைநடையில் இலக்கண நூல்கள் இல்லை. போப்பையர் அக் குறையைப் போக்க எண்ணினார். தொல்காப்பிய இலக்கண நூல், நன்னூல் முதலியவைகளைப் படித்து ஓர் உரைநடை இலக்

கண நூலை இயற்றினர். அஃது எளிய முறையில் அமைந்து தமிழ் இலக்கணங் கற்கும் மாணவர்கட்கு நற்றுணையாகி யது அந்நூல் போப்பையர் இலக்கணம் என்னும் பெயரு டன் விளங்குவதாயிற்று. தமிழ் கற்கும் ஆங்கிலேயர் கட்கு உதவியாகத் 'தமிழ்க் கைப்புத்தகம்' என்னும் நூலை யும், 'தமிழ்-ஆங்கிலம், ஆங்கிலம்-தமிழ்' என்னும் அகர வரிசையுந் தொகுத்தார். அந்நாளில் வரலாற்று நூல் கள் பள்ளிகளில் கற்பிக்கப்படவில்லை. நாட்டு வரலாறு கற் பியாவிடின் கல்வி பயனளிக்காதென்றறிந்த போப், தமிழ் மாணவர்கள் படிப்பதற்குத் தமிழில் வரலாற்று நூல்கள் சில எழுதினர். இதன் பிறகே பள்ளிகளில் நாட்டின் வர லாறும் போதிக்கப்படலாயிற்று. மாணவர்கள் தமிழ் மொழியில் உள்ள பல நூல்களின் சுவையையும் ஒரே நூலால் அறியவேண்டுமென்று எண்ணினர். உடனே 'தனிச் செய்யுட் கலம்பகம்' என்னும் நூல் ஒன்றைத் தொகுத்து முடித்தார். பாடல்களைத் திரட்டித் தொகுக்கும் முறை இதன் பின்னரே வழக்கத்திற்கு வந்தது. பள்ளிக் கூடத்தில் மாணவர்கள் செய்யுள் நூல்களைமட்டுங் கற்றல் போதாது. உரைநடை நூல்களையுங் கற்றல்வேண்டும் என்று முடிவு செய்து மாணவர்கள் கற்கத்தக்க உரை நடை நூல்கள் சிலவற்றையும் எழுதி வெளியிட்டார். பள் ளிக்கூடத்தில் மாணவர்கட்கு உரைநடைப் பாடங்கள் போதிக்கும் வழக்கம் இதன் பிறகே நடைமுறைக்கு வந் தது. இவ்வாறு போப்பையர் நூல்கள் எழுதியும் சமயத் தொண்டு புரிந்துந் தஞ்சையில் எட்டாண்டுகள் கழித்தார்.

உதக மண்டலம்

தஞ்சையில் போப்பையருக்குச் சில தொல்லைகள் உண்டாயின. ஆகவே, அவர் தமது பதவியில் இருந்து

விலகிக்கொண்டார். தஞ்சையில் இருந்து மாட்டு வண்டியிற் குடும்பத்துடன் புறப்பட்டு இருபத்து நான்கு நாட்கள் பயணஞ் செய்து உதக மண்டலம் போய்ச் சேர்ந்தார். அங்கு அப்போது ஐரோப்பியர் சிலர் இருந்தனர். அவர்களின் மக்கட்குப் பாடசாலை ஒன்றை ஏற்படுத்தி அதில் ஆசிரியராக அமர்ந்து பணியாற்றினர். பல பொது நல வேலைகளினும் ஈடுபட்டுப் பெருந்தொண்டு செய்தார். பெங்களூர் முதலிய இடங்களும் போப்பையருடைய தொண்டைப்பெற்றன.

தாய் நாடடைதல்

இந்தியாவில் ஏறக்குறைய நாற்பத்தைந்தாண்டுகள் தொண்டு புரிந்த போப்பையர் தமது அறுபத்திரண்டாவது அகவையில் 1882-ஆம் ஆண்டில் தம் குடும்பத்தாருடன் இந்தியாவை விட்டுப் புறப்பட்டார். போப்பையர் தமிழ் நாட்டை விட்டுச் செல்வதற்கு மனம் விரும்பினர் அல்லர். நாற்பது யாண்டுகட்குமேல் இந்தியாவில் தமிழ் நாட்டில் தங்கியிருந்த அவருக்குத் தமிழ்நாட்டுப் பழக்க வழக்கங்கள் நன்கு பிடித்து விட்டன. ஆயினும் அவரது உடல் நலம் கெட்டுப் போயிற்று. பிறந்த நாட்டிற்குச் சென்றால் தான் உடல் நலம் சீரடையும் என்னும் நிலைமை யேற்பட்டு விட்டது.

அங்குந் தொண்டு

தாய்நாட்டை யடைந்த போப்பையர் ஓய்வு பெற்று விடவில்லை. அங்குந் தமிழ்த் தொண்டு செய்யத் தொடங்கினர். 1885-ஆம் ஆண்டில் ஆக்ஸ்பர்ட் பல்கலைக் கழகத்தார் தமது பல்கலைக் கழகத்தில் ஐயர் பேராசிரியராக அமர்ந்து பணி புரிதல் வேண்டும் என்று கேட்டுக்கொண்

டார்கள். போப்பையா அவர்களுடைய வேண்டுகோட்கிணங்கினார். இருபத்து மூன்று ஆண்டுகள் மேற்படி பல்கலைக் கழகத்தில் தமிழ் தெலுங்கு ஆகியமொழிகள் பயில்வாருக்குப் பேராசிரியராக இருந்தார்

ஆசிரியராக இருந்ததோடு மட்டுமன்றித் திருக்குறள், நாலடியார், சிவஞான போதம், திருவாசகம் ஆகிய நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து இந்நூல்களின் சிறப்பையும் தமிழ்நாட்டின் பண்பாட்டையும் ஆங்கில நாட்டாரும் தெரிந்து கொள்ளுமாறு செய்தார். அவர் அங்கு செய்த சமயச்சொற்பொழிவுகளும், கலைச்சொற்பொழிவுகளும் பல. அவர் தம் இறுதிக்காலம் வரையில் ஆக்ஸ்பர்ட் பல்கலைக்கழகத்தில் தொண்டு செய்தார்.

### இறுதி

1908-ஆம் ஆண்டில் பிப்ரவரித் திங்களில் ஒரு நாள் உலாவச் சென்றார். திரும்பி வரும்போது உடலில் சிறிது நோய் உண்டாயிற்று இரண்டொரு நாட்கள் நோயுடன் இருந்து தமது தொண்ணூறாவது அகவையில் காலமானார். அவருடைய விருப்பப்படி அவருடைய கல்லறையில் அவர் 'ஒரு தமிழ் மாணவர்' என்று எழுதப்பட்டது.

